# ஆன்மீக அனுபவங்களும் கடவுள் காட்சியும்

**"Spiritual Experiences"**





ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# ஆன்மீக அனுபவங்களும் கடவுள் காட்சியும்


அருளியது

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம்

பேராசிரியர் டி.கே. நாராயணன், M.Sc., M.Phil.,








வெளியிடுவோர்

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,

சிவானந்தா ஆஸ்ரமம்

சுவாமி சிவானந்தா சாலை

இராசிபுரம் :: சேலம் மாவட்டம்

விலை] 1996 [ரூ. 30.00

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமஹாராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப் பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ்நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ்மொழி பெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

கடவுள் காட்சியைப் பற்றி குருதேவ் சிவானந்தா ஆங்கிலத்தில் எழுதிய "Spiritual Experiences" என்ற நூலை பேராசிரியர் திரு.T.K.நாராயணன் M.Sc., M.Phil., அவர்கள் "ஆன்மீக அனுபவங்களும் கடவுள் காட்சியும்" என்று மிக அற்புதமாக தூய எளிய இனிய தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் மதுரை பிரின்ட்ஷாப் நிறுவனத்தினர் டைப்செட் செய்து கொடுத்துள்ளனர். சிவகாசி ஓரியண்ட் லித்தோ பிரஸ்ஸார் மிகச் சிறந்த முறையில் அழகாக அச்சடித்துக்கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கிய சென்னை அன்பர் திரு. K.C. சந்திரன், B.E., அவர்கள் இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள் இந்த ஆன்மீகப் போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

சுவாமி சிதானந்தா

# பொருளடக்கம்

அத்யாயம் 4 :ஸமாதி அல்லது பர உணர்வு நிலை



40. சில ஸமாதி நிலை அனுபவங்கள்

## அத்யாயம் 5 : சில யோக அனுபவங்கள்



## அத்யாயம் 6 : குண்டலினி சக்தி



## அத்யாயம் 7 : மனோ சக்திகள்

## அத்யாயம் 8 : ஆன்மீக முன்னேற்றத்தின் அறிகுறிகள்



## அத்யாயம் 9 : ஞானயோகியின் அனுபவங்கள்



## அத்யாயம் 10 : முக்தி நிலை

## அத்யாயம் 11 : சில தென்னிந்திய யோகிகளின் அனுபவங்கள்



## அத்யாயம் 12 : சில கிறிஸ்தவ யோகிகளின் அனுபவங்கள்

அத்யாயம் 1

# உணர்வின் தன்மையும் நிலைகளும்

## 1. உணர்வின் தன்மை

உணர்வின் பொருளை விளக்குவது மிகவும் கடினம். வார்த்தைகளும் மொழிகளும் அபூர்ணமானவை. உங்கள் எண்ணங்களையும் சிந்தனைகளையும் அவை சரியாக விளக்கமாட்டா.

பல வகை உணர்வு உண்டு. பௌதிக உணர்வு, சூக்ஷ்ம உணர்வு, மானசிக உணர்வு, மனம் கடந்த அல்லது கீழ் ப்ராகாம்ய அல்லது ப்ரக்ஞை உணர்வு, பர உணர்வு, மேல் உணர்வு, உள்ளுணர்வு, உணர்வற்ற நிலை, கனவுணர்வு, பரம் கடந்த உணர்வு, இரட்டை உணர்வு, பன்மை உணர்வு, உயர்நிலை ப்ராகாம்யம், விராட் உணர்வு, ஹிரண்ய கர்ப உணர்வு, தெய்வீக அல்லது புருஷோத்தம உணர்வு, கடைசியாக அனைத்திற்கும் மேலான நிர்குண பரப்பிரம்ம அல்லது பூரண உணர்வு.

வேதாந்திகளது ஜாக்ரதா அவஸ்தை எனப்படும் விழிப்புநிலையில் உங்களுக்கு இந்த பௌதிக உலகைப் பற்றிய உணர்வு உள்ளது. நீங்கள் பார்க்கிறீர்கள், உணர்கிறீர்கள், எண்ணுகிறீர்கள், அறிகிறீர்கள், தீர்மானிக்கிறீர்கள், முயற்சி செய்கிறீர்கள். பார்த்தல், அறிதல், உணர்தல், தெரிதல், தெளிதல் எல்லாம் சேர்ந்து ப்ரயத்னம் ஆகிறது. இது பௌதிக உணர்வு.

பூத உடலைக் கடந்து சூக்ஷ்ம சரீரத்துடன் சூக்ஷ்ம உலகில் செயல்படுகையில் உங்களுக்கு சூக்ஷ்ம உணர்வு ஏற்படும் சூக்ஷ்மலோக வாசிகளுடன் நீங்கள் பேசிச் சஞ்சரிப்பீர்கள்.

மனோலோகத்தில் மானசிக உடலுடன் நீங்கள் செயல்படுகையில் உங்களுக்கு மனஉணர்வு இருக்கும். இப்பொழுது நீங்கள் உங்கள் பூத உடலுடன் உங்களை ஒன்றுபடுத்திக் கொள்வதுபோல், மனத்துடன் நீங்கள் உங்களை ஒன்றுபடுத்திக் கொள்வீர்கள். தொலை கேட்டல், தொலை உணர்வு, மனத்தை உணர்தல், தொலைத் தொடர்பு, பிறர் எண்ணத்தை அறிதல் போன்ற மனோசித்துக்கள் உங்களிடம் வரும். மானசிக வஸ்துக்களுடன் நீங்கள் உரையாடுவீர்கள். இங்கே மொழி எல்லாம் ஒன்று தான். நீங்கள் மனத்திற்கு அப்பால் செல்லுகையில் உங்களை நீங்கள் உங்களது தனித்த காரண சரீரத்துடன் ஒன்றுபடுத்திக் காண்பீர்கள். உங்களிடம் கீழ் திவ்ய திருஷ்டி நிலவும். இங்கு உங்களிடம் ஒரு பரந்த உணர்வு இருக்கும். மிகவும் சூக்ஷ்மமான ஆகாய வெளி உடலுடன் ஆகாய வெளி உலகில் செயல்படுவீர்கள். அபரிமிதமான ஆற்றல்கள் உங்களிடம் நிலவும். தெய்வீக உணர்வுடன் நீங்கள் ஒன்றியிருப்பீர்கள். உங்களுக்கும் பிரம்மனுக்கும் இடையில் உள்ள திரை இப்பொழுது மிகமிக லேசானது. சிறிது முயற்சி செய்தால் நீங்கள் பிரம்மனுக்குள் எட்டிப் பார்க்கலாம். பிரம்மானுபவத்தின் நிலையையும் பெறலாம். இதுதான் பிரக்ஞா உணர்வு அல்லது கீழ்ப்ராகாம்யம் எனப்படுகிறது. ஸத்யலோகம் அல்லது காரண சரீரத்துடன் கூடிய ஹிரண்ய கர்ப லோகவாசியாக நீங்கள் விளங்குவீர்கள். இப்பொழுது உங்கள் பார்வையை நீங்கள் பரந்ததாக்கினால் தெய்வீக உணர்வுடன் நீங்கள் ஒன்றிவிடலாம். முழு பிரம்மாண்ட உணர்வைப் பெறுவீர்கள். ஆதி சக்தி அல்லது பராப்ரகிருதி அல்லது அவ்யக்தம் எனப்படும் புருஷோத்தம உணர்வு இது ஆகும். இது மேல் ப்ராகாம்யம் ஆகும்.

ஆதி சக்தி திரையையும் நீங்கள் உதறிவிடுகையில், வாழ்க்கையின் மிக உயர்ந்த இறுதி இலட்சியமான

கைவல்யம் எனப்படும் தூய நிர்க்குண பரப்பிரம்ம ஆனந்த உணர்வுடன் ஒன்றிவிடுவீர்கள். அந்த நிலையில் வெகு நேரம் நீடித்து இருப்பது அரிது.

ஹிரண்யகர்பனுக்கும் ஈசுவரனுக்குமிடையில் அவ்யக்தம் எனும் திரை உள்ளது.

ஈசுவரன் மாயையின் பிரதிபிம்பமே எனக் கருதும் ஒரு வகை சிந்தனையாளர் உளர். இது 'ஆபாஸவாதம்' அல்லது பிரதிபிம்பக் கொள்கை எனப்படும். "இருப்பது ஒன்றே என்றால் அதற்கு எப்படி பிரதிபிம்பம் இருக்க முடியும்? மேலும் ஈசுவரன் மாயையில் பிரதிபிம்பம் எனில் மாயையை அவரால் எப்படிக் கட்டுப்படுத்த முடியும்? இது சரியல்ல", என்று மறுப்பாளர் கூறுகிறார்.

பிரம்மனின் ஸ்வரூபலட்சணம் சச்சிதானந்தம் சர்வ வியாபகத்வம், ஸர்வக்ஞத்வத்துடன் கூடிய ஈசுவரனே பிரம்மனின் தடஸ்தலக்ஷணம் ஆகும்.

பிரம்மனின் தடஸ்தலக்ஷணத்தில் ஈசுவரன் நிர்குண பிரம்மன் மற்றும் அகில பிரபஞ்ச உணர்வையும் பெற்றிருக்கும். ஈண்டு சகுண பிரம்மன் தூய நிர்குண பிரம்மனுடன் ஒன்றானது இது அவச்சேதவாதமாகும். இது உபாதிவாதமாகும்.

இருப்பது நிர்குண பிரம்மம் ஒன்றே. பக்தர்களின் பக்திமயமான தியானத்திற்காக சகுண பிரம்மன் ஒரு வெறும் தோற்றமேயாகும்.

## 2. நான்கு வகை உணர்வு

உணர்வு, உள்ளுணர்வு, மேலுணர்வு, இரட்டை உணர்வு என உணர்வு நால்வகைப்படும்.

உணர்வு என்றால் ப்ரக்ஞை எனப் பொருள்படும். பௌதிக உணர்வு உண்டு. ஒருவனுக்கு தன் உடல் மற்றும் சுற்றுச் சூழலைப் பற்றிய உணர்வு இருக்கிறது. உலகில் கட்புலனாகும் பொருள்கள் இதில் அடங்கும். மன உணர்வில் ஒருவன் மனிதன் செயல்முறைகள், கருத்துக்கள், எண்ணங்கள் மற்றும் உணர்ச்சிகளை உணருகிறான். வெகு சிலருக்கே மன உணர்வு இருக்கும். அவர்களிடம் உடல் உணர்வு தான் நிலவும். கூரிய அறிவு உள்ளவர்களே, உள இயலைப் பற்றி அறிந்தவர்கள். சிறிது தியானம், மன ஒருமைப்பாடு மற்றும் விசாரம் செய்பவர்களே மன உணர்வைப் பற்றி அறிய இயலும்.

அடுத்து வருவது அனைத்து சம்ஸ்காரங்களும் தொகுத்து வைக்கப்பட்ட உள்ளுணர்வு ஆகும். அது ஓய்வு அறைக்கு நிகர். உள்ளுணர்விலிருந்து நினைவின் மூலம் எண்ணங்கள் மனதின் மேல்மட்டமான உணர்விற்கு வருகின்றன. உள்ளுணர்வு சித்தம் எனப்படுகிறது. வேதாந்தத்தில் 'சித்' என்பது தூய உணர்வு, பூரண உணர்வு, பிரம்ம உணர்வு, மேலாம் உணர்வைக் குறிக்கிறது. 'சித்தம்' என்பது உள்ளுணர்வு. 'சித்' என்பது பரப்பிரம்மன். நீங்கள் ஒரு செயலைச் செய்கின்றீர்கள். அந்த அனுபவம் அடிமனத்திற்குப் போகிறது. புற உலகிலிருந்து ஒரு தூண்டுதல் வரும் வரை அல்லது நினைவின் மூலம் உள்ளேயிருந்து ஒரு தூண்டுதல் ஏற்படும் வரை அது அங்கேயே இருக்கிறது. பிறகு எண்ணங்களும் சம்ஸ்காரங்களும் மனதின் மேல்மட்டத்திற்கு வருகின்றன. வாஸனை ஸம்ஸ்காரமாகவும், ஸம்ஸ்காரம் வாஸனையாகவும் ஆகின்றன. செயல் ஒரு பதிவை ஏற்படுத்துகிறது. பதிவு அந்தச் செயலை மீண்டும் செய்ய உங்களைத் தூண்டுகிறது. இது ஒரு விஷச் சுழல். இதற்கு முடிவே கிடையாது. உள்ளுணர்வாகிய மனத்தில் பதிந்த ஸம்ஸ்காரங்கள் தான் உங்களை திரும்பத் திரும்ப மறுபிறப்பு எடுக்க வைக்கின்றன. இந்த ஸம்ஸ்காரங்கள் பிரம்ம ஞானம்

ஒன்றினால் மட்டுமே அழிக்கப்படவல்லவை. அப்பொழுதுதான் நீங்கள் பிறப்பிறப்பிலிருந்து விடுபட்டு ஜீவன் முக்தன் அல்லது முக்த புருஷராக ஆகின்றீர்கள். உள்ளுணர்வு மனத்தில் ஸம்ஸ்காரங்களை ஏற்படுத்துவதில் நீங்கள் மிகவும் கவனமாயிருத்தல் வேண்டும். உயர்ந்த தெய்வீக எண்ணங்களைக் கொண்டு விளங்குங்கள். நல்ல காரியங்களைச் செய்யுங்கள். ஜபம், கீர்த்தனை செய்யுங்கள். இது நல்ல ஸம்ஸ்காரங்களை ஏற்படுத்தி தீய எண்ணங்களை இல்லாததாக்கும். நல்லவர்களாயிருங்கள். நல்லதைச் செய்யுங்கள். தியானத்தைப் பயிலுங்கள். அடிமனத்தில் நீங்கள் நல்ல ஸம்ஸ்காரங்களை ஏற்படுத்தலாம்.

அதன்பின் மேலுணர்வு நிலை உள்ளது. நாமரூபங்கள் அற்ற, இருளோ ஒளியோ அற்ற, கிழக்கோ மேற்கோ அற்ற, புலப்படும் பொருள்கள் அற்ற பரப்பிரம்மன் அது. அது தூய பூரண உணர்வு. வாழ்வின் இலட்சியம் மேலுணர்வு அல்லது துரீய நிலையை அடைவதேயாகும். அது நிர்விகல்ப ஸமாதி அல்லது அஸம்ப்ரக்ஞாத ஸமாதி எனப்படுகிறது. நாம் உடல், மற்றும் மனத்தைக் கடந்து தியானத்தின் மூலம் மேலுணர்வு நிலையை அடைய வேண்டும். சாதன சதுஷ்டயம் எனப்படும் நால்வகை சாதனங்களைப் பெற்ற பின் ஒருவன் சிரவணம், மனனம், நிதித்யாஸனத்தைப் பயிலவேண்டும். பின் அவனுக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் கிட்டும்.

ராஜயோகத்தின் பிரகாரம் மேலுணர்வு நிலைக்குக் கீழே பலதரப்பட்ட ஸவிகல்ப ஸமாதி உள்ளது. வேதாந்தத்திலும் ஸவிகல்ப ஸமாதிகள் உள்ளன. ஸவிதர்க்க, நிர்விதர்க்க, ஸவிசார, நிர்விசார, ஸானந்த, அஸ்மித என்பவை ராஜயோகத்தில் உள்ள ஸவிகல்ப ஸமாதிகளாகும். அந்தர் த்ருச்யானுவித், அந்தர் சப்தானுவித், பாஹ்யத்ருச்யானுவித், பாஹ்ய சப்தானுவித் ஆகியவை வேதாந்தத்தின் பிரகாரம் உள்ள ஸவிகல்பஸமாதிகளாகும். அறிபவன், அறிவு,

அறியப்படுவது, பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படுவது என்ற திரிபுடிகள் அல்லது மும்மைகள் உண்டு. இந்த நிலைகளுக்கு மேல் அஸம்ப்ரக்ஞாத ஸமாதி, நிர்விகல்ப ஸமாதி அல்லது நிர் பீஜ ஸமாதி என்பது உண்டு. அந்த நிலையில் விருத்திகளோ, வாஸனைகளோ, கற்பனையோ, ஸங்கல்பமோ கிடையாது. இருப்பது தூய உணர்வு மட்டுமே. அதுவே நமது இலட்சியம். அதுவே பரப்பிரம்மன்.

இரட்டை உணர்வு நிலையில், முனிவர் தமது சொரூபத்தில் பேரானந்த நிலையை அனுபவித்துக் கொண்டு, அதே சமயத்தில் ராஜா ஜனகரைப் போல இவ்வுலகத்திலும் செயல்புரிகிறார். அவருக்கு இரட்டை உணர்வு உண்டு. தமது யதார்த்தமான தூய பிரம்ம நிலையை மறவாமல், உலக உணர்வையும் அதே சமயத்தில் அவர் பெற்று விளங்குகிறார். காகமானது ஒரே கண்ணுடன் இங்குமங்கும் இருபுறமும் பார்ப்பதுபோல, ஜீவன் முக்தர் தமது சொந்த சொரூபத்தில் இருந்து கொண்டே உலகத்திற்குத் தொண்டு செய்வதற்காக தமது மனத்தைப் பயன்படுத்துகிறார். விதேக முக்தநிலையில் உள்ளது போல மனமானது பூரணமாக இல்லாதாக்கப்பட்டால், அவரால் இவ்வுலகில் செயல்படமுடியாது. அந்த நிலையில் சாதகர்களுக்குப் போதிப்பதற்கு நம்மிடையே ஜீவன் முக்தர்கள் இருக்கமாட்டார்கள். அவித்தையின் ஒரு சிறு அம்சம் எஞ்சியுள்ளது. லேச அவித்யா எனப்படும் ஸாத்விக வாஸனை எஞ்சியுள்ளது. அதில் மனம் இல்லாதாகும் ஸ்வரூப மனோநாசம் உண்டு. ஜீவன் முக்தரிடம் மனம் முழுவதும் இல்லாதாய்விடுகிறது. ரஜஸும் தமஸும் அழிந்து ஸாத்விக அஹங்காரம் எஞ்சியிருக்கிறது இதன் மூலமாகத் தான் அவர் உலகைத் தன்னுள் காண்கிறார். விதேக முக்தரிடம் மனம் முழுவதுமே இல்லாதாகிறது. அவர் பூரணமாக பரப்பிரம்மனில் லயித்துவிடுகிறார்.

சாதனையின் மூலம் சாதகன் பிரம்மாகார விருத்தியை எழுப்புகிறார். "நான் அகண்ட ஏக ரஸ சின்மாத்ர பிரம்மன். (நான் பிரிக்க முடியாத ஒருமித்த சாரம்). நான் நித்திய சுத்த சொரூபன். நான் நித்ய போத சொரூபன். நான் நித்திய திருப்த சொரூபன். (நான் யாண்டும் தூய்மையானவன், தூய உணர்வுமயம், நித்திய திருப்தன்) நான் ஸச்சிதானந்த சொரூபன் (நான் இருப்பு- உணர்வு- ஆனந்த வடிவினன்)" என்று அவன் எண்ணுகிறான். இந்த வார்த்தைகளில் அசிந்த்ய சக்தி, அனந்த சக்தி (கற்பனை கடந்த ஆற்றல், அபரிமிதமான ஆற்றல்) உள்ளது. இந்த எண்ணங்கள் அனைத்து விஷயாகார விருத்திகளையும் அழித்து பிரம்மாகார விருத்தியை வளர்க்கின்றன. பிரம்ம சிந்தனையே எஞ்சுகிறது. இந்த பிரம்மாகார விருத்தி ஆதி அவித்தையை அழித்துவிடுகிறது. சாதகன் தனது இயல்பான சொரூபத்தில் லயிக்கிறான்.

மேற்கத்திய தத்துவத்தில் அவர்கள் உள்ளுணர்வு (Intuition) என்ற வார்த்தையைப் பயன்படுத்தியுள்ளனர். இந்த 'உள்ளுணர்வு' மேற்கத்திய தத்துவ அறிஞர்கள் அறிந்தது. கிழக்கத்திய தத்துவ அறிஞர்கள் அறிந்த கருத்திலிருந்து வேறுபட்டதாகும். அவர்களது உள்ளுணர்வானது கீழைத் தத்துவ அறிஞர்களின் உள்ளுணர்வு அல்ல. உள்ளுணர்வு என்பது ஸஞ்ஜயனும், அர்ஜுனனும் பெற்றிருந்ததைப் போன்ற ஒரு மேலான ஞானதிருஷ்டியாகும். அது ஒரு உயர்ஞானம். சில சமயங்களில் பூரண அனுபவமான பரப்பிரம்மனையே அது குறிக்கிறது. உள்ளுணர்வு பகுத்தறிவுக்கு விரோதமானது அல்ல. அது பகுத்தறிவை நிறைவு செய்கிறது. அது பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது. அது பரப்பிரம்மனைப் பற்றிய அறிவுக்கான வாயிலாகும்.

அர்ஜுனன் விசுவரூப தரிசனம் எனப்படும் பிரபஞ்சக் காட்சியைப் பெற்றான். பிரபஞ்ச உணர்விற்கு மேல்

பிரபஞ்சம் கடந்த நிலை உள்ளது. ஈசுவரனிடம் பிரபஞ்ச உணர்வும், பிரபஞ்சம் கடந்த உணர்வும் உண்டு. ஸத்யலோகம் சென்று ஹிரண்ய கர்பனுடன் வசிக்கும் பக்தர்கள் பிரபஞ்ச உணர்வை அனுபவிக்கின்றனர். இந்த உலகத்தின் படைப்பு, தன்மாத்திரைகள், மனம், மஹத் போன்றவற்றின் முழு அறிவும் அவர்களுக்கு உண்டு. பிரபஞ்ச அனுபவம் அவர்களுக்கு உண்டு. அதுதான் பிரபஞ்ச உணர்வு எனப்படுகிறது.

உணர்வின் மிக உயர்ந்த நிலையே துரீயம் எனப்படுகிறது. சில ஜீவன்முக்தர்களுக்கு இந்த உலகம் ஒரு கனவைப் போல தோன்றுகிறது. சில ஜீவன் முக்தர்களுக்கு அவர்களிடம் உள்ள ஸாத்விக அஹங்காரத்திற்கு ஏற்ப அது ஆழ்ந்த உறக்கம் போலத் தோன்றுகிறது. படிப்படியாக முனிவர் ஞானத்தின். மிக மேலான படியை அடைகிறார். இறுதி நிலையில் அவருக்கு உலக அறிவே இருக்காது. அவரால் தானாகச் சாப்பிடமுடியாது. அவருக்கு யாராவது ஊட்டிவிட வேண்டும். கும்பகோணம் மௌனி சுவாமி அந்த நிலையில் இருந்தார். அகல்கோட் சுவாமிஜியும் இந்த அனுபவத்தைப் பெற்றார். அவர்களுக்கு உலக அறிவே இருக்காது. தங்களுக்குள் அவர்கள் பூரணமாக லயித்திருந்தார்கள். உலக உணர்விலிருந்து அவர்கள் தங்களைப் பூரணமாக உள்ளிழுத்துக் கொண்டவர்கள். ஜனகர் போன்ற முனிவர்களுக்கு ஒரு சிறிது உலக அனுபவம் இருந்தது. அதனால்தான் ஜனகரால் அரசாட்சி செய்ய முடிந்தது. ஸமாதி ஞானிகள், வ்யவஹார ஞானிகள் என ஞானியர் இருவகைப்படுவர். சிறிது உலக அறிவுடன் இவ்வுலகில் செயல்படும் முனிவர்கள் வ்யவஹார ஞானிகள் எனப்படுகின்றனர். ஸமாதியில் லயித்த முனிவர்களால் இந்த உலக க்ஷேமத்திற்காக செயல்படமுடியாது. அவர்கள் ஸமாதி ஞானிகள் எனப்படுகின்றனர்.

எனவே நாம் பரப்பிரம்மனில் லயித்து, பரமானந்தத்தை அனுபவித்து, உலகிற்கு மகிழ்ச்சியையும் இன்பத்தையும் தந்து லோக க்ஷேமத்திற்காகப் பாடுபடுவோமாக. ஸாதனை, தியானம், விவேகம், இடைவிடாத அப்யாஸம், மற்றும் வைராக்யத்தால் நீங்களெல்லோரும் இந்தப் பிறவியிலேயே ஜீவன் முக்தர்களாக ஆவீர்களாக.

## 8. உணர்வின் வகைகள்

சிஷ்யன் கேட்கிறான் : "ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரீயம் என்ற உணர்வின் நான்கு வகைகளும் ஒன்றுக்கொன்று வேறுபட்டவையாகத் தெரிகின்றனவே. ஏனெனில் அவற்றில் ஒன்றைப் பற்றி தெரிகையில் ஜீவாத்மன் மற்றவற்றைப் பற்றி அறியமுடிவதில்லை அல்லவா! அவற்றின் இடையேயான பொதுத்தொடர்பு ஜீவாத்மன்தான். இந்த நான்கும் ஒரே சமயத்தில் சேர்ந்தே இருக்கின்றனவா? அவற்றில் ஒன்றை மட்டுமே ஒரு சமயத்தில் ஜீவன் உணர்கின்றானா? அப்படியானால் ஏன் அப்படி?

பண்டைய ரிஷிகளால் நமது உணர்வில் ஏற்படுத்தப்பட்ட இந்தப் பாகுபாடு, உணர்வு, தன் உணர்வு, உள்ளுணர்வு, உணர்வின்மை, மேலுணர்வு என்ற உணர்வின் நவீனப் பாகுபாட்டுடன் தொடர்புடையதா?

இவற்றில் எந்தப் பிரிவு அதிகம் விஞ்ஞானபூர்வமானது, அனுபவத்திற்கு ஒத்தது?"

குரு பதிலளிக்கிறார் : இந்த அவஸ்தைகள் வெளிப்படையாக வேறுபட்டவை போலத் தோன்றினாலும் உண்மையில் அவை அப்படியல்ல. துரீயத்தில் மற்ற கீழான மூன்று நிலைகளும் அடங்கியுள்ளன, தன்மயமாயுள்ளன. ஏனெனில் துரீயம் அவற்றை தூய அறிவு ஒளி உணர்வாக ஆக்கிவிடுகிறது. அவை துரீயத்தில் அடங்கிவிடுகின்றன. அதே வேளையில் துரீயம் அவற்றைக் கடந்தும் இருக்கிறது.

இருப்பினும் இந்த நான்கு அவஸ்தைகளின் பொதுத் தொடர்பு ஜீவாத்மன் அல்ல, ஆனால் துரீயம்தான் பொதுத் தொடர்பு. அனைத்திற்கும் ஆதாரமான அடிப்படை உணர்வான ஸ்வரூப சைதன்யமே அது. நான்காவதாகச் சொல்லப்படினும் துரீயம் என்பது ஒரு நிலை அல்ல. துரீயம் பிரம்மமே. அது அமைதி, ஆனந்தத்தின் உருவகம். ஏற்கனவே சொல்லப்பட்டது போல ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி நிலைகளுக்கு அதுவே ஆதாரம். அம் மூன்று நிலைகளையும் அது ஊடுருவியுள்ளது. அது பூரண நிலை. எனவே அது அனைத்தையும் கடந்தது. அது ஸ்வத ஸித்த அல்லது தன்னைத் தானே நிரூபிக்கவல்லது. எனவே சாதாரணப் பொருளில் சொல்லப்படும் 'உணர்வு' அது அல்ல. மற்ற மூன்று நிலைகளையும் பிரதிபலிக்கும் மேலான சாரமே அது.

ஜீவனின் அனுபவத்தைப் பொறுத்தமட்டில் அவற்றில் ஒன்றை மட்டுமே குறிப்பிட்டதொரு சமயத்தில் அவன் அனுபவிக்கிறான் என்பது உண்மைதான். மூன்று நிலைகளும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. ஒன்று செயல்படுகையில் மற்றது மறைக்கப்படுகிறது. உணர்வு மையத்தை ஒரு குறிப்பிட்ட குணம் மட்டுமே மிகுதியாக ஆக்கிரமித்து ஏனைய இரண்டையும் மறைத்துவிடுகின்றன. துரீயம் உதித்தவுடன் இந்த வேற்றுமை மறைந்துவிடுகிறது. நீங்கள் இப்பொழுது பிரபஞ்ச உணர்விற்கு உயர்த்தப்படுகின்றீர்கள். ஜீவாத்ம உணர்வு விஸ்வாத்ம உணர்வால் இடம் பெயர்த்தப்படுகிறது.

உணர்வு, உள்ளுணர்வு, உணர்வின்மை, மேலுணர்வு என்பவை சில விஷயங்களில் ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரிய நிலைகளுக்கு சமமானவைதான். ஆனால் அவை ஒன்றல்ல. உபநிஷதங்களில் கூறப்பட்ட ஜாக்ரத் நிலை உளவியலார் கூறும் உணர்வு நிலையைக் காட்டிலும்

அதிகமான தத்துவார்த்தம் அடங்கியதாகும். ஸ்வப்ன, ஸுஷுப்தி நிலைகளும் இப்படியே. மன உணர்வு மனத்தின் செயல்பாடுகளால் பிரதிபலிக்கப்படும் நிலையான ஜீவனின் ஜாக்கிரத நிலையை மட்டுமே நமது பண்டை ஹிந்துரிஷிகள் ஜாக்கிரத உணர்வால் குறிப்பிடவில்லை. ஜாக்கிரத நிலையில் ஏற்பட்ட மனப்பதிவுகளின் விளைவாக புலன்களிலிருந்து விடுபட்டு மனம் தனியாகச் செயல்படும் நிலையே ஸ்வப்னநிலை ஆகும். ஸுஷுப்தி நிலை என்பது ஒரு தனித்த பூரண உணர்வு ஆகாது. அது மனத்தின் செயல்பாடுகளெல்லாம் திரட்டப்பட்டு பரமாத்மன் பிரதிபலிக்கப்படாததொரு தமோநிலையாகும். நமது பண்டைய ரிஷிகள் மற்ற மூன்று நிலைகளுக்கு ஆதாரமாக துரீய நிலையைக் கருதினர். ஆனால் தற்காலத்திய நவீன உள இயலார்கள் பகுத்தறிவால் அறியப்படும் மனத்தின் செயல்பாட்டை மட்டுமே அறிகின்றனர். இது தான் உபநிடதங்களில் காணப்படும் புராதனப் பிரிவிற்கும் தற்கால உள இயலாரின் பிரிவிற்குமிடையே உள்ள வித்தியாசமாகும். மேலுணர்வை துரீயத்துடன் ஒப்பிடலாம். மனத்தின் மேல் ஒலியான அக அறிவுடன், அதாவது துரீயத்துக்கு வழிவகுக்கும் நிலையுடன் இதை ஒப்பிடக் கூடாது.

பண்டைய ஆன்மீக விஞ்ஞானிகளது பாகுபாட்டு முறையே சீரிய முறை என்பதை நாம் ஒத்துக் கொண்டாக வேண்டும். ஏனெனில் அது வெறும் ஆராய்ச்சியின் முடிவு அல்ல. மாறாக ஞானியால் புலன் கடந்ததொரு நேரடி அனுபவத்தால் விளைந்த உறுதி மொழியாகும் அது.

இந்த மிக உயர்ந்த சூக்ஷ்மமான விஷயத்தில் இறுதி ஒளி சொந்த அனுபவத்தின் வாயிலாக மட்டுமே வந்தாக வேண்டும். பூரண அகத்துறவு, ஒட்டுமொத்த தூய்மை, சிரத்தையுடன் கூடிய சாதனையும் தியானமுமே

இத்தகையதொரு உணர்வை அடைவதற்கான வழியாகும். சாதகன் தனது சாதனையில் மிகவும் உறுதியாகவும் விழிப்புடனும் இருத்தல் வேண்டும். ஆன்மீக மார்க்கத்தில் பொறுமை மற்றும் தொடர்ந்த சாதனையால் மட்டுமே இறுதி இலட்சியத்தை அடைய முடியும்.

## 4. துரீய நிலை

சீடன் கேட்கிறான் : மாண்டூக்ய உபநிஷதம் நமது உணர்வின் பாகுபாடுகளான நான்கு நிலைகளை விஞ்ஞான பூர்வமாக ஆராய்கிறது. அவற்றில் மூன்றினைப் பற்றி நமக்கு நன்கு தெரியும். 'பிரபஞ்சோபசமம்' எனப்படும் துரீயத்தைப் பற்றித்தான் கேள்வி எழுகிறது.

வீட்டில் பல்வேறு பிரச்சினைகளுக்கிடையேயான நமது உணர்வானது இச்சா சக்தியால் பூரணப் பொருளுடன் ஒன்றிக்கச் செயல்படுகையில் தன்னையே இழந்து கேரண்ட சம்ஹிதை குறிப்பிடுவதுபோல் தொடர்ந்த உணர்வுகடந்த நிலையில் இருக்கக்கூடாதா? ஆனால் நமது உணர்வு அதனது பௌதிக ஆதாரமான மனித மூளை மையத்திலிருந்து பூரணமாக விடுபட்டது இல்லை என்பதால், சிறிது நேரத்திற்குப் பிறகு தாற்காலிகமாக அது விடுபட்டிருந்த பன்மை நிலையில் அதைக் காண்கிறது.

உணர்வை மீண்டும் திரும்பக் கொண்டு வர விரும்பாமலிருத்தல், சாதகனைப் பொறுத்து அமையும். அப்பொழுது துரீயமே இறுதி நிலை. அந்த நிலையில் உணர்வு உடலை வெறும் ஒரு கூடாக விட்டுவிட்டு திரும்பவும் உடலுக்குத் திரும்பாமல் போய்விடும்.

இப்பொழுது கேள்வி இதுதான்.

துரீயத்திலிருந்து உணர்வைத் திரும்பப் பெற தீர்மானிப்பது தனிநபரா அல்லது பிரபஞ்ச இச்சா சக்தியா?

குரு பதில் சொல்கிறார் : துரீயத்தைப் பற்றிய கேள்வியில் 'பிரபஞ்சோபசமம்' என்ற வார்த்தை பயன்படுத்தப் பட்டிருக்கிறது. இந்த கேள்வியை முற்றிலும் மாறுபட்டதொரு கோணத்திலிருந்து நாம் பார்க்கவேண்டும். இது சாதாரணமாக பன்மையுடன் ஒன்றித்து இருக்கும் உணர்வானது இச்சா சக்தியால் பலவந்தமாக பூரணத்தின் மீது பதிக்கப்படும் ஒன்று அல்ல. மாறாக அநாதியான அவித்தையின் காரணமாக தாற்காலிகமாக உலகப் பன்மைகளில் ஈடுபட்டு தனது இயல்பான ஒருமை உணர்வை மறந்த பரபோதத்தின் ஆத்மானுபவத்தை உலக உணர்விலிருந்து இடைவிடாத பயிற்சியின் மூலம் பிரித்து உணரும் 'உணர்வைப்' பற்றிய விஷயம் அது. அக்ஞானத்தில் உழலும் இந்நிலை தாற்காலிக மயக்கநிலைக்கு ஆளாவது போன்றது மோகநித்திரை. இவ்வாறு மகோன்னதமான காலாதீத பரநிலையுடன் ஒப்பிடுகையில் இந்த ஜீவபோதம் நமது அடிப்படை நிலைக்கு மாறுபட்டதொரு தாற்காலிக வினாடிப் போது அனுபவமேயாகும். 'நமது உணர்வானது யாண்டும் இயல்பாயிருக்கும் 'அது'வே உண்மை நிலை.' உண்மையில் அதுவே 'ஸ்வஸ்வரூபம்' அதுவே 'நிஜதாமம்'.

தூய உணர்வு எந்தவிதமான பௌதிக ஆதாரத்தி லிருந்தும் முற்றிலும் விடுபட்டதொன்றாகும். ஜீவபோதத்தைப் பொறுத்தமட்டில் ஜாக்ரத், ஸ்வப்ன எனப்படும் முதல் இரண்டு நிலைகளான நனவு, கனவு நிலைகளில் உணர்வானது அதனது பௌதிக ஆதாரத்துடன் தொடர்பு கொண்டு விளங்குகிறது. மனிதர்களிலும் கூட ஸுஷுப்தி நிலையில் உணர்வானது அதனது பௌதிக தொடர்பு களிலிருந்து தனித்துவிடுகிறது. அப்பொழுது அது ஸ்தூல சரீரத்தில் இல்லாத உடல் கடந்த நுண்ணிய ஹிருதய நாடியில் அடங்குகிறது. இங்கே உணர்வானது சூக்ஷ்மமான மனோதளத்தில் உள்ளது. ஆனால் மீண்டும் அது

விழித்தவுடன் மனம் மற்றும் உலக மட்டத்தில் திரும்பவும் செயல்படுகையில், மனம், புலன்கள் மூலம் அது தன்னை செயல்படுத்திக் கொள்கிறது. இஃதனைத்தும் யோகத்தைப் பற்றி எதுவுமே தெரியாது அக்ஞானத்தில் பூரணமாக உழலும் பெருவாரியான மக்களுக்குத்தான் பொருந்தும். இன்னும் ஆன்மீக உணர்வு உதிக்காதவர்களைப் பற்றிய விஷயம் இது. பெருவாரியான மக்களிடம் பௌதிக மற்றும் மன உணர்வு பற்றிய அறிவே உள்ளது. ஆனால் யோகத்தைப் பயிலும் நபரிடம் அவரது உணர்வில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்படுகிறது. யோகமார்க்கத்தில் அவர் மேலே செல்லுகையில் ஆன்மீக உணர்வில் மேலே செல்லுவதன் காரணமாக மனிதனின் பௌதிக தன்மையிலிருந்து விடுபடும் அளவிலான உயர்நிலையை அடைகிறார். பூரணத்தை அடைந்து யோகி மிக மேலான உயர் உணர்வை அடைகிறார். இது எல்லா பௌதிக ஆதாரங்களையும் கடந்தது. இதுவே துரீயம்.

துரீயத்திலிருந்து உணர்வு திரும்ப தனது யதார்த்த நிலைக்கு வருவதை தீர்மானிப்பது தனிநபரா அல்லது பிரபஞ்ச இச்சா சக்தியா என்ற கேள்விக்குத் திரும்பி வருவோம். இந்த விஷயங்கள் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தவை. ஏனெனில் அவைகளைப் பற்றி ஆராய்வது துரீய சைதன்யத்தைப் பற்றிய ஒன்றிரண்டு விஷயங்களைத் தெளிவுபடுத்துகிறது. முதலாவதாக துரீயத்தில் மிக உயர்ந்த உணர்வு நிலை அடையப்படுகையில் உணர்வானது அதன்பின் அதற்கு முந்திய தரிசனத்தை மீண்டும் பெறுவதில்லை. அதாவது யோகி விழிப்புணர்வு பெற்ற ஒரு புது அறிவுடன் திரும்பி வருகிறான். அது ஞான ஒளியுடன் கூடியதொரு உணர்வாகும். வேற்றுமைகளுடன் கூடிய உலகையே மெய் எனக் கருதும் அக்ஞான மனிதனின் உணர்விலிருந்து யோகியின் உலக உணர்வு முற்றிலும் மாறுபட்டது. துரீயத்திலிருந்து திரும்பிய பின் யோகியின்

பார்வை அறிவின் அடிப்படையில் அமைகிறது. அது பன்மையைப் பார்ப்பதில்லை. ஆனால் மாறாக பன்மையில் ஒருமையைக் காண்கிறது. அதன்பின் அந்த ஒருமை உணர்வே அவனது பார்வையின் அடித்தளமாக அமைகிறது. பன்மையைக் கொண்ட உலகம் முழுவதும் முற்றிலும் புதிய கோணத்தில் அவன் முன் இருக்கிறது. இந்தக் காட்சி விவரிக்க முடியாதது.

இரண்டாவது கேள்வியைப் பொருத்தமட்டில், துரீய நிலையில் தனித்தன்மையே இல்லாது போய்விடுவதால் இந்தக் கேள்வியே எழாது. அது பிரபஞ்ச உணர்வுடன் லயித்துவிடுகிறது. 'பிரபஞ்சோபசமம்' என்று இதுதான் குறிப்பிடப்படுகிறது.'பிரபஞ்ச' அல்லது உலக அனுபவம் என்பது அடிப்படையில் தனி உணர்வுதான். எனவே துரீயத்தில் தனி உணர்வும், பிரபஞ்ச உணர்வும் இரண்டாக இல்லாமல், இரண்டும் ஒன்றிவிடுகின்றன. எனவே அந்நிலையில் பிரபஞ்ச சக்தியே செயல்படுகிறது.

அத்யாயம் 2

# பிரபஞ்ச உணர்வு

## 5. பிரபஞ்ச உணர்வைப் பற்றிய ஒரு பகுப்பாய்வு

*பிரபஞ்ச உணர்வு என்றால் என்ன?*

பிரபஞ்ச உணர்வை வார்த்தைகளால் விளக்குவது இயலாது. அது ஆச்சரியம், பரம மகிழ்ச்சி மற்றும் கலப்பற்ற சந்தோஷத்தைத் தருகிறது. பார்ப்பவர், பார்வை, பார்க்கப்படும் பொருள் அல்லது அறிபவர், அறிவு, அறிவது அல்லது தன்மையும் படர்க்கையும் ஒன்றாகின்ற நிர்குண பிரம்ம உணர்வு எனும் பூரண உணர்விற்குக் கீழ்ப்பட்டதாகும். பிரபஞ்ச உணர்வில் பார்ப்பவரும், பார்க்கப்படு பொருளும் இன்னமும் இருக்கும்.

வாழ்வின் ஒருமையைப் பற்றிய பூரண விழிப்புணர்ச்சியே பிரபஞ்ச உணர்வாகும். பிரபஞ்சம் முழுவதும் ஒரே உயிரினால் நிரம்பியுள்ளது, குருட்டு சக்தி அல்லது உயிரற்ற பொருள் என்று எதுவுமே கிடையாது, எல்லாமே உயிருடன் கூடியது; அசைபவை, அறிவுடையவை என்று யோகி உணருகிறான். அவன் பரந்து விரிந்த நிலையான வாழ்வின் உணர்வை அனுபவிக்கிறான். பிரபஞ்ச உணர்வுடையவன் பிரபஞ்சம் பூராவுமே தனதாகக் கருதுகிறான். பரமனுடன், பிரபஞ்ச அறிவு மற்றும் உயிருடன் அவன் ஏன் ஒத்துவருகிறான். அவன் தெய்வீக கண்ணைப் பெற்று கற்பனைக் கெட்டாத, விவரிக்கமுடியாத ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

பிரபஞ்ச உணர்வுடைய யோகி பிரபஞ்ச அறிவை வளர்த்து, பரந்த அறிவை அடைகிறான். இறைவனுக்கு முன்

தான் இருப்பதாக அவன் உணர்கிறான். ஞானம் வருகையில், இன்ப மடை திறக்கிறது. அதனால் அவன் ஒவ்வொரு இதயத்திலும் ஆழ்ந்த திறந்த மகிழ்ச்சி ஊற்று இருப்பதாகவும், அனைத்துயிரிலும் சாஸ்வதமான உயிர் இலங்குவதாகவும், ஒவ்வொரு துகளையும் நித்தியமான, அனைத்தையும் அரவணைக்கும், அனைத்தையும் தன்னுள் அடக்கும் அன்பு தாங்கி ஆதரிக்கிறது என்பதையும். உணர்கிறான். பாபம், துக்கம், மரணம் என்ற வார்த்தை இப்பொழுது அர்த்தமற்ற வெறும் வார்த்தைகளாக அவனுக்கு ஆகிவிடுகின்றன. தனது ரத்தக் குழாய்களில் வாழ்வின் அமுதம் பாய்வதாக அவன் உணர்கிறான். அவனது முகம் ஒளிமயமாகப் பிரகாசிக்கிறது. அவனது கண்கள் தேஜோமயமாயிருக்கின்றன. அவனது கண்கள் ஒளிர்கின்றன. அவை இன்பம், மகிழ்ச்சியின் இருப்பிடங்கள். வாழ்வின் சாரமான அன்புக் கடலில் உலகம் முழுவதும் ஊறியிருப்பதாக அவன் உணர்கிறான். உலகம் முழுவதும் அவனது சரீரம். அனைத்து கைகள், கால்கள் அவனுடையவை என அவன் உணர்கிறான். நாற்காலி, மேஜை, மரம் எல்லாமே ஒரு பிரபஞ்ச தத்துவத்துடன் அவனுக்குக் காட்சி தருகின்றன. எந்த இடமும் புதிதாக அவனுக்குத் தோன்றுவதில்லை. பிரபஞ்ச உணர்வு அனைத்து ஆடவர் மற்றும் பெண்டிருடைய இயற்கையான, இயல்பாயமைந்த சுபாவமாகும். பெரும்பாலான மனிதர்களிடத்தில் அது செயலற்றிருக்கிறது. உயர்ந்த ஆனந்தமய பிரபஞ்ச உணர்வைத் தட்டி எழுப்ப யோகப் பயிற்சியும் கட்டுப்பாடும் தேவை.

பக்தர்களின் நான்கு வகை முக்தி மற்றும் பாவசமாதி, ஸவிதர்க, ஸவிசார, நிர்விசார, ஸானந்த, ஸஸ்மித, ரிதம்பர, பிரக்ஞா எனப்படும் ராஜயோகியின் கீழ்நிலை ஸமாதிகள். சப்தானுவித், த்ருச்யானுவித் எனப்படும் வேதாந்தியின் கீழ்நிலை ஸவிகல்ப ஸமாதிகள் அனைத்தும் பிரபஞ்ச

உணர்வின் அனுபவத்திற்கு வழிவகுக்கின்றன. வழிகள் மாறுபட்டாலும் பலன் ஒன்றுதான். அனுபவங்கள் பொதுவானவை. வெளிப்பாடு, உத்வேகம், பேரானந்தம், தூண்டுதல் எல்லாம் ஒரே பொருளைக் கொண்ட பலவார்த்தைகளாகும்.

## 6. மேலான பரமநிலை

'டின்டர்ன் ஆபி' என்ற தமது கவிதையில் கவிவேர்ட்ஸ் வொர்த் ஸமாதி நிலையைப் பற்றி கீழ்வருமாறு வர்ணிக்கிறார் :

"அந்த ஆனந்தமான நிலை
நமக்குப் புரியாத இந்த உலகின் புதிரும், தாங்க முடியாத
சுமையும் லேசாக்கப்படுகிறதோ - அந்த அமைதியான
ஆனந்த நிலை இந்த அழியும் உடலின் சுவாசமும்
நமது மனித ரத்தத்தின் அசைவும் கூட
நிறுத்தப்பட்டு நமது பாசங்கள் நம்மை உயர்த்திச் சென்று
நம்மைத் தூக்கத்திலாழ்த்துகின்றன. நாம் வாழும்
ஆன்மாவாகிறோம். ஒற்றுமையின் சக்தியால், மகிழ்ச்சியின்
அபார ஆற்றலால் கண்கள் நிலைபெற்று நாம்
பொருள்களின் உயிரோட்டத்தைக் காண்கிறோம்."

பிரபஞ்ச உணர்வு நிலை உயர்ந்தது, மகத்தானது. துக்கம், துன்பம் மற்றும் பயத்திலிருந்து விடுபட்ட தூய ஆனந்தம், இன்பம் மற்றும் ஆச்சரியம் கலந்த நிலையை அது தூண்டுகிறது. பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படும் பொருள்கள் ஒன்றாகும். அறிவோன், அறிவு, அறியப்படுவது தவிர தன்மையும் படர்க்கையும் ஒன்றாகும், அறிவோன், அறிவு, அறியப்படுவது தவிர தன்மையும் படர்க்கையும் ஒன்றாகும். நிர்குண பிரம்ம உணர்வாகிய பூரண உணர்விற்குக் கீழ்ப்பட்ட நிலை இது. பிரபஞ்ச உணர்வில் பார்ப்போனும், பார்க்கப்படுவதும் இன்னும் உள்ளன. சந்தேகமின்றி அது ஒரு மிக சூக்ஷ்மமான அனுபவம். அது

ஒரு தெய்வீக அனுபவம். காரண ஜகத்தின் வகைகள் உணரப்படும் அனுபவம் அது. கால தேச வர்த்தமானம் அற்ற மஹா காரண பிரம்மானுபவம் அது. சொலற்கரிய சுதந்திர அனுபவம் அது. சுருதிகள் அதை 'இது அல்ல, இது அல்ல' என்று எதிரிடையாக விளக்குகின்றன. "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ, ஆனந்த பிரம்மணோ வித்வான் ந பிபேதி கதாசன' - மனமும் வாக்கும் அதைப் பற்றி உணரமுடியாது விளக்கமுடியாது திரும்புகின்றன; பிரம்மம் ஆனந்த மயம் என்று உணரும் ஞானிகள் எதைக் குறித்தும் எக்காலத்தும் அஞ்சுவதில்லை".

ஸ்ரீ சங்கரர், தத்தாத்ரேயர், வாமதேவர், ஜடபரதர், மன்சூர், ஷாம்ஸ் டப்ரீஸ், மதாலஸை, யாக்ஞவல்க்யர் போன்றோர் பிரபஞ்சம் கடந்த உணர்வையும், ராம்தாஸ், துளசிதாஸ், கபீர், ராமானுஜர், மீரா, கௌராங்கர், மாதவர், ஹபீஸ், துக்காராம், ஏகநாதர், புத்தர் போன்றோர் பிரபஞ்ச உணர்வையும் பெற்று விளங்கினர். தூய பிரம்மானுபவத்தை சாதகன் பெற வேண்டும். அதை வார்த்தைகளால் விளக்க முடியாது. மொழி அபூர்ணமானது. பிரபஞ்ச உணர்வு பிரம்மலோக அனுபவமாகும். அது ஹிரண்ய கர்பன் அல்லது பிரம்மாவின் அனுபவம், யோகி அனைத்து தெய்வீக ஐஸ்வர்யங்ளையும் பெறுகிறான். பாகவதம் மற்றும் பதஞ்ஜலியின் ராஜயோகத்தில் விவரிக்கப்பட்டுள்ள பலவிதமான ஸித்திகளை பிரபஞ்ச உணர்வை அடைபவன் பெறுகிறான்.

அர்ஜுனன், ஸஞ்சயன் மற்றும் யசோதை இந்த பிரபஞ்ச உணர்வைப் பெற்றனர். பாலகிருஷ்ணனின் வாயினுள் தேவகி பிரபஞ்சம் அனைத்தையுமே பார்த்தாள். அர்ஜுனன் வாயிலாக இந்த உணர்வை கீதை கீழ்க்கண்டவாறு விளக்குகிறது; "பேருருவம், எத்தனை வாய்கள், எத்தனை கண்கள், நீண்ட கைகள், எண்ணற்ற கால்கள், கோரமான

பற்கள். ஒளிமயமானது, திறந்த வாய்களுடன், வானவில் நிறத்தில் ஈசா! நீ விண்ணையே முட்டுகிறாய். எல்லாத் திசையிலும் கண்கள், பார்ப்பதற்கே பயங்கரமான உருவில் நீ அனைத்தையும் உன்னுள் விழுங்குகிறாய். சிலர் உன் பற்களுக்கிடையில் சிக்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தலைகள் நொறுங்கிக் காட்சி தருகின்றன".

## 7. பிரபஞ்ச உணர்வைப் பற்றிய மேற்கத்தியக் கருத்து

உடல் உணர்வைக் கடந்து போகையில் மேலை நாடுகளிலும் ஜனங்கள் பிரபஞ்ச உணர்வைப் பற்றிய உண்மையை அறிந்திருக்கின்றனர். சிலர் இந்த நிலையை அனுபவித்து ருசித்திருக்கின்றனர். பிரான்சில் பேராசிரியர் பெர்க்ஸன் பகுத்தறிவைக் கடந்த அதே சமயம் அதை எதிர்க்காத உள்ளுணர்வைப் பிரச்சாரம் செய்கிறார். பிரபஞ்ச உணர்வைப் பற்றி பக்கே என்பவர், "பிரபஞ்ச உணர்வு என்பது சாதாரண உணர்வைவிட மிக உயர்ந்தது, அது மூன்றாவது நிலை", என்று குறிப்பிடுகிறார். அது கற்பனைக் கெட்டாதது. பெயர் உணர்த்துவது போல, பிரபஞ்ச உணர்வு பிரபஞ்சத்தின் உயிரோட்டத்தைக் குறிக்கிறது. பிரபஞ்ச உணர்வுடன் தனிநபரிடத்தில் அறிவுமலர்ச்ச்சியும் ஏற்படுகிறது. இதுதான் அவரை ஒரு புதிய வாழ்வின் மட்டத்தில் வைக்கிறது. இதனுடன் ஒழுக்க உயர்வும் சேருகிறது. விவரிக்க முடியாத மகிழ்ச்சி, இன்பம், ஒழுக்க மலர்ச்சி ஏற்படுகிறது. இதுதான் அதிக அறிவு ஆற்றலைக் காட்டிலும் தனி நபருக்கும், சமுதாயத்திற்கும் முக்கியத்துவம் வாய்ந்தது. இவற்றுடன் அழியாத்தன்மையின் உணர்வும், நிரந்தர வாழ்வின் உணர்வும் வருகிறது. இது அவர் அடைவார் என்ற ஒரு வெறும் நம்பிக்கை அல்ல, அவரிடம் ஏற்கனவே உள்ள ஒரு உணர்வாகும்.

## 8. தெய்வீகக் காட்சி

யோகத்தில் தேர்ச்சி பெற்ற ஒரு யோகிக்கு தெய்வீகக் கண் வருகிறது. ஆனால் ஒவ்வொருவரும் யோகி ஆக முடியாது என்பதால் எல்லோருக்கும் இந்த தெய்வீகக் கண் கிடைப்பது என்பது அரிது. இதைத் தான் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில், "நீ என்னைப் பார்த்த இந்த உருவத்தை வேதங்களாலும், தானதபங்களாலும் பார்க்க இயலாது" என்று அர்ஜுனனிடம் தெரிவிக்கிறார். (அதி 2 - 53)

பிரபஞ்சம் கடந்த உணர்வு அனுபவத்தைப் பெறும் ஒருவன் 'ஆப்த காமன்' (தான் விரும்பியது அனைத்தையும் பெறுபவன்) எனும் உணர்வைப் பெறுகிறான். "என்னால் இனி அடையப்படுவது எதுவுமில்லை", என்பதை அவன் உணர்கிறான்.

இப்பொழுது ஜீவபோதம் போய்விடுகிறது. சிறிய 'நான்' உருகிவிட்டது. பிரித்து உணரும் மனம் மறைந்துவிட்டது. எல்லாத் தடைகளும், எல்லா வேற்றுமை உணர்வுகளும், வேற்றுமைகளும், தனித்தன்மையும் மறைந்துவிடுகின்றன. காலம் இடத்தைப் பற்றிய எண்ணம் எதுவும் கிடையாது கால அதீதம் மட்டுமே உள்ளது. ஜீவன் பிரம்மனுடன் ஐக்கியத்தை உணருகிறது. ஜாதி, இன, நிற வேற்றுமைகள் இப்பொழுது போய்விட்டன. அவன் பிரம்மவரிஷ்டன் ஆகும் பொழுது, ஞானத்தின் ஏழாவது நிலையான துரீயாதீதத்தை அடையும்பொழுது ஸம்ஸ்காரத்தின் பதிவால் இருந்த சிறிதளவு உடல் உணர்வும் மறைந்து விடுகிறது. பிறரால் அவனுக்கு உணவு ஊட்டப்படுகிறது. உலகம் முழுமையாக அவனுக்கு மறைந்துவிடுகிறது. 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' - (வேற்றுமை என்பது கிடையாது) என்று சுருதிகள் சொல்லும் அஜாதிவாதிகளின் அனுபவத்தை அவன் அனுபவிக்கிறான்.

உலகம் வெறும் மனத்தின் ஒரு படைப்பே. அது வெறும் தோற்றமே. தூக்கத்தில் உலகம் இல்லை. விழிப்பு நிலையில் மனிதனுக்கு உலகம் உள்ளதே என்று நீங்கள் தர்க்கம் செய்யலாம். ஆமாம், உண்மைதான். மனம் இருந்தால் உலகம் உண்டு. அப்படியானால் மனம் என்பது என்ன? அது எண்ணங்கள், பதிவுகள் மற்றும் பழக்கவழக்கங்களின் தொகுப்பேயாகும். ராகம் த்வேஷம் எனும் இரண்டு ஆற்றல்கள்தான் மனத்தை உயிர்ப்பிக்கின்றன. இந்த இரண்டு ஓட்டங்கள் நிறுத்தப்பட்டால் மனம் அழிந்து போகிறது. அது மனோநாசம் எனப்படுகிறது. மனோநாசம் கைவரப் பெற்ற யோகியால் உலகத்தைக் காணமுடியாது. ஸமாதியின் மூலம் நீங்கள் தெரிந்தே மனத்தை இல்லாதாக்கிவிட்டால் உலகம் மறைந்து போகிறது. பாம்பு எனும் பிரமை இல்லாதுபோனால் நீங்கள் எவ்விதம் கயிற்றை மட்டுமே காண்கிறீர்களோ, அதுபோல ஆத்ம ஞானத்தால் உலக மயக்கம் இல்லாது போகையில் நீங்கள் பிரம்மனை மட்டுமே காண்கிறீர்கள்.

என் விஞ்ஞானிகளும் விஞ்ஞான மாணவர்களும் என்னை நம்பமாட்டார்கள். இந்தப் பயிற்சியை இப்பொழுதே செய்யுங்கள். ஒரு வாரத்திற்கு உங்களை ஒரு அறைக்குள் அடைத்துக் கொள்ளுங்கள். எல்லாத் தொடர்புகளையும் துண்டித்து விடுங்கள். செய்தித் தாள்களைப் படிக்காதீர்கள். மௌனத்தை முழுமையாகக் கடைப்பிடியுங்கள். பிறகு உலகப் பதிவுகள் எந்த அளவிற்கு உங்கள் மனத்தில் பதிந்துள்ளன என்பதை உணருங்கள். உலகம் ஒரு கனவு என்பதை உணர்வீர்கள். இதே பயிற்சியை நீண்டகாலத்திற்குச் செய்தால் எனது கூற்றின் உண்மையை உணர்வீர்கள். காமமும் பேராசையும் நிறைந்த ஒரு உலகாயதவாதிக்கே, தடித்த மனம் கொண்ட ஒரு புலன்வசப்பட்டவனுக்கே இந்த உலகம் மெய்யாகத் தோன்றுகிறது. பிரபஞ்ச உணர்வுடைய ஒரு யோகிக்கு இது ஒரு கனவாகக் கரைந்து போகிறது.

## 9. மேலான விழிப்புணர்வு

சைதன்ய ஸமாதியின் பலனே பிரபஞ்ச உணர்வாகும். அதில் யோகியானவன் புலன் கடந்த அறிவையும் உள்ளுணர்வையும் பூரண விழிப்பு நிலையையும் அனுபவிக்கிறான். "அஹம் அஸ்மி - நான் இருக்கிறேன்' என்ற தனது இருப்பை அவன் உணருகிறான். ஆனால் ஹடயோகியின் ஜடஸமாதி இந்த மேலுணர்வு நிலையைக் கொணர இயலாது. அது ஆழ்ந்த உறக்கத்தைப் போன்றதாகும். இந்த நிலையில் புலன்கடந்த தெய்வீக அறிவு கிடையாது. சுவாசம் முழுக்கவும் நின்று விடுகிறது. மூலாதார சக்கரத்தில் எங்கேயோ பிராணன் நிலை பெறுகிறது. அவனது காலை நீங்கள் வெட்டினாலும் அவனுக்கு வலி தெரியாது. ரத்தமும் வராது. ஆனால் இங்கே ஸம்ஸ்காரங்களும் வாஸனைகளும் சாம்பலாவதில்லை. பிரம்மானுபவத்தில் வாசனைகளும் ஸம்ஸ்காரங்களும் முழுக்கவும் அழிந்து போகின்றன. ஆலம்பனம் (மனதிற்கு ஒரு ஆதரவு), திரிபுடி (அறிவோன், அறிவு, அறியப்படுவது என்ற மூன்று) உண்டு. ஸவிகல்ப ஸமாதி அல்லது கீழ்நிலை ஸமாதியில் சூக்ஷ்ம ஸம்ஸ்காரங்கள் உண்டு. நிர்விகல்ப சமாதியில் ஆலம்பனமோ, திரிபுடியோ, சம்ஸ்காரமோ கிடையாது. ஜடஸமாதி மோட்சத்தை நல்காது. ஒழுக்க உயர்வின்றி ஒருவன் ஜடஸமாதியை அடையலாம். ஆனால் ஒழுக்க உயர்வு இல்லாமல் பிரபஞ்ச உணர்வை அடையமுடியாது. இந்த விஷயத்தை முக்கியமாகக் குறித்துக் கொள்ளுங்கள்.

## 10. அனுபவத்தின் தன்மைகள்

முழுக்கவும் அச்சமின்மை, ஆசையின்மை, எண்ண மின்மை, 'நான்' இன்மை, 'எனது' இன்மை, சினமின்மை, முகத்தில் பிரம்ம தேஜஸ், சோக மோகத்தினின்று விடுதலை போன்றவை ஒருவன் மேலுணர்வு நிலையை அடைந்து

விட்டான் என்பதற்கான சில அடையாளங்களாகும். அவன் யாண்டும் பூரண இன்பத்தில் லயித்திருக்கிறான். அவனது முகத்தில் நீங்கள் ஒருபொழுதும் கோபம், ஏக்கம், துக்கம் முதலியவற்றைப் பார்க்கவே முடியாது. அவனது முன்னிலையில் நீங்கள் மகிழ்ச்சி, ஊக்கம், அமைதியை அனுபவிப்பீர்கள்.

மது அருந்திய ஒருவனுக்கு தன் உடல் மீது துணி இருக்கிறதா இல்லையா என்ற உணர்வு இல்லாமலிருப்பது போல, தான் நிற்கிறானா அல்லது தரையில் கிடக்கிறானா என்ற உணர்வு இல்லாமலிருப்பது போல, பிரபஞ்சம் கடந்த உணர்வுடைய யோகிக்கும் உடல் உணர்வு கிடையாது. நான்காவது நிலையில் உள்ள ஜீவன்முக்தர் ஒருவருக்கு ஸம்ஸ்காரம் அல்லது மனதின் பதிவினால் தன் உடலைப் பற்றிய லேசான உணர்வு இருக்கும்.

மனம் செயல்படாத ஒருவனுக்கு தன் காலில் உள்ள பழஞ் செருப்பு இருக்கிறதா இல்லையா என்று சந்தேகம் உள்ளது போல, ஜீவன் முக்தனுக்கு தனது உடல் இருக்கிறதா இல்லையா என்ற ஐயம் இருக்கும். பிரம்மனில் பூரணமாக லயித்திருக்கும் ஒரு அவதூத சன்யாசிக்கு ஆண் பெண் வேறுபாடு கூட சிறிதளவும் தெரியாது. அத்தகையவர் தனது கோவணத்தைக் கூட தூரே எறிந்துவிடலாம். அந்த கோவணம் தானாகவே விழுந்துவிடும்.

## 11. பகுத்தறிவு முறை

உடலில் ஆடையின்றி நிர்வாணமாக இருப்பவன் ஒரு ஆசிரமத்திலோ, நகரத்திலோ அல்லது கிராமத்திலோ இருக்கக்கூடாது. யாருக்கும் தெரியாமல் அவன் திரிய வேண்டும். உணவைப் பற்றிக் கவலைப்படக்கூடாது. பாழடைந்த வீடு அல்லது குப்பை மேட்டில் உடலைக் கட்டைபோலக் கிடத்தவேண்டும். நாரத பரிவ்ராஜக உபநிஷதம் இப்படிக் கூறுகிறது.

ஆசிரமத்தில் நிர்வாணமாக இருந்து கொண்டு, எல்லா சுகங்களையும், சிஷ்யர்களையும் பெற்று ஆசிரம நிர்வாகத்தில் அக்கறையும் கொண்டு விளங்குவது நல்லதல்ல. மக்களில் சில பிரிவினருக்கு இது உகந்ததல்ல. ஆசிரமத்தில் வசிக்க விரும்பும் சன்யாசி அல்லது மகாத்மா கோவணத்துடன் தனது இடுப்பில் ஒரு சிறிய துணியையும் கட்டிக் கொள்ளலாம். அது அவரது ஜீவன்முக்தி அனுபவத்திற்கு முரணாகப் போகாது. உடல் நிர்வாணம் மட்டும் உண்மையான தியானம் ஆகிவிடாது. பலர் விவேக சூடாமணி அல்லது யோகவாசிஷ்டத்தில் காணப்படும் ஏழாம் நிலை விளக்கத்தைப் படித்துவிட்டு, அந்த உணர்வின் மிக மேலான நிலையை அடைவதற்கான அகத்தூய்மையின்றி வெறும் வெளி வேஷத்தை மட்டுமே கொண்டு விளங்க முயற்சிக்கின்றனர். இது தவறு. இது ஏமாற்றுத்தனம். சில சன்யாசிகள் பிரம்ம வரிஷ்ட நிலையை போலியாக மேற்கொள்கின்றனர். இளம் பெண்களால் அவர்கள் அமுது ஊட்டலை விரும்புகின்றனர்.

இமயமலையில் உள்ள உத்தரகாசியில் ஒரு இளைஞன் சுவாமி தேவகிரியிடம் யோகவாசிஷ்டக் கதை ' ஒன்றைக் கேட்டான். அதில் ஞானியின் ஏழாவது நிலை பற்றிய விளக்கம் வருகிறது. உடனே அந்த இளைஞன் பதினைந்து நாட்களுக்கு உணவு உண்ணாமல் தான் ஞானத்தின் ஏழாவது நிலையில் இருப்பதாகக் கருதிக் கொண்டு தன் அறையிலேயே மலஜலம் கழிக்க ஆரம்பித்தான். அதைக் கண்ட புத்திமானான ஒரு அண்டை வீட்டான் அவனது உடலில் 'பிச்சுகடம்' என்ற செடியால் தடவினான். தேள் கடிப்பது போன்ற வலியை அது உண்டாக்கிற்று. குய்யோமுறையோ என்று கத்திக்கொண்டு அந்த இளைஞன் சுயநினைவிற்கு வந்தான். மீண்டும் பிட்சைக்காக தர்மசத்திரத்திற்குப் போகத் தொடங்கினான். இது ஏமாற்றுத் தனமில்லையா? அவனது அந்தர்முக மனநிலையானது

பிரம்மானுபவத்தின் உச்சநிலையை அடையாமல், கீழான மட்டமான நிலையில் இருந்தது. பூரண ஸமாதியில் லயித்த பரமஹம்ஸரைப் போல வெறும் வேஷம் மாத்திரம் போட்டான்.

## 12. தோற்றங்கள் கேள்விக்குரியவை

ஹரித்வாரில் கும்பமேளாவின் போது நிர்வாணமாகச் செல்லும் நாக சாதுக்களையும், இளம் சிறுவர்களையும் நீங்கள் காணலாம். இந்தச் சிறுவர்கள் ஜிதேந்திரிய யோகிகளா? இது ஏமாற்றுத்தனம் இல்லையா! போலித்தனம் பல்வேறு வேஷங்களைப் போடுகிறது. மனதின் பல்வகை யான நுட்பமான செயல்பாடுகளை நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும். மனம்தான் மாயை.

கற்பூரம் அல்லது 'நக்ஸ்வாமிகா' அல்லது 'ஹரீதகி'யை நீங்கள் சிறிது காலத்திற்கு உட்கொண்டால், ஜனனேந்திரியம் எழும்பாத நிலை உருவாகும். இதனால் நீங்கள் ஒரு ஜிதேந்திரிய யோகி என்பதாகிவிடாது. ஜனனேந்திரியத்தை எழும்பச் ,செய்யும் நரம்புகளை செயலற்றதாக்கும் ஒருவித முதுகெலும்புப் பயிற்சியளிக்கும் சில முதியவர்கள் உளர். மனம் அதன் இயல்பான நிலையில் இருக்கும். காமம் அகலாது உண்மையான சன்யாசம் என்பது அகத்தே உள்ள மன நிர்வாணமேயாகும். மனமானது வாஸனைகள் மற்றும் சம்ஸ்காரங்களிலிருந்து பூரணமாக விடுபட்டிருக்கும். இதுவே உண்மையான அவதூத நிலை.

பூமிக்கடியில் உள்ள அறைகளில் தங்களை அடைத்துக் கொண்ட இந்த போலி ஸமாதியாளர்களிடம் பிரபஞ்ச உணர்வின் அடையாளங்களையும் அறிகுறிகளையும் நீங்கள் காணமுடியாது. நாயுருவி (அபமார்க) செடியின் விதைகளை உட்கொண்டால் பசி, தாகம் உங்களுக்குத் தோன்றாது. பசி, தாகத்தை வெல்ல நாயுருவி விதைகளை பயன்படுத்தும்

முறை கீழ்வருமாறு : "இந்த விதைகளுக்கு புறத்தே ஏழு தோல்கள் உண்டு. அவற்றை வெயிலில் உலர்த்தி, கையில் வைத்து தேய்க்க வேண்டும். இந்த விதையில் ஒரு சேர் எடையில் எட்டில் ஒரு பங்கை உட்கொள்ளுங்கள். இந்த விதையைப் பால் சீனியுடன் கலந்து பாயாசம் போலச் செய்யுங்கள். முதலில் பேதிக்கு எடுத்துக் கொள்ளுங்கள். இரண்டு நாட்கள் பால் மட்டும் அருந்துங்கள். எனிமா எடுத்துக் கொள்ளுங்கள். பழைய மலம் முழுவதும் வெளியேற்றப்பட வேண்டும். மகிழ்ச்சிகரமான மனநிலையும் இனிய அனுபவங்களும் உங்களிடம் நிலவும். பசியோ தாகமோ தெரியாது. நாயுருவி விதைகளில் இரண்டு வகை உண்டு. சிவப்பு வகை சிறந்தது.

கயிலாயம் போகும் வழியில் வளரும் மற்றொருவகை செடி அல்லது புல் உண்டு. அது பாறைகளில் வளருகிறது. இதை நீங்கள் சூரியோதயத்திற்கு முன் பிடுங்க வேண்டும். ஆறுமாத காலத்திற்கு இதனால் பசியின்றி நீங்கள் இருக்கலாம். போலி ஸமாதி பயில்வோர் இந்த விதைகளையும் வேர்களையும் பயன்படுத்துகின்றனர். அறையிலிருந்து அவர்கள் வெளியே வரும்பொழுது பழைய வாசனைகள் மற்றும் சம்ஸ்காரங்களுடன் கூடிய அதே நபர்களாகத்தான் அவர்கள் வருகின்றனர். அவர்கள் சளசளவென்று பேசும் ராஜஸ இயல்பினர்.

## 13. பிரபஞ்ச உணர்வைப் பற்றி ராமசரகரின் கருத்துக்கள்

தமது 'ராஜயோகம்' என்ற நூலில் பிரபஞ்ச உணர்வைப் பற்றி யோகி ராமசரகர் கீழ்வருமாறு எழுதுகிறார். "இறுதியில் சொல்லப்பட்டதைக் காட்டிலும் உயர்ந்த ஒரு நிலை உள்ளது. ஆனால் மனித குலத்தின் மிகச் சிலருக்கே அது சாத்தியமாகி இருக்கிறது. எல்லாக் காலத்திலும், எல்லா

இனங்களிலிருந்தும், எல்லா தேசங்களிலும் இது பற்றிய தகவல்கள் வந்துள்ளன. அது 'பிரபஞ்ச உணர்வு' என்று அழைக்கப்படுகிறது. வாழ்வின் ஒருமை உணர்வு என்று அது விவரிக்கப்படுகிறது. அதாவது பிரபஞ்சம் முழுவதும் அசைவினால், உயிர்ப்பினால், மனதினால் நிரம்பியுள்ளது, குருட்டு சக்தி அல்லது செத்தபொருள் என்று எதுவும் கிடையாது. அனைத்துமே சின்மயமானது. உயிர்ப்பு சக்தியுடன் கூடியது, அசைவது என்பதை நேருக்கு நேர் காண்பதுவே இந்த உணர்வாகும். பொருள், சக்தி, மனம் நிறைந்த கட்புலனாகும் இந்தப் பிரபஞ்சத்தின் பின் உள்ள உண்மையான பிரபஞ்சத்தையே அவர்கள் குறிக்கின்றனர். உண்மையில் இந்த நிலையை தரிசிக்கும் வாய்ப்பு பெற்றவர்கள் இப்பிரபஞ்சத்தை 'எல்லாம் மனமே'- அதாவது கடைசியில் அனைத்தும் மனம் தான் என்று குறிப்பிடுகின்றனர். இங்கும் அங்கும் ஒரு சிலரால் இத்தகைய உணர்வு அனுபவிக்கப்பட்டிருக்கிறது. அது ஒரு சில வினாடிகளுக்கே ஒளிக்கீற்றாக தோன்றி, நினைவில் ஒரு படலத்தை விட்டுச் செல்லுகிறது. அந்த'விவேக' வேளைகளில் அதை அனுபவிப்பவர்களுக்கு பிரபஞ்ச உயிர் மற்றும் அறிவுடன் ஒரு 'நேரடித் தொடர்பு' உணர்வு ஏற்படுகிறது. அதை வார்த்தைகளால் விவரிக்க முடியாது. ஆனால் கற்பனைக் கெட்டாத ஒரு ஆனந்தம் கூடவே தோன்றுகிறது.

இந்தப் 'பிரபஞ்ச உணர்வு' பற்றி சொல்லுகையில் அது நம்பிக்கை, கொள்கை, அல்லது உண்மைகளை உணர்வதற்கு அப்பாற்பட்டது என்றும், குறிப்பிட்ட உயர் அனுபவ தருணத்தில் இந்த விஷயங்களைப் பற்றிய உணர்வும் தரிசனமும் ஏற்பட்டன என்று நாம் சொல்லலாம். மற்றும் சிலர் ஞானியர் சொன்ன இந்த விஷயங்களைப் பற்றிய முழு உடன்பாடு அவர்களுக்கு இருப்பதாகவும் ஆனால் அவர்கள் குறிப்பிட்ட அந்த 'பேரானந்தம்' அல்லது

காட்சியை தாங்கள் பெறவில்லை என்றும் தெரிவிக்கின்றனர். இந்த இறுதி வகையினர் 'தரிசனத்'தைப் பெற்று அனுபவித்தவர்களின் அதே மனநிலையைப் பெற்றிருப்பினும், அந்தக் குறிப்பிட்ட அனுபவத்தைப் பெறவில்லை. தகவல்களின் அடிப்படை அம்சங்களை அவர்கள் ஒப்புக் கொள்கின்றனர். இப்பொழுது நம்மைவிட்டு மறைந்துவிட்ட மாரிஸ் பக்கே என்பவர் 'பிரபஞ்ச உணர்வு' என்னும் தலைப்பில் ஒரு நூல் எழுதியிருக்கிறார். அதில் தமது அனுபவங்களுடன் வால்ட் விட்மேன் போன்றோரது அனுபவங்களையும் தொகுத்துரைக்கிறார். அதில் அவர் உணர்வின் இந்த நிலை மனிதகுலத்தின் முன் உள்ளதாகவும், படிப்படியாக எதிர்காலத்தில் அது வந்து வாய்க்கும் என்றும் குறிப்பிடுகிறார். சிலருக்கு மட்டுமே ஏற்பட்ட இந்த அனுபவம் சூரியோதயத்திற்கு முன் ஏற்படும் அருணோதயம் போன்றது என்றும் விரைவிலேயே ஒளிவெள்ளம் பாய உள்ளது என்றும் கூறுகிறார்.

தங்களது உயர் ஆன்மீக அனுபவ நேரங்களில் தாங்கள் பெற்ற அரிய அனுபவங்கள், பரம்பொருளின் சன்னிதியில் அந்தப் பேரொளி வட்டத்தினுள் தாங்கள் இருந்ததாகக் குறிப்பிடும் தகவல்களை நாம் இங்கே விளக்கமாகப் பார்க்கப் போவதில்லை. இந்த தகவல்களை நாம் பெரிதும் மதிக்கிறோம். அவர்களது தகவல்களில் முரண்பாடுகள் இருப்பினும் அவை அனைத்தும் உண்மையே என்று நாம் நம்புவதற்குப் போதுமான காரணங்கள் உள்ளன. இந்த முரண்பாடுகளுக்குக் காரணம் இந்த நிகழ்ச்சிகளை உள்ளபடி புரிந்து கொள்வதற்கான பயிற்சியும் பக்குவமும் அவர்களிடம் இல்லாதிருந்திருக்கலாம். தங்கள் முன் தோன்றிய அச்சமும் பிரமிப்பும் ஊட்டும் கண்ணைப் பறிக்கும் காட்சியைக் கண்டு அவர்கள் அதிர்ச்சி அடைந்திருக்கலாம். பரம்பொருளின் தன்மையை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. உயர்நிலையிலிருந்து கீழ்நிலைக்கு

மீண்டதும் தாங்கள் 'கடவுளின்' சன்னிதியில் இருந்ததாக அவர்கள் கூறினார்கள். தங்கள் சமயம் அல்லது கொள்கையின்படி அவர்கள் நம்பிய தெய்வத்தையே அவர்கள்'கடவுள்' எனக் குறிப்பிட்டிருக்கலாம். அவர்கள் தாங்கள் 'கடவுள்' என்று எதை நம்பினார்களோ, அதைத்தவிர வேறு எதையும் அவர்கள் தெரியாத காரணத்தால் தாங்கள் கண்டதுதான் கடவுளாக இருக்கவேண்டும் என்று எண்ணியிருக்கலாம். எனவே அவர்கள் கொடுத்த தகவல்கள் இந்த வகையில் அமைந்தன.

இவ்விதம் எல்லா சமயங்களின் தகவல்களும் இத்தகைய அற்புத அனுபவங்களின் தொகுப்பாக அமைந்துள்ளன. கத்தோலிக்க துறவி "கடவுளின் பேரொளி வடிவத்தைக் கண்டேன்" என்று சொன்னால் கத்தோலிக்கர் அல்லாதவரும் தங்கள் கருத்துக்கேற்ப தெரிவிக்கின்றனர். முகம்மதியன் ஒருவர் தான் அல்லாவின் திருமுக தரிசனத்தைப் பெற்றேன் என்கிறார். போதி மரத்தடியில் தான் புத்த பகவானைக் கண்டதாக பௌத்தன் ஒருவர் கூறுகிறார். பிரம்மாவின் முகத்தைப் பார்த்ததாக பிராம்மணன் ஒருவர் கூறுகிறார். இது போல ஹிந்து மதத்தின் பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் தங்கள் வழிபடு தெய்வங்களைப் பற்றிய விவரங்களைத் தருகின்றனர். இத்தகைய தகவல்களை எகிப்தியர்களும் பாரசீகர்களும் அளிக்கின்றனர். இத்தகைய மாறுபடும் தகவல்களால் இது பற்றிய உண்மையைத் தெரியாதவர்கள் இவற்றை முழுப் பொய் என்று மறுக்காவிட்டாலும், இவையெல்லாம் வெறும் கற்பனை என்று கூறுகின்றனர். ஆனால் யோகிகள் இதைப் பற்றி மிக அதிகமாகவே தெரிந்து வைத்திருக்கின்றனர். முரணான தகவல்களின் பின்னணியில் இதைப் பற்றி ஆராய்பவர்களுக்குத் தெளிவாகப் புலப்படும் பொதுவான உண்மை அம்சம் உள்ளது என்பதை அவர்கள் அறிவார்கள். உண்மையான

நிகழ்ச்சியைப் போல ஜோடிக்கப்பட்ட சில ஏமாற்று சம்பவங்களைத் தவிர ஏனைய தகவல்கள் யாவும் உண்மையின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. ஆனால் காண்பவர்களின் மருண்ட பார்வைக்கேற்ப தகவல்கள் மாறுபடுகின்றன என்பது அவர்களுக்குத் தெரியும். இவர்கள் தாற்காலிகமாக சாதாரண உணர்வு நிலையிலிருந்து மேலானதொரு உணர்வுநிலைக்கு தூக்கப்பட்டு, மானிடர்களுக்கு மேலானதொரு ஜீவன் அல்லது ஜீவன்கள் உண்டு என்பதை உணர வைக்கப்பட்டிருக்கின்றனர். இதனால் அவர்கள் பரம்பொருள் அல்லது 'கடவுளை'ப் பார்த்ததாக ஆகிவிடாது. ஏனெனில் சாதாரண மனிதனுக்கு 'கடவுளாக'க் காட்சி தரும் பல உயர்ரக ஆன்மீக ஜீவன்கள் உள்ளன. தேவதூதர்கள், மற்றும் தலைமை தேவதூதர்களைப் பற்றிய கத்தோலிக்கர் களுடைய கருத்துடன் தேவர்கள் மற்றும் உயர்ஜீவர்களைப் பற்றிய திரை மறைவில் உள்ள யோகிகளுடைய கருத்து ஒன்றுபடுகிறது. எனவே பல்வேறு ஞானியர், துறவியர்களுடைய கருத்துக்களை யோகி ஒத்துக்கொள் கிறான். யோக தத்துவ மாணவர்களின் இயற்கையான நியதிகளுக்கேற்ப அவற்றை விளக்குகிறான். ஆனால் இத்தகைய தத்துவ அறிவு இல்லாதவர்களுக்கு இவை அதிசயங்களாகத் தெரிகின்றன.

ஆனால் இதைப் பற்றிய மேலும் விவரத்தை நாம் இங்கே இதற்கு மேல் பேச இயலாது. ஏனெனில் அதைப் பற்றிய முழுவிரம் நம்முன் உள்ள பிரச்சினையிலிருந்து நம்மை வெகுதூரம் கொண்டு சென்றுவிடும். ஆனால் பரம்பொருளைப் பற்றியும் உயர்நிலை ஜீவன்களைப் பற்றியும் தகவல் தெரிவிக்கும் சில கேந்திரங்கள் மனிதனின் மனநிலையில் உள்ளன என்பதை நாம் நம்பியேயாகவேண்டும். உண்மையில் இந்தக் கேந்திரங்களிலிருந்துதான், மனிதன் சமய உணர்வு அல்லது

உள்ளுணர்வு என்று அழைக்கும் மன 'உணர்வுகள்' பெறப்படுகின்றன. இந்த மேலாம் உணர்வு மனிதனின் அறிவிலிருந்து பெறப்படுவதில்லை. அது ஆன்மாவின் மேல் நிலைகளிலிருந்து வெளிப்படும் ஒளியாகும். அவன் இந்த ஒளிக் கீற்றுகளைக் காண்கிறான். ஆனால் அவற்றைப் புரிந்து கொள்ளாமல் அறிவின் அடிப்படையில் அதற்கான பல்வகை விளக்கங்களைக் கொடுக்க முயல்கிறான். ஆனால் உள்ளுணர்வின் ஆற்றல் அறிவுக்குக் கிடையாது. எந்த ரூபத்தில் வந்தாலும் உண்மையான சமயம் இதயத்திலிருந்து வருகிறது. அது இத்தகைய அறிவு பூர்வமான விளக்கங்களால் திருப்தி அடைவதில்லை. எனவே உயர் ஒளி தோன்ற ஆரம்பிக்கையில் ஒருவித அமைதியின்மையும் பேரார்வமும் எழுகின்றன. "ஹிந்து மனம்" என்ற நூலில் அமெரிக்காவைச் சேர்ந்த லாரி பிராட்டி என்ற பெண்மணி பிரபஞ்ச உணர்வைப் பற்றி ஹிந்துக்கள் நிறைய எழுதியிருக்கிறார்கள். ஆனால் மேனாட்டவருக்கு இது பற்றி அதிகம் தெரியாது. ஆனால் டாக்டர் பக்கியின் 'பிரபஞ்ச உணர்வு' மற்றும் எட்வர்ட் கார்பென்டரின் 'ஜனநாயகத்தை நோக்கி' என்ற நூல்களைப் படித்தவர்கள் இந்த நூலாசிரியர்கள் பிரபஞ்ச உணர்வு என்பது மனிதனின் இயற்கையான ஆற்றல் என்றும், இவ்வுலகில் எதிர் காலத்தில் வர இருக்கும் மனித குலத்திற்கு மறைந்திருக்கும் இப்பொழுதைய ஆற்றலைப் போலல்லாமல் மிகவும் வளர்ச்சி பெற்ற ஆற்றல் இருக்கும் என்றும் அறிவார்கள். விலங்குகளிடம் காணப்படும் சாதாரண உணர்வை மனிதன் ஆரம்பத்தில் பெற்று விளங்கினான். பிறகு மனிதனுக்கே உரிய மொழி அறிவுடன் தன்னுணர்வைப் பெற்று விளங்கினான். எனவே பரிணாம வளர்ச்சியில் இதற்கும் மேம்பட்ட பிரபஞ்ச உணர்வை அவன் பெற்றாகவேண்டும். இதுவே பக்கியின் கொள்கையாகும்.

கடந்த சில நூற்றாண்டுகளில் ஓரளவு பிரபஞ்ச உணர்வைப் பெற்றவர்களின் எண்ணிக்கை அதிகரித்த தானது இந்த நபர்கள் புதிய சமுதாயத்தின் முன்னோடிகள் என்பதற்கான எடுத்துக்காட்டாகும். புனித யோவான், பிரான்சிஸ் பேகன், ஜேகப்போம், பிளெய்சி பாஸ்கல், ஸ்பைனோஸா, ஸ்வீடன்பர்க், வில்லியம் வார்ட்ஸ்வொர்த், அலெக்ஸாண்டர் புஷ்கின், ஹோனேர் தெ பால்ஸாக், மெர்ஸன், டென்னிசன், தோரோ, வால்ட் விட்மன், எட்வர்ட் கார்பென்டர் என்பவர்கள் கடந்த காலத்தில் பிரபஞ்ச உணர்வைப் பெற்று விளங்கினார்கள் என்று பக்கி கூறுகிறார். ஹிந்துத் துறவியரில் அவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரையும் குறிப்பிடுகிறார்.

இந்தப் புகழ்பெற்ற நபர்களைத் தவிர பிரபஞ்ச உணர்வை ஓரளவுக்குப் பெற்று விளங்கிய நூற்றுக்கணக் கான ஆண்களும் பெண்களும் ஒவ்வொரு தேசத்திலும் உண்டு. அண்மைக் காலத்தில் அமெரிக்காவிற்கு விஜயம் செய்த பல ஹிந்து துறவியர்மூலம் ஆயிரக்கணக்கான அமெரிக்கர்கள் தியானப் பயிற்சிகள் மூலம் தெய்வீக உயர்வின் ஒரு அம்சத்தை உணர்ந்திருக்கின்றனர். சில சாதகர்கள் மேல்நிலைக்குச் சென்று ஞானத்தை அடைந்திருக் கின்றனர். பிரபஞ்ச உணர்வானது அதிகமதிகம் நபர்களிடம் வளர்ச்சி பெற்று எதிர்காலத்தில் புகழ்மிக்க குலத்திற்கு எவ்விதம் வழிவகுக்கும் என்பதற்கு இது ஒரு எடுத்துக் காட்டாகும்.

## 14. பக்கெயின் கருத்துக்கள்

பக்கெயின் புத்தகத்திலிருந்து சில பகுதிகள் மேற்கோள் காட்டத் தகுந்தவை."பிரபஞ்ச உணர்வுடன் தொடர்பு கொள்ளுகையில் இன்று நமக்குத் தெரிந்துள்ள சமயங்கள் யாவும் கரைந்துபோகும். மனித ஆன்மா புரட்சிகரமான மாற்றத்திற்குள்ளாகும். மனித சமுதாயத்தை சமயம் ஆதிக்கம்

செலுத்தும். அது பழக்க வழக்கத்தைச் சார்ந்திராது. அது நம்பப்படும். மறுக்கவும் படும். சில குறிப்பிட்ட நேரம், காலம், சந்தர்ப்பங்களை ஒட்டிய வாழ்க்கை நெறியாக அது இருக்காது. அது புனித நூல்கள் மற்றும் பூஜாரிகளின் உதடுகளில் மட்டும் இருக்காது. அது சர்ச்சுகள், கூட்டங்கள், மற்றும் நடை உடைகளில் இருக்காது. அதன் உயிர் பிரார்த்தனைகள், ஸ்தோத்திரங்கள் மற்றும் உபன்யாசங்களில் இருக்காது. அது எந்தவிதமான பைபிள் அல்லது அவதார புருஷர்களின் வார்த்தைகள் அல்லது விசேஷ வெளிப்பாடுகளில் அடங்கியிருக்காது. அது மக்களைப் பாவத்திலிருந்து மீட்டு சொர்க்கத்திற்கு இட்டுச் செல்லும் ஒரு மார்க்கமாக இருக்காது. அது எந்தவிதமான எதிர்கால அமரத்வம் அல்லது புகழைப் பற்றி போதிக்காது. ஏனெனில் எல்லாப் புகழும் அமரத்துவமும் இங்கேயே இப்பொழுதே உள்ளன.

ஒவ்வொரு இதயத்திலும் கண்ணில் பார்வையாக அமரத்துவத்தின் சாயல் இருக்கும். இப்பொழுது கடவுள் இருக்கிறாரா என்பது பற்றிய ஐயம் இருப்பது போல அப்பொழுது கடவுள் மற்றும் அழியாமையைப் பற்றிய ஐயம் இருக்கவே இருக்காது. அவற்றின் நிருபணம் ஒரே மாதிரியாக இருக்கும். வாழ்க்கையின் அனைத்து அம்சத்தையும் தினம் ஒவ்வொரு நிமிஷத்தையும் சமயம் ஆட்கொள்ளும். சர்ச்சுகள், போதகர்கள், உருவங்கள், கொள்கைகள், பிரார்த்தனைகள், தரகர்கள் மற்றும் மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையிலான நபர்கள் அனைவரும் நேரடியான தொடர்பினால் அப்புறப்படுத்தப் படும். பாபம் இருக்காது. மோட்சம் விரும்பப்படமாட்டாது. மனிதர்கள் மரணத்தைப் பற்றியோ, எதிர்காலத்தைப் பற்றிய மோட்ச சாம்ராஜ்யத்தைப் பற்றியோ, இந்த உடல் மரித்தபின் என்ன நிகழும் என்பது பற்றியோ கவலைப்பட மாட்டார்கள். ஒவ்வொரு ஆன்மாவும் தான் அழியாதது

என்பதை உணரும். அனைத்து நலம் மற்றும் அழகைத் தன்பால் கொண்ட இந்தப் பிரபஞ்சம் அதற்கே உரியது என்பதையும் உணரும். பிரபஞ்ச உணர்வைக் கொண்ட மக்களுடன் கூடிய உலகமானது இன்றைய உலகத்திலிருந்து மிகவும் மாறுபட்டு இருக்கும். இந்தப் புதுயுகம் நம்மிடமிருந்து தான் தோன்றும் நிலையில் உள்ளது. எதிர்காலத்தில் அதுவே புவியை ஆட்கொள்ளும்".

## 15. இறைவனுடன் தொடர்பு கொள்ள ஒரு உறுதியான வழி

யோக முறைகளால் பிரபஞ்ச உணர்வைப் பெறலாம் என்பதுவே எல்லா மனிதர்களுடையவும் உள்ளார்ந்த ஒரு மேலாம்தன்மை என்பதற்கான நிரூபணமாகும். தெய்வீக ஞானம் என்பது ஒரு சிலருக்கு மட்டுமே வரும், சாதாரண நபர்கள் அவர்களது 'நம்பிக்கைக்'கேற்ப கடவுளருகில் செல்லுதல் அசாத்தியம் எனப் பலரும் நம்புகின்றனர். கடவுளைத் தொடர்பு கொள்ள ஒரு உறுதியான வழி உள்ளது, எல்லாச் சூழ்நிலைகளிலும் எல்லோராலும் பயன்படுத்தக்கூடிய ஒரு முறை உள்ளது என்பது ஹிந்து ஆன்மீக விஞ்ஞான சாதகர்களுக்கு மறுபிறப்பே எடுத்தது போன்ற ஒரு அதிர்ச்சியை அளிக்கிறது.

" என் மனதில் இது தொடர்பான ஒரு எடுத்துக்காட்டு உள்ளது. வங்காளத்தைச் சேர்ந்த சுவாமி யோகானந்தாவினால் அமெரிக்காவிற்கு யோகதா செய்தி கொண்டு வரப்பட்டபொழுது ஒரு அமெரிக்கருக்கு பிரபஞ்ச உணர்வு கிட்டியது. இந்த சாதகரிடம் ஆழ்ந்த சமய நாட்டமும் வேட்கையும் இருந்தன. உலகின் அனைத்து சமய நூல்கள், குறிப்பாக ஹிந்துக்களின் மறைநூல்களைப் பற்றிய அறிவு அவரிடம் இருந்த போதிலும் வெறும் இந்த அறிவு சாரமற்றது, ஜடமானது. அவரது ஆன்மீகப் பசியை அது

தணிக்காது என்பதை அவர் உணர்ந்திருந்தார். ஆன்மீக உணர்வைப் பற்றி அவர் படிக்க மட்டும் விரும்பவில்லை, அதை ருசிக்கவும் விரும்பினார். இந்தத் தருணத்தில் அவருக்கு அத்தகைய அனுபவம் எதுவும் இல்லாத காரணத்தால் கடவுளுடன் தொடர்பு கொள்வதற்கான தகுதி தனக்கு எதுவும் கிடையாது என்ற அவநம்பிக்கை அவரை பிடித்துக் கொண்டது. கடைசியில் கடவுள் இருக்கிறாரா என்பது பற்றியே ஐயம் அவரை ஆட்கொண்டது. கடவுளைப் பற்றிய வெறும் ஒரு யுக்தி பூர்வமான அறிவு மட்டுமே சாத்தியம் என அவர் நம்பினார். இந்த எண்ணம் அவரது வாழ்வின் அடித்தளத்தையே அசைத்தது. வாழ்க்கையே அர்த்தமற்றது போல அவருக்குத் தெரிந்தது.

இந்த ஒரு இருண்ட வேளையில் தான் இந்தியாவிலிருந்து வந்த குருவின் ஒளி மிகுந்த செய்தி அவரது செவிகளில் விழுந்தது. தன் இதயத்திலிருந்து கனமான திரை அகற்றப்பட்டதை அவர் உணர்ந்தார். ஒரு நாள் இரவில் அவர் கடைசிச் சொற்பொழிவிலிருந்து திரும்பிய சமயம் அவரது மனத்தில் பேரமைதியை அவர் அனுபவித்தார். ஒரு ஆழ்ந்த அடிப்படை விதத்தில் அவர் ஒரு மாறிய மனிதராக ஆகியிருப்பதை அவர் உணர்ந்தார். அறைக் கண்ணாடியில் புதிய மனிதரான அவரது முகத்தைப் பார்க்க அவரது மனம் அவரைத் தூண்டியது. கண்ணாடியில் அவர் அவரது முகத்தைப் பார்க்கவில்லை. மாறாக அன்று மாலை அவர் சொற்பொழிவில் கண்ட ஹிந்து குருவின் முகத்தைக் கண்டார்.

ஆனந்த வெள்ளத்தில் அவர் மிதந்தார். சொலற்கரிய சந்தோஷ அலைகள் அவரை ஆட்கொண்டன. அதுவரை ஆனந்தம், அமரத்வம், நித்தியம், உண்மை, தெய்வீக அன்பு போன்றவை வெறும் சொற்களாக இருந்தவை கண்ணிமைக்கும் நேரத்தில் அவரது இருப்பின் மையமாக

தெரிந்தன. அவை அவரது வாழ்வின் சாரமாகவும், அடையக்கூடிய ஒரே உண்மையாகவும் தோன்றின. இந்த அழியாத ஆனந்த ஊற்று ஒவ்வொரு இதயத்திலும் உள்ளது. மனிதகுலத்தின் அழிவின் பின் இந்த அமரத்வம் உள்ளது. இந்த அழியாத அனைத்தையும் அரவணைக்கும் அன்பு படைப்பின் ஒவ்வொரு அணுவையும், துகளையும் தாங்கி சூழ்ந்துள்ளது என்பதை உணர்ந்ததானது அவரை மனமார நன்றி பாராட்ட வைத்தது.

இதை அவர் வெறும் தமது மனதுடன் மட்டுமல்லாது, இதய பூர்வமாக, உடலின் ஒவ்வொரு துகள், செல் பூர்வமாக உணர்ந்தார். இந்தக் கண்டுபிடிப்பின் உன்னதமான ஆனந்தம் அது வரை கோடிக்கணக்கான ஆண்டுகளாக அனுபவிக்கப்பட்டு வந்த துக்கத்தைப் பொருளற்றதாக்கியது. பாபம், துக்கம், மரணம் ஆகிய வார்த்தைகள் அர்த்தமற்ற வார்த்தைகளாயின. எழுகடல் ஆனந்தம் அவற்றை மூழ்கடித்தன.

## 16. உடல் கூறு மாற்றங்கள்

"தியானத்தில் முன்னேற்றம் தெரிந்தது முதல், அதைத் தொடர்ந்து சில மாதங்களுக்கு தன்னிடம் பல்வேறு உடற்கூறு மாற்றங்கள் ஏற்படுவதை அவர் உணர்ந்திருந்தார். இதில் மிகவும் அதிசயிக்கத்தக்க அம்சம் அவரது மூளையில் புதிய மூலக்கூறு அமைப்பு அல்லது புதிய செல் அமைப்பு உருவாவதை அவர் உணர்ந்தார். இரவு பகலாக தொடர்ந்து இந்த வேலை நடைபெறுவதை அவர் உணர்ந்தார். அவரது எண்ண செல்பாதைகளில் மின்சார துளைபோடுதல் போல அது இருந்ததாம். பிரபஞ்ச உணர்வு மனிதனின் இயற்கையான உணர்வு என்ற பக்கெயின் கொள்கையை இது திடமாக நிரூபிக்கிறது. ஏனெனில் இந்த சக்தியுடன் தொடர்புடைய மூளை செல்கள் ஏற்கனவே மனிதனிடம் உள்ளன என்பதற்கு இது சான்றாகிறது. ஆனால் மக்களில்

பெரும்பான்மையோரிடம் தற்சமயம் இந்த சக்தி செயல்படாமல் உள்ளது.

அவரது முதுகெலும்பில் மற்றொரு வியக்கத்தக்க மாற்றம் ஏற்பட்டது. அவரது முதுகுத்தண்டு முழுவதும் பலமாதங்களுக்கு இரும்பு போல மாறியதாம். ஏனெனில் இறை தியானத்திற்காக அவர் உட்கார்ந்தபொழுது ஆடாமல் அசையாமல் எந்தவிதமான உடல் செயலும் இன்றி மணிக்கணக்காக அவரால் அமர முடிந்தது. மற்றும் சில வேளைகளில் அமானுஷ்யமான ஆற்றல் அவரை ஆட்கொண்டது. அனைத்து பிரபஞ்சத்தையும் அவர் தன் தோள்களில் சுமப்பதாக உணர்ந்தார். வாழ்வின் அமிருதம், அமரத்தன்மையின் தேனமுதம் அவரது ரத்தக் குழாய்களில் திட்டவட்டமான ஒரு சக்தியாகப் பாய்வதை உணர்ந்தார். அவரது உடல் முழுவதும் பரவும் ஒரு பாதரச மின்திரவமாக அது தென்பட்டது.

## 17. அழியாத கொள்கைகள்

தெளிவின் ஆரம்ப மாதங்களில் உணவு, உறக்கத்தின் தேவையே அவருக்குத் தோன்றவில்லை. ஆனால் அவர் தமது அன்றாட வாழ்வின் நடைமுறையை எப்பொழுதும் போலவே தமது குடும்பத்தாருடன் இயல்பானதாக வைத்துக்கொண்டார். உணர்வு முழுவதும் தூய ஆன்மாவாக அவருக்குத் தென்பட்டது. தூங்குகையில் சொலற்கரிய ஆனந்தத்துடன் கூடிய அழியாப் பரம்பொருளின் திருக்கரங்களில் துயில்வதாக அவர் உணர்ந்தார்.

முன்பு அவர் அடிக்கடி ஜலதோஷத்தால் அவதிப்பட்டார். இடைவிடாது புகை பிடிக்கும் வழக்கமும் அவரிடம் இருந்தது. இப்பொழுது அவரது உடல் எல்லா வியாதியிலிருந்தும் விடுபட்டிருந்தது. புகைப்பதற்கான நாட்டமும் அவரிடம் முற்றிலும் மறைந்துவிட்டது. அவரிடம் ஏற்பட்டிருந்த

மாற்றத்தை அவரது குடும்பத்தாரும் உணர்ந்திருந்தனர் அவரது முகத்தில் பிரகாசம் தெரிந்தது. அவரது கண்கள் மகிழ்ச்சியால் ஒளிர்ந்தன. புதிய நபர்கள் ஏதோ ஒரு பரிவின் காரணமாக அவர்பால் ஈர்க்கப்பட்டனர். குழந்தைகள் அவரது மடியில் அமர்ந்து அன்பை வெளிப்படுத்துவர்.

பிரபஞ்சம் முழுவதும் அன்புக் கடலில் மிதப்பதாக அவருக்குத் தென்பட்டது. "கடைசியில் அன்பு என்றால் என்ன என்பதை நான் கண்டு கொண்டேன். இதுவே இறைவனின் அன்பு, அன்பு, வெல்ல முடியாத அன்பு, அனைத்தையும் தரும் அன்பு" என்று பலமுறை அவர் தனக்குத் தானே சொல்லிக் கொள்வார். சந்தேகத்துக்கு இடமின்றி அன்பே அனைத்தையும் ஆக்கி பிரபஞ்சத்தைக் காக்கிறது, படைக்கப்பட்ட அனைத்துயிர்களும் இந்த அழியாத அன்பை, வாழ்க்கையின் அடிப்படையை கண்டு கொண்டேயாக வேண்டும். அவரது மனம் பரந்து விரிந்து மென்மேலும் விரிவடைவதாகவும், பிரபஞ்சத்திலுள்ள அனைத்தையும் தன் பால் அடங்குவதாகவும் அவர் உணர்ந்தார். தாம் எங்கும் மையமாக உள்ளதாகவும், பாதியாக இல்லை என்பதையும் அவர் உணர்ந்தார்.

'அவர் சுவாசித்த காற்று உயிரை உணர்ந்த அன்புமயமாக இருந்தது. உலகம் முழுவதுமே அவரது 'வீடாக' தெரிந்தது. எந்த இடமும் அவருக்குப் புதியதாகத் தென்படவில்லை. அவர் அதுவரை பார்த்திராத மலைகள், கடல்கள், தொலைதூர இடங்கள் அனைத்தும் அவரது சிறுபிராயத்திலிருந்தே பார்த்துப் பழகியவை போலத் தென்பட்டன. பார்க்கும் இடமெங்கும் இயற்கையில் 'அனுவின் 'நடனத்தை' அவர் கண்டார். சுற்றியுள்ள காற்றில் ஒளித்துகள்கள் நிரம்பியுள்ளதை அவர் உணர்ந்தார்.

'இந்த மாதங்களில், வழக்கம்போல அவர் தமது அன்றாட காரியங்களில் ஈடுபட்டாலும் அதுவரை இல்லாத அளவு திறமை, மற்றும் வேகத்துடன் அவர் செயல்பட்டார். இந்தக் கால கட்டத்தில் அவர் கல்லூரி மாணவராக இருந்தார். புத்தகங்களைப் படிக்காமலேயே தமது தேர்வுகள் அனைத்திலும் தேர்ச்சி பெற்றார். அறிவுக் கடலில் அவர் மிதந்தார். டைப் செய்யப்பட்ட தாள்கள் மிகக் குறுகிய நேரத்தில் அவரது கையை விட்டுப் பறந்தன. அவற்றில் எந்தவிதப் பிழையும் இருக்கவில்லை. சோர்வே அவரிடம் தென்படவில்லை. அவரது காரியம் குழந்தை விளையாட்டாக இன்பகரமாகத் தோன்றியது. யாரிடமாவது போனில் பேசினாலும் அவரது உள் ஆனந்தம் பரிபூர்ணமாக வெளியில் தென்பட்டது. ஏனெனில் இந்த போன், இந்த மேஜை, இந்த ஒலி அனைத்துமே இறைவனின் வெளிப்பாடாகத் தென்பட்டன.

வேலை செய்து கொண்டிருக்கும்பொழுதே தமக்கு அபரிமிதமான அளவற்ற ஆனந்தத்தை அளித்த இறைவனின் கருணையை அவர் திடீரென்று உணர்வார். இந்தத் தருணங்களில் அவரது மூச்சே நின்றுவிட்டது போலத் தோன்றும். அவர் அனுபவித்த ஒருவித அச்சம் உள்ளும் புறமும் வியாபித்த அமைதியால் சூழப்பட்டது. காலமும் வெளியும் பொருளற்றதாயின. அவரது உணர்வின் அடித்தளத்தில் அளவற்ற, சொலற்கரிய நன்றி உணர்வு தென்பட்டது. அவற்றிற்கடிப்படையான ஆனந்தத்தை அனைவரும் உணரவேண்டும் என்ற ஒரு ஆவல் வெளிப்பட்டது. ஆனால் எல்லாவற்றிற்கும் மேலாக மனித அறிவிற்கு அப்பாற்பட்டதொரு உலகில் எல்லாமே நன்கு இயங்குகிறது, அனைத்துமே அழியாத ஆனந்த சொரூபமான பேருணர்விற்கே இட்டுச் செல்கிறது என்ற உணர்வு மேல் மட்டத்தில் இருந்தது.

ஏசுநாதர்களுக்கும் புத்தர்களுக்கும் உரிய இத்தகையதொரு கிரகத்தை, சுழலும் பிரபஞ்சத்திற்கு ஒரு துருவ நட்சத்திரம் போன்ற ஒரு இடமாக இந்த பூமியை சொர்க்கலோகமாக மாற்றவல்ல இத்தகைய பிரபஞ்ச உணர்வினைப் பெறும் ஒரு மனித இனத்தை டாக்டர் பக்கெயுடன் ஒருவர் கற்பனை செய்து பார்க்கலாம்.

பிரபஞ்ச உணர்வு அனுபவத்தைப் பெற்ற ஒருவரை உபநிடதங்கள் ஸர்வவித் (அனைத்தும் அறிந்தவர்) என்று குறிப்பிடுகிறது.

நமது பிறப்புரிமையான, மையமான, இலட்சியமான, குறிக்கோளான பிரபஞ்ச உணர்வு நிலையை நாம் அனைவரும் அடைவோமாக. அத்தகையவர் திருடர்கள் எவரும் திருடமுடியாத மாபெரும் ஆன்மீகச் செல்வத்தைப் பெற்றவராவார். வேலையில்லாத் திண்டாட்டம் இப்பொழுது தீர்ந்துவிட்டது, உலகத் துன்பங்கள் யாவும் ஒய்ந்துவிட்டன. இணையீடற்ற ஒளிமிக்க வாழ்க்கை உங்களுக்கு உண்டு. தேவைகளோ ஆசைகளோ, துன்பங்களோ, தொல்லைகளோ, பயமோ பீதியோ உங்களுக்குக் கிடையாது. அமரத்துவத்தையும் பேரின்பத்தையும் நீங்கள் அடைவீர்கள். அழியாப் பெருநிலையாகிய அமிருதத்தை பருகுங்கள். நித்திய ஆனந்தமும் அமைதியும் உடைய பெருநிலையை அடையுங்கள். துக்காராம், துளசிதாஸ், மீரா, கபீர், பிரஹ்லாதன், துருவன் போன்றோர் அடைந்த பெருநிலையை நீங்களும் அடையலாம்.

உங்கள் அனைவரிடமும் பக்திக் கனல் கொழுந்துவிட்டுப் பிரகாசிக்கட்டும்! இந்திரியங்களையும் அமைதியற்ற மனத்தையும் அடக்கவல்ல ஆன்மீக சக்தியை பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் உங்களுக்கு அளிப்பாராக! பாகவதர்களின் ஆசிகள் உங்கள் மீது மலர்வதாகுக!

## 18. இரண்டற்ற உணர்வு

சுத்த சச்சிதானந்த பரப்பிரம்மனின் உணர்வே இரண்டற்ற உணர்வாகும். அது பிரபஞ்ச உணர்விலும் மேலானதாகும். அர்ஜுனனுக்கு பிரபஞ்ச உணர்வு இருந்தது. ஹிரண்யகர்பனுக்கு பிரபஞ்ச உணர்வு உண்டு. ஆனால் இந்த இரண்டற்ற உணர்வு பிரபஞ்ச உணர்விலும் மேம்பட்டதாகும். அது வேதாந்திகளின் நிர்விகல்ப சமாதியாகும். அது ராஜயோகிகளின் அஸம்ப்ரக்ஞாத சமாதியாகும். இந்த சமாதியில் பார்ப்போன் - பார்வை - பார்க்கப்படுவது, அறிவோன் - அறிவு - அறியப்படுவது, தியானிப்போன் - தியானம் - தியானிக்கப்படுவது எனப்படும் திரிபுடி அல்லது மும்மை கிடையாது. இங்கு எதுவுமே இல்லை. திரிபுடி இல்லை. அது கிறிஸ்து-உணர்வு. நாமரூபங்கள் கிடையாது. ஒலியோ, நிறமோ கிடையாது. பொருளோ சக்தியோ கிடையாது. அது தூய பூரண உணர்வு. "இறைவனின் சாம்ராஜ்யம் உங்களுக்குள்ளேயே உள்ளது" என்று ஏசுநாதர் சொன்னார். ஆண்டவனின் சாம்ராஜ்யம் என்பது ஒரு இடமல்ல, அது ஒரு உணர்வு நிலையாகும். மனம், புலன்கள், அறிவு எல்லாம் செயல்படாத இரண்டற்ற உணர்வுநிலை அது. அது விவேகத்தின் இருப்பிடம். ஆழ்ந்த உறக்கத்தில் நாமரூபங்கள் கிடையாது. அது இரண்டற்ற உணர்வின் ஒரு கடைக்கண் பார்வை யாகும். ஆனால் அதில் அவித்தை, அறியாமை, காரண சரீரம், ஆனந்தமய கோசம் முதலியன உண்டு.

வேதாந்தத்தில் அத்வைத பாவனாரூப ஸமாதி, அத்வைத அவஸ்தாரூப சமாதி என்று இருவேறு ஸமாதி நிலைகள் உண்டு. சாதகர் 'அஹம் பிரம்மாஸ்மி', 'தத்த்வம் அஸி' என்னும் உபநிடத மகாவாக்கியங்களில் தியானம் செய்கிறார். ஆரம்ப நிலையில் அது அத்வைத பாவனாரூப நிலை எனப்படுகிறது. இரண்டற்ற உணர்வுடன் தன்னை

சாதகர் ஒன்றுபடுத்திக் கொள்ள முயல்கிறார். ஆனால் பின்னர் ஆழ்ந்த தியானம், இடைவிடாத நிதித்யாசனம் மூலம் தனது சச்சிதானந்த சொரூபத்தில் அவர் ஆழ்ந்திருக்கும் போது அது அத்வைத அவஸ்தாரூப சமாதி எனப்படுகிறது. அவர் முற்றிலும் இரண்டற்ற உணர்வில் லயித்து விடுகிறார். உருவம், பெயர், பொருள், சக்தி, எதுவும் கிடையாது. பரம்பொருள் மட்டுமே எஞ்சுகிறது. ஸ்ரீ சங்கரருக்கும், தத்தாத்ரேயருக்கும் இந்த அனுபவம் இருந்தது. மதாலஸைக்கு இந்த அனுபவம் ஏற்பட்டது. 'சுத்தோஸி, புத்தோஸி, நிரஞ்ஜனோஸி, ஸம்ஸார மாயா பரிவர்ஜிதோஸி என்று தொட்டிலில் கிடந்த தன் குழந்தைகளுக்கு அவள் தாலாட்டுப் பாடி அவர்களை ஜீவன் முக்தர்களாகவும், முக்தி பெற்ற முனிவர்களாகவும் ஆக்கினாள். 'சுத்தோஸி - குழந்தாய்! நீ தூயவன். புத்தோஸி - நீ ஞான மயமானவன். நிரஞ்ஜனோஸி - நீ பரிசுத்தமான வன் - காமம், பேராசை, அசுப வாசனை எதுவுமற்றவன். ஸம்ஸாமாயா பரிவர்ஜிதோஸி' மாயையினால் தீண்டப்படாதவன். இந்த மாயை உன்னைத் தீண்டாது, அவித்தை உன்னை அணுகாது. நீ தூயவன், சாஸ்வதமானவன், அழியாத ஆத்மன், என்று அவள் பாடினாள். யாக்ஞவல்கியர் இந்த அனுபவத்தைப் பெற்றிருந்தார். அவரது தாயின் கருப்பையில் அவர் இருக்கும்பொழுதே அவருக்கு ஞானம் ஏற்பட்டிருந்தது. சூடாலைக்கு இந்த அனுபவம் இருந்தது. அவள் ஒரு முனி, யோகி, யோக சக்திகள் அவளிடம் இருந்தன. அவள் வானத்தில் நடந்து தன் கணவனுக்கு முன் தோன்றினாள். பூமியில் படாமல் அவள் நின்று கொண்டு அவனுக்கு அவள் பிரம்மவித்தையைப் புகட்டினாள். ஸுலபை ஒரு ஞானி, முனி. அவள் ஜனகரை அணுகி தனது யோக சக்தியால் அவரது உடலினுள் புகுந்தாள். அவருக்கு தண்டி சுவாமிகளைப் பிடிக்காது. அவள் ஒரு தண்டி சுவாமி. அவள் அவருக்கு ஒரு பாடத்தைப் புகட்ட விரும்பினாள்.

தனது யோக சக்தியால் அவரது சூக்ஷ்ம சரீரத்தினுள் அவள் புகுந்த பொழுது சன்யாசினியான அவள் ஒரு ஆணின் உடலினுள் புகுந்தது பொருந்தாத செயல் என அவர் அவள் மீது குற்றம் சாட்டினார். அவள் அவருக்குப் பாடம் புகட்டினாள். "இன்னுமா உங்களுக்கு ஆண்- பெண் என்ற பாலுணர்வு இருக்கிறது. நீங்கள் மேலான ஞான நிலையை இன்னும் அடையவில்லை" என்றாள். உத்தாலகர் இந்த அத்வைத உணர்வைப் பெற்றிருந்தார். தனது சீடரான ஸ்வேதகேதுவிற்கு பிரம்மஞானத்தை அவர் பலவகைகளில் புகட்டினார். அஷ்டாவக்கிரர் ஒரு பிரம்மஞானி. அவர்தான் உணர்ச்சியூட்டும் அஷ்டாவக்கிரகீதையை எழுதியிருக்கிறார். அது உயர்ந்த பிரம்மானுபவத்திற்கு உங்களை இட்டுச் செல்லவல்லது. வியாஸர், வசிஷ்டர், சுகதேவர், கௌடபாதர், கோவிந்தபாதர், சனகர், சனந்தனர், சனத்குமாரர், சனத்சுஜாதர், ஹஸ்தாமலகர், பத்மபாதர், த்ரோடகாசார்யர், ஸுரேஸ்வராச்சார்யர், பட்டினத்தார், அப்பைய தீட்சிதர், நீலகண்டதீட்சிதர், சங்கரானந்தர், வித்யாரண்யர், சதாசிவ பிரம்மேந்திரர், ஜடபரதர், அகல்கோட் சுவாமி - அனைவரும் அத்வைத உணர்வைப் பெற்று விளங்கினர்.

உபநிஷதங்களில் பல்வேறு வாக்கியங்கள் உள்ளன : "ப்ரக்ஞானம் பிரம்ம", "அஹம் பிரம்மாஸ்மி", "தத் த்வம் அஸி", அயமாத்மா பிரம்ம", முதலாவது வாக்கியம் பிரம்மனின் லக்ஷணபோதவாக்கியம். இந்தப் பிரம்மன் யாது?

அது தூய உணர்வு. அடுத்து வருவது "தத் த்வம் அஸி". இது உபதேசவாக்கியம். குரு சீடனுக்கு "நீயே அது. நீ இந்த உடல், மனம் அல்ல. நீ இந்த அவித்தை மற்றும் எல்லா நாமரூபங்களுக்கு அப்பாற்பட்டவன். அவித்தையையும் மாயையும் இல்லாதாக்கி, தீயவிருத்திகளை அழித்து உடல் உணர்வைக் கடந்தால், உன் சொந்த சொரூபத்தில் நீ

லயிக்கலாம்", என்று போதிக்கிறார். பின்னர் "அஹம் பிரம்மாஸ்மி" சூத்திரத்தில் சீடன் தியானிக்கிறான். இது அனு ஸந்தான வாக்கியம். அதன் பின் வருவது"அயமாத்மா பிரம்ம" இந்த ஆத்மன் பரப்பிரம்மனுடன் ஒன்றியதே இது அனுபவ வாக்யம்.

உபநிஷதத்தில் மற்றொரு வகை வாக்கியம் உள்ளது. இது அவாந்தர வாக்கியம். வாழை மரத்தில் நீங்கள் பழத்தைப் பெறுவதற்கு முன்னால் அதனது இலை, தண்டு, பூ போன்றவற்றை நீங்கள் பயன்படுத்துகிறீர்கள். இது 'அவாந்தரம்' எனப்படுகிறது."இடைவெளியில்" - பழத்தைப் பெறுவதற்கு முன், இலை, தண்டு, பூவைப் பயன்படுத்து கிறோம். இதைப் போலவே, முழு ஞானத்தை அடைவதற்கு முன் நீங்கள்'ஸச்சிதானந்தம்' 'ஸத்யம், ஞானம், அனந்தம் பிரம்ம, என்பதில் தியானிக்கிறீர்கள். பிரம்மன் என்பது இருப்பின் பூரணம், அறிவின் பூரணம், ஆனந்தத்தின் பூரணம்.

இதை அடுத்து அபேதபோத வாக்கியங்கள் உள்ளன. ஜீவாத்ம - பரமாத்ம ஐக்கியத்தைப் பற்றி அவை பேசுகின்றன. அவதூத கீதையில் தத்தாத்ரேயர்,"வேதாந்த ஸார ஸர்வஸ்வம் ஞானம் விக்ஞான மேவ ச, அஹமாத்மா நிராகார ஸர்வவ்யாபீ ஸ்வபாவத : "- நான் எங்கும் நிறைந்த உருவமற்ற ஆன்மா. இதுவே வேதாந்த சாரம்" என்று கூறுகிறார். "அஹமாத்மா நிராகார ஸர்வவ்யாபீ ஸ்வபாவத: " - இந்த சூத்திரத்தில் நீங்கள் தியானிக்கலாம். அபேத போத வாக்கியங்கள் அநேகம் உள்ளன. ஒவ்வொரு சாதகருக்கும் ஒவ்வொரு வாக்கியம் பிடிக்கும்.

பூமா, சதாசிவ, சைதன்ய எது தன்னையும் அறிந்து ஏனையவற்றையும் அறிகிறதோ அது சைதன்யம். தன்னையும் ஏனையவற்றையும் அறியாதது எதுவோ அது ஜடம். 'அஹம் ஸாக்ஷீ' - நான் மனம், புத்தி மற்றும்

புலன்களின் மோனசாட்சி – அவஸ்தாத்ரய சாக்ஷீ" - மூன்று நிலைகளின் சாட்சி நான். இது மற்றொரு அருமையான வாக்கியம் "சிவோஹம், சிவோஹம், சிவ : கேவலோஹம்". இங்கு சிவம் என்பது திரிசூலதாரியான சிவனைக் குறிக்கவில்லை. பரப்பிரம்மத்தைக் குறிக்கிறது. "ஸோஹம்"- அவனே நான். இது மற்றொரு நல்ல வாக்கியம். "நானே அவன்; அவனே நான்"- "ஹம்ஸ ஸோஹம், ஸோஹம் ஹம்ஸ : "ஒரு சூத்திரத்தை நேராகவும், மாற்றியும் உச்சரிக்கையில் மகத்தானதொரு சக்தி உண்டாகிறது." கடவுளே அன்பு, அன்பே கடவுள்" "கடவுளே உண்மை; உண்மையே கடவுள்" என்பது போல ஸ்ரீரமணமகரிஷி காலத்தில் அவருடன் மற்றொரு முனிவர் வாழ்ந்து வந்தார். அவரது பெயர் சேஷாத்ரி சுவாமிகள். "ஹம்ஸ ஸோஹம், ஸோஹம் ஹம்ஸ :' என்ற சூத்திரம் அவருக்கு மிகவும் பிடிக்கும்.

"சிவோஹம், சிவோஹம், சிவோஹம், ஸோஹம்,
ஸத்சித் ஆனந்த ஸ்வரூபோஹம்"

இது ஒரு மிக அழகிய சூத்திரம். தொடர்ந்த நிதித்யாசனம் மற்றும் தியானத்திற்கு எந்த ஒரு சூத்திரத்தையும் நீங்கள் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். மனம் ஒன்றுபட 'ஸச்சிதானந்தம்' மிகவும் உகந்தது.

தத்தாத்ரேயரின் அவதூத கீதையில் நான்கு அடிப்படை சுலோகங்கள் உள்ளன. அதில் அவர் தம் அனுபவத்தையே கூறுகிறார். வேதாந்த சாதகர்களுக்கு இவற்றினைத் தியானிப்பது மிகுந்த நன்மை பயக்கும். கீழ்க்காணும் சுலோகங்களே அவை :

ஜன்ம ம்ருத்யுர்ந தே சித்தம் பந்தமோக்ஷௌ சுபாசுபௌ!
கதம் ரோதிஷி ரே வத்ஸ நாமரூபம் ந தே ந மே!

என் குழந்தாய்! ஏன் அழுகிறாய்? உனக்கு ஜன்மமோ, மரணமோ கிடையாது. பந்தமோ, மோட்சமோ, நன்மையோ,

தீமையோ கிடையாது. எழுந்திரு. கங்கணம் கட்டிக் கொள். மனம் மற்றும் புலன்களுடன் போரிட்டு உங்கள் சொந்த சச்சிதானந்த சொரூபத்தில் லயித்திருங்கள். நாம ரூபம் கிடையாது. உலகம் உங்களிடம் இல்லை. அது வெறும் சங்கல்பமே.

*அஹமேவாவ்யயோஅனந்த சுத்தவிக்ஞான விக்ரஹ :!*
*ஸுகம் துக்கம் ந ஜானாமி கதம் கஸ்யாபி வர்ததே!*

நான் அவ்யயன் - அழியாதவன்; அனந்த - எல்லையற்றவன், சுத்த விக்ஞான விக்ரஹ - தூய உணர்வு சொரூபம், பிரக்ஞான கன, ஆனந்த கன. அறிவுப் பொருண்மைக்கு முன் மலையின் பொருண்மை ஒரு பொருட்டன்று. ஸ்தூல மலை திடப்பொருள் போலத் தென்படுகிறது. ஆனால் அவனது ஆத்மஞானம் இமயமலையைக் காட்டிலும் திடமானது. எனவே அது ப்ரக்ஞான கன, ஆனந்த கன, விக்ஞான கன, சித்கன எனப்படுகிறது. எது ஸுகம், எது துக்கம் என்று எனக்குத் தெரியாது.

*ந மானஸம் கர்ம சுபாசுபம் மே*
*ந வாசிகம் கர்ம சுபாசுபம் மே*
*ந காயிகம் கர்ம சுபாசுபம் மே*
*ஞானாம்ருதம் சுத்த மதீந்த்ரியோஹம்!*

இந்த மூன்றாவது சுலோகத்தை தியானியுங்கள். கர்ம பந்தங்களிலிருந்து நீங்கள் விடுபடுவீர்கள். மனச் செயல்கள் உங்களிடம் இல்லை சரீரத்தின் செயல்கள் உங்களிடம் இல்லை. வாக்கின் கர்மங்கள் உங்களிடம் இல்லை. தூய்மை, அமிருதம், புலன்கள் கடந்தது - இதுவே உங்கள் அடிப்படை, தெய்வீக, பிரம்ம நிலை.

பிறகு அவன் உலகம் முழுவதையும் மறுக்கிறான். தன் சொந்த சொரூபத்தில் எவன் நிலைபெற்றிருக்கிறானோ, அவனுக்கு நாம ரூபங்கள் மற்றும் உலகம் இல்லாதாகிறது.

*மஹதாதி ஜகத் ஸர்வம் ந கிஞ்சித் பிரதிபாதி மே*
*ப்ரம்மைவ கேவலம் ஸர்வம் கதம் வர்ணாசிரமஸ்திதி :!*

பூரணத்தின் முதல் தோற்றம் மஹத் ஆகும். அதன் பின் மனம், புலன்கள், தன் மாத்திரைகள், பஞ்ச பூதங்கள் அனைத்தும் தோன்றின. ஐம்பூதங்களின் விரிவு உலகைத் தோற்றுவித்தன. வர்ணம் எங்கே, ஆசிரமங்கள் எங்கே, நான்கு வகை பிரிவு எங்கே? எல்லாமே பிரம்மம். உலகம் இல்லை. இதுவே ஞானி அல்லது முனிவனின் மிக உயர்ந்த நிலை.

எனவே நாம் சாதன சதுஷ்டயம், சுருதிகளைக் கேட்டல், விசாரணை, தியானம் மூலம் இரண்டற்ற உணர்வு நிலையை அடைய முயல்வோமாக. இந்த சூத்திரங்களை தியானித்து, விசாரம் செய்து, ஜீவன் முக்தியாம் மேலான நிலையை அடைந்து நம் சொரூபத்தில் லயித்து நின்று நம் தொடர்பில் உள்ளவர் அனைவருக்கும் அமைதியையும் ஆனந்தத்தையும் அளித்து உலகின் எல்லா பாகத்திற்கும் ஆனந்தத்தையும் சாந்தியையும் பரப்புவோமாக.

அத்யாயம் மூன்று

# தியானத்தில் அனுபவங்கள்

## 19. தியான நிலையில் பொதுவான அனுவங்கள்

தியானத்தின் ஆரம்ப நிலையில் சிவப்பு, வெள்ளை, நீலம், பச்சை, சிவப்பு பச்சை கலந்த பல்வேறு ஒளிகள் நெற்றியில் தோன்றுகின்றன. அவை தன் மாத்திரை ஒளிகளாகும். ஒவ்வொரு தத்துவத்திற்கும் அதற்கேற்ற பிரத்யேக நிறம் உண்டு. மண் தத்துவத்தின் நிறம் மஞ்சள். நீர்த்தத்துவத்தின் நிறம் வெள்ளை. அக்னிக்குச் சிவப்பு, காற்றிற்கு பச்சை நிறம். ஆகாயத்திற்கு நீல நிறம். வண்ண ஒளிகள் இந்த தத்துவங்களாலேயே உண்டாகின்றன.

சில சமயங்களில் பெரிய சூரியன் அல்லது சந்திரன் அல்லது மின்னலைப் போன்ற ஒளிக்கீற்றுக்கள் நெற்றியின் முன்புறம் தியானத்தின் போது தோன்றுகின்றன. இந்த தோற்றங்களைப் பொருட்படுத்தாதீர்கள். அவற்றைப் புறக்கணியுங்கள். இந்த ஒளிகளின் உற்பத்தி ஸ்தானத்தை நோக்கி மூழ்கிச் செல்லுங்கள்.

சில சமயங்களில் தேவர்கள், ரிஷிகள், நித்திய சித்தர்கள் தியானத்தில் தோன்றுவார்கள். அவர்களை மதிப்புடன் வரவழையுங்கள். அவர்களை வணங்குங்கள். அவர்களிடமிருந்து அறிவுரைகளைப் பெறுங்கள். உங்களுக்கு உதவி உங்களை உற்சாகப்படுத்தவே அவர்கள் தோன்றுகின்றனர்.

தியானம், மன ஒருமைப்பாட்டின் ஆரம்பத்தில் நெற்றி மத்தியில் பேரொளி ஒன்று தோன்றுவதை நீங்கள் காண்பீர்கள். இது அரைநிமிடம் அல்லது ஒரு நிமிடத்திற்கு

இருந்து மறைந்துவிடும். இந்த ஒளி மேலிருந்தோ அல்லது பக்கவாட்டிலிருந்தோ வரும். சில சமயங்களில் ஆறு அல்லது எட்டு அங்குலம் விட்டமுள்ள சூரியன் கதிர்களுடனோ அல்லது கதிர்களின்றியோ காணப்படும். உங்கள் குரு அல்லது வழிபடு தெய்வமும் தோன்றலாம்.

ஆத்மாவின் அரிய காட்சி கிட்டுகையில், கண்ணைக் கூசும் ஒளி தோன்றுகையில், இது போன்ற அசாதாரணமான ஆன்மீக அனுபவங்கள் தோன்றும் போது நீங்கள் பயந்து பின் வாங்க வேண்டாம். சாதனையை விட்டுவிடாதீர்கள். அவற்றைக் கற்பனை என்று கருதவேண்டாம், தைரியமாயிருங்கள். மகிழ்ச்சியுடன் முன்னேறுங்கள்.

தியானத்தின்போது உங்களுக்கு கால அளவைப் பற்றிய உணர்ச்சி இருக்காது. எந்த ஒலியையும் நீங்கள் கேட்கமாட்டீர்கள். சூழ்நிலையைப் பற்றிய எந்த எண்ணமும் உங்களிடம் இருக்காது. உங்கள் பெயரையும், ஏனையோருடன் உங்களுக்கு உள்ள தொடர்பையும் பற்றி நீங்கள் மறந்து விடுவீர்கள். அமைதியையும் ஆனந்தத்தையும் நீங்கள் அனுபவிப்பீர்கள். படிப்படியாக நீங்கள் சமாதியில் லயிப்பீர்கள்.

ஆரம்பத்தில் ஒருவர் சிறிதுநேரம் ஆனந்த நிலையில் இருப்பார். பின் கீழே வருவார். இடைவிடாத பயிற்சியினால் தியானம் தொடருகையில் அவர் எப்பொழுதுமே அந்த உயர்ந்த நிலையில் இருக்க முடியும். பிறகு சரீர எண்ணமே முழுவதுமாக மறைந்துவிடும்.

நீங்கள் ஆழ்ந்த தியானத்தில் புகுகையில் உங்களது உடலைப் பற்றியோ அல்லது சூழ்நிலையைப் பற்றியோ உங்களுக்கு எந்தவித எண்ணமும் இருக்காது. மனம் சமநிலையில் இருக்கும். எந்த ஒலியையும் நீங்கள்

கேட்கமாட்டீர்கள். மேலே கீழே போகும் புலன் அனுபவங்கள் நின்று விடும். அஹங்கார உணர்வும் படிப்படியாக மறையும். சொல்லொணா மகிழ்ச்சியையும் ஆனந்தத்தையும் நீங்கள் அனுபவிப்பீர்கள். படிப்படியாக சிந்தனையும் விசாரமும் மறையும்.

ஆழ்ந்த தியானத்தின் மூலம் நீங்கள் மௌனத்தில் புகும் பொழுது, புற உலகம் மற்றும் உங்களது அனைத்து தொல்லைகளும் இல்லாமலாகும். நீங்கள் மேலான அமைதியை அனுபவிப்பீர்கள். இந்த மௌனத்தில் பரஞ்ஜோதி இருக்கிறது. இந்த மௌனத்தில் அழியாத ஆனந்தம் இருக்கிறது. இந்த மௌனத்தில் உண்மையான ஆற்றலும் ஆனந்தமும் இருக்கின்றன.

நீங்கள் தீவிர தியானம் செய்கையில் கேவல கும்பகம் எனப்படும் பூரகம் (உள் மூச்சு), ரேசகம் (வெளிமூச்சு) இல்லாத சுவாசம் தானே வரும். கேவல கும்பகம் வருகையில் நீங்கள் உயரிய அமைதியை அனுபவிப்பீர்கள். ஒருமுகப்பட்ட மனமும் வாய்க்கும்.

சுருதிகள், ஸ்மிருதிகளில் சொல்லியவாறு யார் இடையறாத கடமைகளில் ஈடுபடுகிறார்களோ, யார் சுயநலமற்று இருக்கிறார்களோ, யார் பரப்பிரம்ம நாட்டம் கொண்டு விளங்குகிறார்களோ அவர்களுக்கு ஆன்மா மற்றும் உயர் விஷயங்களுடன் தொடர்புடைய ரிஷிகளின் காட்சிகள் கிட்டும்.

ஆழ்ந்த தியானத்தின் போது ஒருவனுக்குப் புற உலகம் மற்றும் உடல் பற்றிய உணர்வே இல்லாது போய்விடுகிறது.

தியானத்தின்போது சரீரம் மேலே எழும்புவது போன்ற உணர்வு நீங்கள் உடல் உணர்ச்சியைத் தாண்டிச் செல்கிறீர்கள் என்பதை காட்டுகிறது. இந்த உணர்வின்போது நீங்கள் ஒருவித பிரத்யேக ஆனந்தத்தை அனுபவிப்பீர்கள்.

ஆரம்பத்தில் இந்த மேலெழும் உணர்வு ஒரு நிமிடம் மட்டுமே நீடிக்கும். ஒரு நிமிடத்திற்குப் பிறகு மீண்டும் நீங்கள் யதார்த்த நிலைக்கு திரும்பிவிட்டதாக உணர்வீர்கள்.

தியானத்தின்போது, விவரிக்க முடியாததொரு அமைதியை நீங்கள் அனுபவிப்பீர்கள். ஆனால் பூரணமாக உடல் உணர்விற்கு மேல் போவதற்கோ, உண்மையான ஆன்மீக அனுபவத்தை அடைவதற்கோ தியானத்தில் விரும்பியதைப் பெறுவதற்கோ, உங்கள் லட்சியத்தில் மனதை லயிக்க வைப்பதற்கோ உங்களுக்கு சிறிது காலமாகலாம். பொறுமையுடனிருங்கள். தொடர்ந்து முயலுங்கள். உங்களுக்கு வெற்றி கிட்டும்.

தியானத்தின் பொழுது மனம் நிலைபெற்று அமைதியடைகிறது. மனதின் பல கதிர்கள் சேர்க்கப்பட்டு தியானிக்கப்படும் பொருளில் ஒருமுகப்படுத்தப்படுகிறது. மனம் லக்ஷ்யத்தில் மையப்படுத்தப்படுகிறது. அப்பொழுது மனம் அலைபாயாது. ஒரே எண்ணமே மனத்தில் நிலவும். மனதின் சக்தி முழுவதும் அந்த ஒரே எண்ணத்தில் ஒருமுகப்படுத்தப்படுகிறது. புலன்கள் அமைதி அடைகின்றன. அவை செயல்படுவதில்லை. எங்கே ஆழ்ந்த ஒருமைப்பாடு உள்ளதோ அங்கே உடல் மற்றும் சூழ்நிலையைப் பற்றிய உணர்வே இருக்காது. எவரிடம் நல்ல மன ஒருமைப்பாடு நிலவுகிறதோ அவருக்கு கண்ணிமைக்கும் நேரத்தில் இறைவனின் காட்சி கிட்டும்.

உங்கள் தியானம் ஆழ்ந்ததாகும் போது உங்களுக்கு சரீர உணர்வு இருக்காது. சரீரமே இல்லாதது போல தோன்றும். சொலற்கரிய ஆனந்தத்தை நீங்கள் அனுபவிப்பீர்கள். மன உணர்வு மட்டுமே இருக்கும். சிலருக்கு காலில், பிறகு முதுகெலும்பில், உடலில், கைகளில் உணர்ச்சி மரத்துப்போகும். இந்த பாகங்களில் உணர்ச்சி மரத்துப் போகும் பொழுது தலை அந்தரத்தில் தொங்குவது போல

நீங்கள் உணர்வீர்கள். மனம் திரும்ப சரீரத்தினுள் புகுவது போலத் தோன்றும்.

தியானத்தின்போது நீங்கள் சிறு ஒளிப் புள்ளிகளைக் காண்பீர்கள். உங்களது பயிற்சியை தொடருகையில் இந்த ஒளிப்புள்ளிகள் பெரிதாகி சூரியனின் அளவை அடையும். ஸ்ரீ கிருஷ்ணர், விஷ்ணு, லக்ஷ்மி, காளி, கணேசர், ஸ்ரீ ராமர் போன்ற தெய்வீக ஒளி உருவங்களையும் நீங்கள் காண்பீர்கள். அழகான தோட்டங்கள் மற்றும் கட்டடங்களின் காட்சிகளை நீங்கள் காண்பீர்கள். காயத்ரி போன்ற ஒரு மந்திரத்தை நீங்கள் பாராயணம் செய்யும்பொழுது மூலாதார சக்ரம் இருக்கும் குதப்பகுதிக்கு ஆன்மீக சக்தி பாய்வதை உணர்வீர்கள். பிறகு அந்த மின் ஓட்டம் தலைக்கும் செல்லும். மிகுந்த சந்தோஷத்தை நீங்கள் அனுபவிப்பீர்கள். உங்கள் இதயம் அதிகமான அன்பினால் நிரம்பி வழியும். தியானத்தின் பொழுது சக்திவாய்ந்த ஆன்மீக மின்னோட்டம் முதுகுத் தண்டு வழியாக மேல் நோக்கிச் செல்வதாக நீங்கள் உணர்வீர்கள்.

உங்களிடமிருந்து சக்தி நாற்புறமும் பரவுவதாக நீங்கள் உணர்வீர்கள். இப்பொழுது உங்கள் உணர்வு ஆழ்ந்ததாக இருக்கும். இறை எண்ணங்கள் உடலில் ஆன்மீக மின் ஓட்டத்தை உண்டு பண்ணும். இந்த மின் ஓட்டங்களை தடுக்காதீர்கள். தலையில் உஷ்ணம் உண்டாகுமானால், வெண்ணை, அம்லா அல்லது பிரம்மி (வல்லாரை) எண்ணையை தேயுங்கள். கோடை காலத்தில் குளிர்ந்த நீரில் மூன்று முறை ஸ்நானம் செய்யுங்கள். வெண்ணையையும், சர்க்கரையையும் சாப்பிடுங்கள்.

சில சமயங்களில் உங்களுக்கருகில் உங்களது இஷ்ட தெய்வம் இருப்பதாக உணர்வீர்கள். ஒழுங்கான தியானத்தில் நீங்கள் ஈடுபட்டால் அந்த உருவம் உயிருடன் இருப்பது போலவே தோன்றும். அந்த தெய்வத்தில் மனத்தை லயித்து

கண்களை மூடி உங்கள் இதயத்தில் குடி கொண்டிருப்பதாக நீங்கள் எண்ணினால் அந்த உருவம் மென்மேலும் ஒளி பொருந்தியதாக அமையும். திறந்த கண்களுடன் கூட ஒளிமிக்க சூரியன் அல்லது சந்திரனை நீங்கள் காண்பீர்கள். பல வண்ணங்களில் ஒளிகளைக் காண்பீர்கள்.

குதத்திலும், முதுகெலும்பின் அடிப்பாகத்திலும் மேல்நோக்கிய உந்து விசையை நீங்கள் உணர்வீர்கள். சில சமயங்களில் முதுகெலும்பின் கீழ் பாகத்தில் கலகலப்பு உணர்வை நீங்கள் அனுபவிப்பீர்கள். உங்களிடம் விரைவில் ஏதோ மாற்றம் ஏற்படப்போவதை நீங்கள் உணர்வீர்கள்.

கனவில் நீங்கள் உங்கள் உடலை விட்டு வெளியே வருவது போல உணர்வீர்கள். முதுகெலும்பின் அடியில் அதிகமான அழுத்தத்தை நீங்கள் அனுபவிப்பீர்கள்.

மூடிய கண்களுடன் நீங்கள் தியானிக்கும் போது உங்கள் உடலில் ஒளிமிக்க தாமரைகளுடன் கூடிய இரண்டு சரங்கள் தொங்கவிடப்பட்டது போலவும், அந்த பூச்சரம் உங்கள் இதயத்தில் அமர்ந்துள்ள இஷ்டதெய்வத்தின் வழியாக செல்வது போலவும் உணர்வீர்கள்.

உயர் தியான வாழ்வினுள் புகுவது என்பது கடவுளின் கிருபையைப் பொறுத்தே அமைகிறது.

உயர் தியான வாழ்க்கைக்கு பெருமளவு அடக்கம், தைரியம் மற்றும் அமைதி தேவை.

உயர் தியான வாழ்க்கையில் மனமும் புலன்களும் பூரணமாக அடக்கப்படுகின்றன. மனம், உணர்ச்சிகள் மற்றும் கற்பனைகள் அங்கு செயல்படா.

உயர் தியானத்தில் யோகி முழுவதுமாக தன்னை உள்ளிழுத்துக் கொள்கிறார். மனம், புத்தி கடந்த உணர்வு

நிலையில் புகுகிறார். தூய இருப்பை மட்டுமே அவர் உணர்கிறார்.

சமாதி அல்லது உணர்வு கடந்த நிலையில் யோகி தாம் இருப்பதையே மறந்து கடவுளின் இருப்பிலேயே லயமாய்விடுகிறார்.

உங்களது ஆன்மீக அனுபவத்தில் படிப்படியாக உள்முக மலர்ச்சி ஏற்படுகிறது. பொறுமையாக காத்திருங்கள். தூய்மையுடனும் தைரியத்துடனும் உங்கள் சாதனையை தொடருங்கள்.

நீங்கள் எப்பொழுது தயாராய் இருக்கிறீர்களோ அப்பொழுதுதான் ஆன்மீக அனுபவம் உங்களிடம் வரும், அதற்கு முன்பு அல்ல.

உங்கள் ஆன்மீக பாதையில் தொடர்புடையது ஒன்று மற்றதை ஈர்க்கிறது. எந்தநிலையிலும் நீங்கள் தனியே விடப்படுவதில்லை. உலகின் பல பாகங்களிலுமிருந்தும் யோகிகள், முனிவர்களிடமிருந்து நீங்கள் உதவியைப் பெறுவீர்கள். அவர்களது ஆன்மீக அலைகள் உங்களை ஊக்கி உற்சாகப்படுத்தும்.

ஒளிமிக்க ஜோதி சாம்ராஜ்யத்தினுள் தியானித்து உட்புகுங்கள். இங்கே எந்தவித தடைகளும் கிடையாது. கவலை கிடையாது. இடையூறுகள் கிடையாது. காலம், வெளி கிடையாது. இந்த தூய சாம்ராஜ்யத்தில் பயம், சந்தேகம், குழப்பம் எதுவும் கிடையாது. எல்லாம் இன்பம், ஆனந்தம், அமைதி தான்.

உங்கள் தியானத்தைத் தொடருங்கள். உங்கள் குதமும், தலை உச்சியில் உள்ள ஒரு புள்ளியும் தியானக் கயிறுகளால் இணைக்கப்பட்டதாக உணர்வீர்கள். சரீர உணர்வு அற்றுப் போவதாக நீங்கள் உணர்வீர்கள். பயப்படவேண்டாம். தைரியமாயிருங்கள். அற்புத ஆன்மீக அனுபவம் ஏற்படும்.

விஸ்வரூபதரிசனம் உங்களுக்குக் கிட்டும். இப்பொழுது உங்கள் கண்களைத் திறக்காதீர்கள். சாதாரண நிலைக்கு நீங்கள் திரும்ப வருவீர்கள்.

உங்கள் இதயத்தில் தூய உணர்ச்சிகள் எழும். அனைத்துயிரையும் நீங்கள் நேசிக்க ஆரம்பிப்பீர்கள். உலகம் முழுவதும் தூய உணர்வு அன்றி வேறு அல்ல என்பதை நீங்கள் உணர்வீர்கள். பாத்திரங்களில் பொருள்கள் இருப்பது போல, மேஜைகள், நாற்காலிகள், ஆண்கள், பெண்கள் மற்ற எல்லாப் பொருள்களும் இந்த உணர்வைப் பெற்றிருப்பதாக நீங்கள் உணர்வீர்கள். எல்லாப் பொருள்களும் இந்த உணர்வினால் ஆக்கப்பட்டிருப்பதாக நீங்கள் உணர்வீர்கள். இந்த அரிய அனுபவம் உங்களுக்குப் பேரானந்தத்தை அளிக்கும். கடவுள் அனைத்திலும் இந்த உணர்வு வடிவில் விளையாடுவதாக நீங்கள் உணர்கிறீர்கள் உங்களைச் சுற்றியுள்ள பொருள்களின் திட உணர்வை நீங்கள் உண்மையில் இழந்துவிடுவீர்கள்.

ஸாகார அனுபூதி அல்லது அனாஹத சக்கரத்தில் பாவசமாதியை நீங்கள் அனுபவிப்பீர்கள். ஸஹஸ்ராரத்தில் நீங்கள் நிர்விகல்ப ஸமாதியை அனுபவிப்பீர்கள்.

ஒழுங்கான, முறையான தியானத்தின் மூலம் நீங்கள் அனைவரும் உயர்ந்த நிலையான நிர்விகல்ப ஸமாதி நிலையை அடைவீர்களாக.

## 20. தியானத்தில் பல்வேறு காட்சிகள்

காட்சிகளும் அனுபவங்களும் வரும், போகும். சாதனையில் அவை முடிந்த நிலையாகமாட்டா. இந்த சிறிய காட்சிகளுக்கு முக்கியத்துவம் அளிப்பவர்கள் சாதனையில் முன்னேறுவதில்லை. எனவே இந்த அனுபவங்கள் பற்றிய எண்ணத்தை விட்டுவிடுங்கள். உள்ளார்த்தமான நேரடியான பரம்பொருள் அனுபவம் ஒன்றே உண்மையானது.

காட்சிகளைத் தாண்டிச் செல்லுங்கள். தியானத்தின் பொழுது நீங்கள் காணும் காட்சிகள் சமாதி அல்லது இறை உணர்விற்கு ஒரு தடையாகும். அவற்றை நீங்கள் காண்கையில் மனமானது கடவுளுக்குப் பதிலாக அந்தக் காட்சிகளிலேயே லயித்து நிற்கும். இந்தக் காட்சிகள் மற்றும் அவற்றைப் பற்றிய எண்ணங்களையே தவிருங்கள். அவற்றைப் பொருட்படுத்தாதீர்கள். அவற்றிற்குப் பதிலாக இறைவனை நினையுங்கள்.

சில வேளைகளில் ஒளியுடன் கூடிய சில தேவதைகள் அல்லது வேறு சில உருவங்களை நீங்கள் காண்பீர்கள். உங்கள் இஷ்ட தெய்வம் அல்லது குருவை நீங்கள் காண்பீர்கள். ஸித்தர்கள், ரிஷிகள் போன்றவர்கள் உங்களை உற்சாகப்படுத்துவதற்காக உங்களுக்குக் காட்சி கொடுப்பார்கள். அழகான தோட்டங்கள், பெரிய மாளிகைகள், நதிகள், மலைகள், தங்கக் கோவில்கள், வார்த்தைகளால் விவரிக்கமுடியாத கண்ணைக் கவரும் காட்சிகளை நீங்கள் காண்பீர்கள்.

தீவிரமான மன ஒருமைப்பாட்டின்போது மூலாதார சக்கரத்திலிருந்து மின்சாரம் பாய்வது போன்ற உணர்வுகளை சிலர் பெறுவார்கள். உடனே அவர்கள் தங்கள் உடலை அசைத்து பயத்தின் காரணமாக பௌதிக உணர்வு நிலைக்குத் திரும்பிவிடுகின்றனர். அவர்கள் பயப்படவேண்டிய தேவையே இல்லை. அவர்கள் தொடர்ந்து அடுத்த அனுபவத்திற்காக காத்திருக்கலாம்.

அனுபவங்கள் பலரிடமும் பலவிதமாக வேறுபடுகின்றன. ஒருவரது அனுபவம் அடுத்தவரது அனுபவத்திலிருந்து வேறுபடும். இத்தகைய அனுபவங்களைப் பெறும் பொழுது பலரும் தாங்கள் ஆத்மானுபூதி பெற்றுவிட்டதாகவே கருதி சாதனையை நிறுத்திவிட்டு பொதுமக்களுக்கு போதிக்கத் தொடங்கி உலக நன்மையில் ஈடுபடுகின்றனர். இது ஒரு

பெரும் தவறாகும். இது அனுபூதியே ஆகாது. இதற்கும் மேலாக ஒரு ஆன்மீக வாழ்க்கை உண்டு என்று உங்களை நம்ப வைத்து அதை நோக்கி உங்களை உற்சாகப்படுத்தி இட்டுச் செல்வதற்காக உங்களது இஷ்ட தேவதை உங்களுக்கு அளிக்கும் ஊக்கமே இது. லௌகிக பொருள்களை நீங்கள் உதாசீனப்படுத்தியது போல இவற்றையும் நீங்கள் அலட்சியப்படுத்தவேண்டும். இந்தக் காட்சிகளை நீங்கள் பெறுகையில் சிறிது கூட அவற்றை நீங்கள் பொருள் படுத்தக்கூடாது. இலட்சியத்திலேயே நீங்கள் குறியாயிருக்க வேண்டும். சிலரிடம் இந்தக் காட்சிகள் சில நாட்களில் . தோன்றும். வேறு சிலரிடம் இது 6 அல்லது 9 மாதங்களாகலாம். அது மனநிலை மற்றும் ஒருமைப்பாட்டின் தரத்தைப் பொறுத்தது. சிலருக்கு இத்தகைய அனுபவங்களே ஏற்படாது. ஆனாலும் அவர்கள் ஆன்மீகப் பாதையில் முன்னேறிக் கொண்டிருப்பர்.

காட்சிகள் பொருள்களைச் சார்ந்தவை அல்லது சாராதவை. உங்கள் மனத்தின் சிருஷ்டிகளே. சூக்ஷ்மலோகத்துடன் தொடர்பு உடையவை. பொருள்களின் அடர்த்தியில் வேறுபடும் பல்வேறு லோகங்களைக் கொண்டது இந்தப் பிரபஞ்சம். தன்மாத்திரைகளின் பல தரங்களில் ஒழுங்கான அசைவினால் பல லோகங்கள் உண்டாகின்றன. காட்சிகள் இந்தப் பொருள்களினாலோ அல்லது உயிர்களினாலோ அமையும். அல்லது பல சமயங்களில் அவை முழுக்கவும் கற்பனையாக இருக்கும். உங்களது தீவிர சிந்தனையின் உருவகமாகவும் அவை இருக்கலாம். நீங்கள் இவற்றை நன்கு ஆராய்ந்து அறிய வேண்டும்.

சில சமயங்களில் நீங்கள் ஒரு பிரகாசமான தங்கமயமான ஒளியைக் காண்பீர்கள். அந்த ஒளியினுள் உங்கள் இஷ்ட தெய்வத்தையும் உங்கள் முன்னால் காண்பீர்கள். சில

வேளைகளில் அந்த ஒளியினுள் நீங்கள் உங்களையே காண்பீர்கள். உங்களைச் சுற்றிலும் தங்கநிறத்தில் ஒளியைக் காண்பீர்கள்.

உங்கள் இஷ்ட தெய்வத்தை மலையளவு பிரகாசமுள்ள சூரியனாகக் காண்பீர்கள். சாப்பிடும்போதோ, நீர் அருந்தும்போதோ அல்லது செயல்புரியும்போதோ இந்த உருவத்தை நீங்கள் காண்பீர்கள். இந்தக் காட்சியை நீங்கள் அனுபவிக்கும்பொழுது உங்களுக்கு சாப்பாட்டில் ருசியே தெரியாது. உணவை அப்படியே விழுங்குவீர்கள். வீணை தொடர்ந்து ஒலிப்பதை நீங்கள் கேட்பீர்கள். சூரியனின் கண்ணைக் கூசும் ஒளியைக் காண்பீர்கள்.

நீங்கள் ஒழுங்காக தியானம் செய்தால் உங்கள் தியானத்தின் இலட்சியப் பொருள் வெகு விரைவில் உங்கள் முன் தோன்றும். நீங்கள் தியானிக்கும் பொருள் உங்களைச் சுற்றிலும் மூடுவதாக நீங்கள் உணர்வீர்கள். விண் வெளி முழுவதும் ஒளிர்வதாக உணர்வீர்கள். சில சமயங்களில் மணி ஒலிக்கும் சப்தத்தைக் கேட்பீர்கள். அந்தர்முக அமைதியையும் நீங்கள் அனுபவிப்பீர்கள்.

இந்த அனுபவங்கள் உங்களுக்கு ஏற்படுகையில், இந்தக் காட்சிகளை நீங்கள் காண்கையில் சொலற்கரிய ஒருவித ஆனந்தத்தை நீங்கள் அனுபவிப்பீர்கள். இதனால் போலித் திருப்தி அடையாதீர்கள். உங்கள் சாதனையையும் நிறுத்திவிடாதீர்கள். இந்தக் காட்சிகளுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்காதீர்கள். மன ஒருமைப்பாட்டின் முதல் படியில்தான் நீங்கள் நிற்கிறீர்கள். எல்லா எண்ணங்களும் அடங்கி, பரமாத்மனுடன் நீங்கள் ஒன்றுவதே நீங்கள் அடையவேண்டிய உயரிய அமைதி அல்லது மோனநிலை ஆகும்.

தியானத்தின் ஆரம்ப நிலையில் நீங்கள் தொடர்பு கொள்ளும் பொருள்களும் உருவங்களும் சூக்ஷ்மலோகத்துடன் தொடர்புடையவை. அவை சரீரம் இல்லாத மனிதர்களுக்கு நிகர். அவற்றிற்கும் மனிதர்களைப் போலவே ஆசைகள், விருப்பங்கள், அன்பு, பொறுமை அனைத்தும் உண்டு. அவற்றிற்கு சூக்ஷ்ம சரீரம் உண்டு. சுதந்திரமாக அவை உலாவித் திரியும். உருவம் தாங்குதல், உருவம் மறைதல், பெருக்கம், தொலைநோக்கு சக்திகள் அவற்றிற்கு உண்டு. ஒளிமிக்க உருவங்கள் மனோலோக அல்லது அதற்கும் உயர்ந்த உலகங்களைச் சார்ந்த தேவதைகளுடையவை ஆகும். அவை உங்களை ஊக்குவிப்பதற்காக தங்கள் நிலையிலிருந்து வந்து உங்களுக்கு உதவுகின்றன. பல்வேறு சக்திகள் ஒளிமிக்க வடிவங்களில் தோன்றுகின்றன. அவற்றை வணங்குங்கள். வழிபடுங்கள். அவை தரிசனம் தரும்பொழுது அவற்றிற்கு மானசீக பூஜை செய்யுங்கள். மனோலோகம் மற்றும் உயர்ந்த உலகங்களைச் சேர்ந்தவையே தேவதைகளாகும். உங்கள் மனக் கண் முன்னர் அவை தோன்றும்.

பூத உடலிலிருந்து புதிய உலகிற்கு நீங்கள் உண்மையாகவே இட்டுச் செல்லப்படுகையில் உங்களது இஷ்ட தெய்வத்திடமிருந்து கண்ணுக்குத் தெரியாத உதவியைப் பெறுவதாக நீங்கள் உணர்வீர்கள். அந்தக் கட்டுலனாகாத சக்தி உடலிலிருந்து பிரிந்து உடல் உணர்விற்கு மேலே நீங்கள் போவதற்கு உதவுகிறது. இந்த செயல்முறைகளை நீங்கள் கவனமாக நோக்க வேண்டும்.

இந்தக் காட்சிகளைக் காண்பதில் உங்கள் நேரத்தை வீணாக்காதீர்கள். இது வெறும் ஒரு ஆர்வம் மட்டுமே. லௌகிகத்திற்கு அப்பாற்பட்ட உண்மைகள் உள்ளன. பிரம்மன் இருக்கிறது என்பதை உங்களுக்குப் புரியவைப்பதற்காக உள்ள ஊகங்களே இவை.

இலட்சியத்தில் உங்களை நிலைநிறுத்துங்கள். முன்னேறுங் கள், உத்வேகத்துடனும் உற்சாகத்துடனும் முன்னேறுங்கள்.

சில சமயங்களில் தியானத்தின் பொழுது நீங்கள் எல்லையற்ற நீலவானம் அல்லது வெட்ட வெளியைக் காண்பீர்கள். அந்த நீல வானவெளியில் உங்களை ஒரு சிறிய கரும்புள்ளி போலக் காண்பீர்கள். ஒளிவட்டத்தின் மத்தியில் உங்கள் உருவம் தோன்றும். மனித உருவங்கள், குழந்தைகள், பெண்கள், இளைஞர்கள், ரிஷிகள், தாடிகளுடன் கூடிய சித்தர்கள் மற்றும் ஒளிமயமான, தேஜஸ் மிக்க வடிவங்களை நீங்கள் காண்பீர்கள். காட்சிகள் உங்கள் மனத்தின் சிருஷ்டிகளாகவோ அல்லது சூக்ஷ்ம உலகங்களைச் சார்ந்தவையாகவோ இருக்கலாம். இந்தப் பிரபஞ்சத்தில் பல்வேறு அடர்த்தியுடன் கூடிய பல உலகங்கள் உள்ளன. பல படித்தரங்களில் தன்மாத்திரைகளின் சீரான அசைவுகளால் பல்வேறு உலகங்கள் உருவாகின்றன. ஒவ்வொரு உலகத்திலும் அதற்கேற்ற உயிர்களும் பொருள்களும் உள்ளன. இந்த உயிர்கள் அல்லது பொருள்களுடன் தொடர்புடையவையே அந்தக் காட்சிகள். அவை முழுக்கவும் கற்பனையாக இருக்கலாம். உங்கள் ஆழ்ந்த சிந்தனையின் உருவகங்களாகவும் அவை இருக்கலாம். யோகப் பயிற்சிகளில் நீங்கள் விவேகத்துடன் பகுத்தறியவேண்டும். பகுத்தறிவும் பொது அறிவும் முழுக்கவும் பயன்படுத்தப்பட வேண்டும்.

தியானத்தின்போது உங்களுக்கு உடல் உணர்வே இருக்காது. உடல் உணர்வு இருந்தாலும் கூட அது வெறும் மன அளவிலேயே இருக்கும். தன் உடல் மீது உடை இருக்கிறது என்ற முழு உணர்வு குடிகாரனுக்கு இருக்காது. ஏதோ ஒன்று தன் உடலிலிருந்து தொங்குகிறது என்பதை மட்டுமே அவன் உணர்வான். அதுபோலவே உங்களுக்கும் உடல் உணர்வு இருக்கும். நழுவிய உடை அல்லது செருப்பு

போல ஏதோ ஒன்று உடலில் ஒட்டிக் கொண்டிருப்பதாக நீங்கள் உணர்வீர்கள்.

தியானத்தில் சாதகன் சூரியன் மற்றும் நட்சத்திரங்களின் ஒளி உருண்டைகளைக் காண்பான். தெய்வீக ருசி மற்றும் மணத்தை அவன் அனுபவிப்பான். கடவுளை மனித வடிவில் - கிழவனாக, குஷ்டரோகியாக, கந்தை உடையில் - அவன் காண்பான். தனது குரு யோகிகள் மற்றும் துறவிகளின் காட்சியும் அவனுக்குக் கிட்டும்.

மன ஒருமைப்பாட்டின் தரம் மற்றும் தூய்மைக்கேற்ப சில நாட்கள் அல்லது ஆறு அல்லது ஒன்பது மாதங்களுக்குள் காட்சிகள் தோன்றலாம். சிலருக்கு இத்தகைய காட்சிகள் கிட்டாவிட்டாலும் அவர்கள் ஆன்மீகப் பாதையில் முன்னேறிக் கொண்டிருப்பார்கள்.

ஆன்மீக வாழ்வில் மனோசித்துக்களுக்கு உரிய இடம் கிடையாது. உங்கள் ஆன்மீகப் பயிற்சிகளின் போது அவை தோன்றினாலும் நீங்கள் அவற்றை சிறிதும் கவனிக்காது புறக்கணியுங்கள். புலன்களை அடக்கி மன ஒருமைப்பாட்டைப் பயில்பவனின் காலடியில் சித்துக்கள் விளையாடும். ஆத்மபோதத்திற்கு சித்துக்கள் இடையூறாகும்.

உயர்மட்ட ஆன்மீக அனுபவங்களுக்கும் வண்ணங்கள் அல்லது ஒலிகளுக்கும் இடையே எந்தவிதத் தொடர்பும் கிடையாது. அகத்தே அமைதி, ஆனந்தம் இருக்க வேண்டும். வெற்றி தோல்வியில், இன்பதுன்பத்தில், இகழ்ச்சி புகழ்ச்சியில் மனம் நடுநிலையில் இருத்தல் வேண்டும். விருப்பு வெறுப்பு, ராகத்வேஷம் மறையவேண்டும். பிரபஞ்ச அன்பு இருத்தல் வேண்டும். உலகம் முழுவதும் கடவுளின் தோற்றமாக ஆகவேண்டும். அனைத்துவித அச்சம் மற்றும் இடர்களிலிருந்து சுதந்திரம் கிட்டவேண்டும். இதுவே உண்மையான உயர் ஆன்மீக அனுபவமாகும்.

## 21. அசைவு அனுபவங்கள்

உங்கள் பயிற்சி அனுபவத்தின் ஆரம்பத்தில், உங்கள் கைகள், கால்கள், உடல் மற்றும் சரீரம் முழுவதிலும் அசைவுகள் ஏற்படலாம். சில சமயங்களில் அசைவு பயங்கரமானதாக இருக்கும். பயப்படாதீர்கள். இடர்ப்படாதீர்கள். அது ஒன்றுமில்லை. அது ஒன்றும் செய்யாது. புதிய பிராண சக்தி, புதிய நரம்புத் தூண்டுதல்களாலேயே தசைச் சுருக்கத்தால் அது ஏற்படுகிறது. சாதனையின் காரணமாக நாடி சுத்தி ஏற்படுவதால் புதிய நரம்பு ஓட்டங்கள் உருவாகின்றன. இந்த அசைவுகள் சிறிது நேரத்திற்குப் பின் மறைந்துவிடும். சில சமயங்களில் தியானத்தின் போது உடலில் நடுக்கம் தோன்றும். இது நடு உடலிலிருந்து மூளைக்கு பிராணன் கொண்டு செல்லப்படுவதால் உண்டாகிறது பயப்பட வேண்டாம். தியானத்தை நிறுத்திவிடாதீர்கள். இது ஏற்படுகையில் நீங்கள் முன்னேறுகிறீர்கள் என்பது புலப்படுகிறது. நீங்கள் தேர்ச்சி பெறுகிறீர்கள். தொடர்ந்து தியானம் செய்யுங்கள். மகிழ்ச்சியுடன் இருங்கள். அந்தர்யாமியான, கூடஸ்த பிரத்யகாத்மனான உள்ளே உள்ள காட்சியிடமிருந்து உதவி கிடைக்கிறது. இதெல்லாம் புதிய உணர்வுகளாகும். தியானத்தின் பொழுது சிலர் உத்வேகம் பெற்று அழகான கவிதைகளைப் படைக்கிறார்கள் இது போன்ற கவிதை உத்வேகம் ஏற்படுகையில் அவற்றை குறித்து வையுங்கள். தியானத்தின் போது பிராணன் மெதுவாக இயங்குவதாலும், பரமாத்மனுடன் இணைந்திருந்த மனமானது உலகாயத நிலைக்கு கீழே புற அதிர்வுகளால் இறக்கப்படுகையில் திமர் அசைவுகள் ஏற்படுகின்றன.

தியானப் பயிற்சியால் மனம் கூர்மையாகிறது. சிந்தனையும் தெளிவடைகிறது.

## 22. தியானத்தில் ஒளிகள்

தியான சமயத்தில் மன ஒருமைப்பாட்டின் காரணமாக பல்வேறு ஒளிகள் தோன்றுகின்றன. ஆரம்பத்தில் இருபுருவங்களுக்கும் இடையில் சூக்ஷ்ம சரீரத்தின் ஆஜ்ஞா சக்கரம் இருக்கும் இடமான நெற்றியின் திரிபுடியில் ஊசிமுனை அளவிலான வெள்ளை ஒளி தோன்றும். கண்கள் மூடியிருக்கையில் பல்வகையான வண்ண ஒளிகள், மின்னல், தீ, எரியும் தணல், மின்மினிப் பூச்சிகள், சந்திரன், சூரியன் போன்ற ஒளிகள் தோன்றும். இந்த ஒளிகள் சிதாகாசம் எனப்படும் மன வெளியில் தோன்றுகின்றன. இவை தன்மாத்திரை ஒளிகளாகும். ஒவ்வொரு தன்மாத்திரைக்கும் அதற்கேற்ற பிரத்யேகமான நிறம் உண்டு.

பொதுவாக மஞ்சள் மற்றும் வெள்ளை ஒளிகளே காணப்படும். சிவப்பு, நீல ஒளிகள் அபூர்வமாகத் தென்படும். சில வேளைகளில் வெள்ளையும் மஞ்சளும் சேர்ந்து காணப்படும். ஆரம்பத்தில் மனக் கண்ணின் முன்னால் சிறிய வெண் ஒளி மிதக்கும். இதை நீங்கள் முதலில் காண்கையில் மனமானது மேலும் நிலை பெறுகிறது, மன ஒருமைப்பாட்டில் நீங்கள் முன்னேறுகிறீர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். சில மாதங்களுக்குப் பிறகு ஒளியின் அளவு அதிகரித்து சூரியனைவிடப் பெரிய அளவிலான ஒளிவட்டம் தோன்றும். தொடக்கத்தில் இந்த ஒளிகள் நிலைத்திருக்காது. அவை தோன்றின உடனேயே மறைந்துவிடும். அவை நெற்றியிலிருந்தும் பக்கவாட்டிலிருந்தும் புறப்படும். விவரிக்க முடியாத பிரத்யேகமான மகிழ்ச்சியை அவை தருகின்றன. இத்தகைய ஒளிகளைப் பார்க்கவேண்டும் என்ற ஆவலும் அதிகரிக்கிறது. காலையில் இரண்டு, மூன்று மணி நேரங்கள், இரவில் இரண்டு மூன்று மணி நேரங்கள் நீங்கள்

ஒழுங்காக தியானம் செய்தால் இந்த ஒளிகள் அடிக்கடி தோன்றும். நீண்ட நேரமும் நீடித்து நிற்கும். சாதனையில் இத்தகைய ஒளியின் காட்சி மிகவும் ஊக்கம் தருபவையாகும். தியானத்தில் உங்களுக்குள்ள நாட்டத்தை அவை அதிகரிக்கின்றன. பௌதிக உலகம் கடந்த பொருள்களில் உங்களுக்குள்ள நம்பிக்கையை அது அதிகரிக்கிறது. ஒளியின் காட்சி நீங்கள் பௌதிக உணர்வை கடந்து செல்கிறீர்கள் என்பதை குறிக்கிறது. ஒளி தோன்றுகையில் நீங்கள் அரை உணர்வு நிலையில் இருக்கிறீர்கள். இரண்டு உலகங்களுக்கு இடையில் நீங்கள் இருக்கின்றீர்கள். ஆசனத்தில் நீங்கள் முழுக்கவும் நிலையாக இருத்தல் வேண்டும். சுவாசம் மிகமிக மெதுவாக இருத்தல் வேண்டும்.

## முகத்தில் முக்கோண ஒளி

எவரது உணவு மிதமாக இருக்கிறதோ, எவரது கோபம் கட்டுப்படுத்தப்பட்டுள்ளதோ, சமூகத்தின்பால் எவர் எல்லா அன்பையும் விட்டுவிட்டாரோ, எவர் தனது காமத்தைக் கட்டுப்படுத்தியுள்ளாரோ, சீத உஷ்ணம் போன்ற எதிரிடை இரட்டைகளை எவர் வென்றுள்ளாரோ, எவர் தனது அஹங்காரத்தைத் துறந்துவிட்டாரோ, எவர் எவரையும் வாழ்த்துவதில்லையோ, எவர் எவரிடமிருந்தும் எதையும் பெறுவதில்லையோ - இத்தகைய நபருக்கு தியானத்தின் பொழுது முக்கோண ஒளி கிட்டுகிறது.

## சுஷும்னையிலிருந்து ஒளி

சில வேளைகளில் தியானத்தின் பொழுது மிகப் பிரகாசமான ஒளியை நீங்கள் காண்பீர்கள். இந்த ஒளியைக் காணவே உங்கள் கண் கூசும். இந்த ஒளியைப் பார்க்கும் மானசிகப் பார்வையிலிருந்து நீங்கள் பலவந்தமாக

திசைதிருப்பப்படுவீர்கள். இந்தப் பிரகாசமான ஒளி இதயத்தில் சுஷூம்னையிலிருந்து தோன்றுகிறது.

## ஒளியில் வடிவங்கள்

1) ஒளிமிக்க தேவதை வடிவங்கள் 2) பௌதிக வடிவங்கள் என்று இருவகை வடிவங்களை நீங்கள் காண்பீர்கள். உங்களது இஷ்ட தெய்வத்தை அழகான உடை மற்றும் பல்வேறு ஆபரணங்கள் மாலைகள், நான்கு கரங்கள் மற்றும் ஆயுதங்களுடன் நீங்கள் காண்பீர்கள். உங்களை ஊக்குவிப்பதற்காக சித்தர்களும் ரிஷிகளும் தோன்றுகின்றனர். நிறைய எண்ணிக்கையில் தேவதைகள் மற்றும் தங்கள் கைகளில் இசைக் கருவிகளுடன் கூடிய தேவலோக கன்னிகைகளை நீங்கள் காணலாம். அழகிய பூந்தோட்டங்கள், அழகான மாளிகைகள், நதிகள், மலைகள், பொற் கோவில்கள் மற்றும் விவரிக்க முடியாத காட்சிகளை நீங்கள் காணலாம்.

## கண்ணைக் கூசும் ஒளி

சில சமயங்களில் சூரியனைக் காட்டிலும் மிகவும் ஒளி பொருந்திய கண்ணைக் கூசும் ஒளியை தியானத்தின் பொழுது நீங்கள் காண்பீர்கள். அவை வெண்மையானவை. ஆரம்பத்தில் அவை வந்து விரைவில் மறைந்துவிடும். பிறகு அவை நிலைத்திருக்கும். மன ஒருமைப்பாட்டின் தரத்தையும் ஆற்றலையும் பொறுத்து 10 அல்லது 15 நிமிடங்கள் அல்லது அரை மணி நேரத்திற்கும் அதிகமாக அவை நீடிக்கும். இரு கண்புருவங்களுக்கும் மத்தியில் திரிபுடியில் மனத்தை ஒருமைப்படுத்துபவர்களுக்கு ஒளி நெற்றியில் திரிபுடியிலும், தலையில் ஸஹஸ்ரார சக்கரத்தில் மனதை ஒருமைப்படுத்துபவர்களுக்கு ஒளி தலையின் உச்சியிலும் தோன்றுகிறது. சில சமயங்களில் நீங்கள் உங்கள் அக முகப் பார்வையை நிறுத்தி தியானத்தை தடை செய்யுமளவுக்கு

ஒளி மிகவும் கண்ணைக் கூசும் பிரகாசத்துடன் இருக்கும். சிலருக்கு இந்த மாதிரி வேளைகளில் பயம் தோன்றி செய்வதறியாது திகைக்கவும் செய்வர். என்னிடம் அவர்கள் ஆலோசனை கேட்டு வந்தனர். அவர்கள் அதுவரை அனுபவிக்காததொரு புது அனுபவம் அது என்று நான் சொன்னேன். இடைவிடாத பயிற்சியினால் ஒருமைப்பாட்டில் ஈடுபட்ட மனம் அதில் பழகிவிடும். பயமும் அகன்றுவிடும். பயிற்சியைத் தொடருமாறு நான் அவர்களிடம் சொன்னேன். சிலர் இதயத்திலும், சிலர் திரிபுடியிலும் சிலர் தலை உச்சியிலும் மனத்தை ஒருமைப்படுத்துகின்றனர். அது அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது. திரிகுடியில் மனத்தை ஒருமைப்படுத்துவது எளிது.

## 23. அனாஹத ஒலிகள்

தியானப் பயிற்சியின் ஆரம்பத்தில் யோகியால் கேட்கப்படும் இசை ஒலியே அனாஹத சப்தமாகும். இந்தத் துறை நாத அனுஸந்தானம் எனப்படுகிறது. யோக ஒலி ஆராய்ச்சி என்பது இதன் பொருள். பிராணாயாமத்தினால் நாடிகள் அல்லது சூக்ஷ்ம ஓட்டங்கள் தூய்மையடைவதை இது குறிக்கிறது. அனாஹத ஒலி ஓம்காரத்வனி என்றும் அழைக்கப்படுகிறது. அது இதயத்தில் பிராணனின் அதிர்வினால் உண்டாவதாகும்.

### பத்துவகை ஒலிகள்

கேட்கப்படும் நாதம் 10 வகைப்படும். முதலாவது சினி. (சினி என்ற வார்த்தையைப் போல ஒலிப்பது); இரண்டாவது சினி சினி. மூன்றாவது மணி ஓசை. நான்காவது சங்கின் ஒலி; ஐந்தாவது தந்த்ரி அல்லது யாழ்; ஆறாவது தாள ஒலி; ஏழாவது புல்லாங்குழலின் ஒலி;

எட்டாவது முரசு ஒலி; ஒன்பதாவது மிருதங்க ஒலி; பத்தாவது மேகத்தில் எழும் இடி ஒலி.

நீங்கள் மறை ஒலியைக் கேட்பதாகிய ஏணியின் மேல் படிகளில் ஏறும் முன், நீங்கள் உங்கள் அந்தராத்மாவின் ஒலியை ஏழு விதங்களில் கேட்க வேண்டும். முதலாவது வானம்பாடி பறவையானது தனது துணைப் பறவைக்கு பிரிவின் பொழுது எழுப்பும் இசை ஒலியாகும். இரண்டாவது ஒளிரும் நட்சத்திரங்களைத் தட்டும் தியானிகளின் வெள்ளித் தாள ஒலியாகும். அடுத்தது கூட்டில் அடைபட்ட கடற்பறவையின் சோக கீதம். இதைத் தொடர்வது வீணை இசை. மூங்கில் குழலின் இசை ஐந்தாவதாக உங்கள் செவிகளில் விழுகிறது. அதைத் தொடர்ந்து முரசு ஒலி. கடைசியில் மேகத்தில் இடி முழக்கம் போல ஒலிக்கிறது. ஏழாவது மற்ற எல்லா ஒலிகளையும் தன்னுள் அடக்குகிறது. அவை மறைகின்றன. வேறு எதுவும் கேட்கப்படுவதில்லை.

## 24. உடலிலிருந்து நீங்குவது போன்ற உணர்வும், இதர அனுபவங்களும்

பயிற்சியின் பொழுது ஒரு நாள் உங்கள் உடலை விட்டு நீங்கியது போன்ற உணர்வு உங்களுக்கு ஏற்படும். ஒரு புதிய, லேசான சூக்ஷ்மசரீரத்தைப் பெற்றதால் பயம் கலந்த அதிக ஆனந்தம் உங்களிடம் ஏற்படும். புதிய அறிமுகமில்லாத தெரியாத உலகினுள் புகுவதால் அந்த பயம் ஏற்படும். பச்சைக் குழந்தை தான் பிறந்த எட்டாவது அல்லது பத்தாவது நாளில் கண்ணைத் திறப்பது போன்றதொரு அனுபவம் அது. காற்றைப் போன்ற லேசான சரீரம் இருப்பது போலவும், தங்கமயமான விளக்குகள், பொருள்கள், உயிர்களுடன் கூடிய சுழலும் சூக்ஷ்ம லோக இருப்பையும் நீங்கள் உணர்வீர்கள். காற்றில் நீங்கள் மிதப்பது போலவும்

சுழல்வது போலவும் உணர்வால் கீழே விழுந்து விடுவோமா என்ற பயமும் உங்களிடம் இருக்கும்.

நீங்கள் விழமாட்டீர்கள். ஆனால் இந்தப் புதிய அனுபவம் ஆரம்பத்தில் உங்களிடம் புதிய உணர்ச்சியையும் ஆர்வத்தையும் அளிக்கும். உங்கள் உடலை விட்டு நீங்கள் எப்படிச் செல்கிறீர்கள் என்பது முதலில் தெரியாமல் இருக்கும். முழுவதுமாக உடலை விடுத்து புதிய உலகத்தில் புகுகையில் உங்களுக்கு முதலில் அதிசயமாக இருக்கும். இந்த உலகில் சில சமயங்களில் நீலநிற ஒளியும், சில வேளைகளில் இருளுடன் கலந்த ஒளியும், வேறு சில சமயங்களில் பிரகாசமான தங்கமயமான ஒளியும் இருக்கும். புதிய மகிழ்ச்சி வார்த்தைகளால் விவரிக்க முடியாதது. இதை நீங்களே அனுபவிக்கவேண்டும். உங்கள் உடலை நீங்கள் எப்படி விட்டீர்கள் என்பது தெரியாவிட்டாலும், திரும்பி வருவதைப் பற்றிய பூரண உணர்வு உங்களிடம் உள்ளது. மிகவும் வழவழப்பான பரப்பில் நீங்கள் வழுக்குவது போலவும், சிறிய துவாரம் அல்லது நுண்ணிய குழாய் மூலம் காற்றைப் போன்ற லேசான உடலுடன் நீங்கள் நுழைவதுபோல உணர்கிறீர்கள். வெட்டவெளியில் காற்றில் இருப்பது போல உணர்கிறீர்கள். ஜன்னல் துவாரம் வழியாக காற்று நுழைவதைப் போல, உங்களது புதிய சூக்ஷ்ம சரீரத்துடன் நீங்கள் உங்கள் பூத உடலில் நுழைகிறீர்கள். நீங்கள் திரும்பிய பின் உங்களுக்கு பௌதிக உலகிற்கும் சூக்ஷ்ம உலகிற்கும் இடையில் உள்ள வேறுபாடு நன்கு தெரியும். புதிய அனுபவத்தைத் தொடர்ந்து பெற்று விளங்குவதற்கான நாட்டமும், அதே நிலையில் தொடர்ந்து இருப்பதற்கான வேட்கையும் உங்களிடம் இருக்கும்.

புதிய உலகில் 3,5 அல்லது 10 நிமிடங்களுக்கு மேல் உங்களால் இருக்க முடிவதில்லை. இதுதவிர ஆரம்பத்தில் உங்களது விருப்பத்திற்கேற்ப உடலை உங்களால்

விடமுடியாது. சந்தர்ப்பவசத்தால் சாதனையின் போது மாதத்திற்கு ஒரு முறை உங்களால் உடலிலிருந்து பிரிய முடியும். பொறுமை, விடாமுயற்சி, உறுதியுடன் நீங்கள் தொடர்ந்து சாதனை செய்தால் அதிக நேரத்திற்கு உங்கள் விருப்பத்திற்கேற்ப நீங்கள் உடலிலிருந்து பிரிந்து புதிய சூக்ஷ்ம உடலுடன் புதிய உலகில் உங்களால் இருக்க முடியும். உடல் அபிமானத்திலிருந்து நீங்கள் இப்பொழுது பாதுகாப்பாக இருக்கிறீர்கள். உங்கள் விருப்பப்படி நீங்கள் உடலை விடுத்து 2 அல்லது 3 மணிநேரம் புதிய உலகில் இருக்கும் பொழுதுதான் உடல் உணர்வை நீங்கள் கடந்ததாகக் கருதமுடியும். அப்பொழுதுதான் நீங்கள் பாதுகாப்பாக இருப்பதாகக் கருதப்படும். மௌனம், தனிமை, தனித்து வசித்தல் ஆகியவை இதைப் பெற தேவையாகும்.

## சூக்ஷ்ம பயணம்

விரும்பிய மாத்திரத்திலேயே நீங்கள் சூக்ஷ்ம உடலுடன் எந்த இடத்திற்கும் பயணம் செய்து அங்கே அஹங்காரம் (அஸ்மிதம்) அல்லது தன்மாத்திரைகளின் இருப்பிடமான பிரபஞ்சத்திலிருந்து தேவையானவற்றைப் பெற்று உடலுடன் மீண்டும் தோன்ற முடியும். இம்முறையின் நுட்பங்களை அறிந்த யோகிக்கு இது மிகவும் எளிதாகும்.

## உருவம் பெறுதல்

முதலில் நீங்கள் உங்களை உடலிலிருந்து பிரிக்கின்றீர்கள். பிறகு மனத்துடன் உங்களை ஒன்றுபடுத்திக் கொள்கிறீர்கள். அதன்பின் இந்த சூக்ஷ்ம சரீரத்துடன் இவ்வுலகில் செயல்படுவது போலவே மன உலகில் செயல்படுகிறீர்கள். மன ஒருமைப்பாட்டின் மூலம் நீங்கள் உடல் உணர்வைக் கடக்கிறீர்கள். தியானத்தின் மூலம் மனத்தைக் கடக்கிறீர்கள். சமாதியின் மூலம் பிரம்மனுடன் ஐக்கியமாகிறீர்கள்.

## மனம் நகர்கிறது

உங்களுக்குப் பிடித்தமான பத்ம, சித்த அல்லது சுகாசனத்தில் நீங்கள் 15 அல்லது 30 நிமிடங்கள் தியானம் செய்த பிறகு உங்கள் உடல் லேசானதாக ஆவதை நீங்கள் உணர்வீர்கள். உடலைப் பற்றி உங்களுக்கு அரைகுறையான உணர்வே இருக்கும். மன ஒருமைப்பாட்டினால் மிகுந்த மகிழ்ச்சி ஏற்படும். இது மன ஒருமைப்பாட்டு ஆனந்தமாகும். புலன் உலக இன்பத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது. அப்யாஸம், மற்றும் தியானத்தினால் நுண்ணிய தாக்கப்பட்ட புத்தியினால் இந்த இருவகை இன்பத்தையும் நீங்கள் பிரித்தறிய வேண்டும்.

மனம் நகர்கிறது. புத்தியில் அதனது இருப்பிடத்திலிருந்து அது அகலுகிறது, அதனது யதாஸ்தானம் அல்லது உண்மை இருப்பிடத்திற்குப் போக முயலுகிறது என்பதை நீங்கள் தெளிவாக உணரமுடியும். மனம் தனது பழைய தன்மையை விடுத்து புதிய தன்மையில் செயல்படுகிறது என்பது உங்களுக்குத் தெரிய வரும். தியானத்தின் விளைவாக மூளையில் புதிய மார்க்கங்களும், புதிய எண்ண ஓட்டங்களும், புதிய மூளை செல்களும் தோற்றுவிக்கப் படுகின்றன. முற்றிலும் மாறுபட்ட மனோதத்துவம் தோன்றுகிறது. உங்களிடம் புதிய மூளை, புதிய இதயம், புதிய உணர்ச்சிகள், புதிய உணர்வுகள், புதிய எண்ணங்கள் உண்டாகின்றன.

## பூத கணங்கள்

சில சமயங்களில் இந்த கணங்கள் தியானத்தில் தோன்றுகின்றன. இவை அபூர்வமான உருவங்களாகும். நீண்ட பற்கள், சில நீண்ட முகங்கள், சில பருத்த வயிறுகள், சிலவற்றிற்கு வயிற்றில் முகம், சிலவற்றிற்கு நெற்றியில் முகம் போன்ற புதுப்புது உருவங்கள் தோன்றும். இவை

பூதலோகத்தைச் சார்ந்தவை. அவை பூதங்கள். சிவபெருமானின் சேவகர்கள் இவை. அவற்றின் தோற்றங்கள் பயங்கரமானவை. அவை எந்தவித தொந்தரவும் பண்ணாது. அவை உங்கள் தைரியத்தையும் பலத்தையும் சோதிக்க வருகின்றன. அவற்றால் ஒன்றும் செய்ய முடியாது. தூய ஒழுக்கம் உள்ள சாதகனின் முன் அவற்றால் நிற்க இயலாது. 'ஓம்' என்று சில முறை உச்சரித்தால் இவை ஒதுங்கி நிற்கும். உங்களிடம் பயம் இருக்கக்கூடாது. கோழைக்கு ஆன்மீகப் பாதையில் இடமில்லை. நீங்கள் ஆத்மசொரூபம் என்பதைத் திரும்பத் திரும்ப நினைந்து தைரியத்தை வளருங்கள்.

## இருக்கையிலிருந்து எழுதுதல்

தியானத்தின்பொழுது உங்கள் இருக்கையிலிருந்து நீங்கள் எழுவதாக உணர்வீர்கள். சிலருக்கு காற்றில் பறப்பது போன்ற அனுபவம் ஏற்படுகிறது.

## தெய்வீக ஒளி

தெய்வீக ஒளி திறந்த கதவுகள் மூலம் அல்லாமல் குறுகிய இடைவெளி மூலமே வருகிறது. சூரிய ஒளி ஒரு துவாரம் மூலம் இருட்டறைக்குள் புகுவதைப் போல சாதகன் உணர்கிறான். அது மின்னல்கீற்று போல இருக்கும். இந்த திமர் ஒளி அனைத்து ஒலிகளையும் மழுங்கச் செய்கிறது. சாதகன் பயத்தாலும் ஆனந்தத்தாலும் பேச்சற்று நிற்கிறான். பகவான் ஸ்ரீ கிருஷ்ணரது விஸ்வரூப தரிசனத்தைப் பெற்ற பொழுது அர்ஜுனன் எவ்விதம் நின்றானோ அது போல அவன் நடுங்கி நிற்கிறான். தெய்வீகத்தைச் சூழ்ந்து நிற்கும் ஒளிமயமான தேஜஸைப் பார்த்து ஆரம்ப சாதகன் அஞ்சிக் கலங்குகிறான்.

தியானத்தின்பொழுது ஒருவன் அபூர்வமாக இத்தகைய காட்சியைப் பெறுகிறான். கண்ணைப் பறிக்கும் ஒளி

அசைந்து செல்லும். பார்ப்பதற்குப் பயங்கரமாக இருக்கும். தீச்சுடரைப் போன்ற தலைபாகம் கொண்ட அதிசய ஒளியைக் காண்பீர்கள். பிரகாசமான வெண்ணிற மேகத்தை ஒத்த அதனது இறக்கைகள் நீண்டும் அகன்றும் இருக்கும். சில சமயங்களில் அந்த இறக்கைகள் படபடவென்று அடிக்கும். சில சமயங்களில் அவை அமைதியாக இருக்கும். அதன் தலை எதுவும் பேசாது அமைதியாக இருக்கும். அவ்வப்பொழுது அதன் இறகுகள் அடித்துக் கொள்ளும்.

சில சமயங்களில் தீய ஆவிகள் உங்களைத் தொந்தரவு செய்யும். நீண்ட பற்களுடன் அவற்றின் முகம் பார்ப்பதற்கு அருவருப்பாக இருக்கும். உங்களது பலமான இச்சா சக்தியால் அவற்றை விரட்டுங்கள். "வெளியே போ" என்று அவற்றிற்கு உத்தரவிடுங்கள். அவை அகன்றுவிடும். அவை ரத்தக்காட்டேரிகள். அவை பூதங்கள். சாதகர்களை அவை ஒன்றும் செய்யா. உங்களது தைரியத்தை அவை சோதிக்கும். சில மிக நல்ல ஆவிகளும் உங்களிடம் வரும். உங்களது முன்னேற்றப் பாதையில் அவை மிகவும் உதவி செய்யும். இவை அனைத்தும் உங்கள் பாதையில் உள்ள விக்னங்கள் ஆகும்.

ஆன்மீக அனுபவங்களைப் பெறுவதற்கு சாதகர்கள் மிகவும் ஆர்வமாக உள்ளனர். அவற்றைப் பெற்றவுடன் அவர்கள் பயப்படுகிறார்கள். உடல் உணர்வைத் தாண்டிச் செல்லுகையில் அவர்கள் மிகவும் அச்சமடைகின்றனர். அவை மீண்டும் வருமோ வராதோ என்று அவர்கள் அதிசயிக்கின்றனர். அவர்கள் ஏன் அஞ்ச வேண்டும்? அவர்கள் உடல் உணர்வைத் திரும்பப் பெறுகிறார்களா இல்லையா என்பது முக்கியமல்ல. நம்முடைய முயற்சிகள் அனைத்துமே இந்த உடலைக் கடந்து மேலான ஆன்மீக உணர்வைப் பெறுவதற்காகவே உள்ளன. தைரியம்

தேவைப்படுகிறது. பாதையில் எல்லா வகையான சக்திகளையும் சந்தித்தாக வேண்டியுள்ளது.

## 25. சில சந்தேக விளக்கங்கள்

### கேள்வி

தியானத்தின் பொழுது நீங்கள் என்முன் தோன்றினீர்கள். உங்களது கண்கள் அகன்று, பிரகாசமாய் இருந்தன. மின்சார சக்தி என் உடல் முழுவதிலும் பாய்ந்தது. பிறகு ஒளி தோன்றியது அது ஒரு புள்ளியாக மாறி மறைந்தது. கடைசியாக எனக்கு நினைவு இருப்பது உடலில் ஒரு அசைவு. முழுவதுமாக உணர்வு அற்றுப் போனேன். சூன்யக் கடலில் நான் மூழ்கிப்போனேன். அந்த சமயத்தில் நடந்தது எதுவுமே எனக்குத் தெரியாது.

1. இது ஸமாதியா?
2. எங்கே சக்கரங்கள் உள்ளனவோ அங்கே ஒளிவட்டம் உண்டு.
3. புத்தகங்களில் இருப்பதிலிருந்து மாறுபட்டு சக்கரங்கள் மாற்றம் அடைகின்றன.
4. சில வேளைகளில் சாதாரண உணர்விற்கு வருவதற்கு ஐந்து நிமிடங்கள் ஆகின்றன.
5. தியானத்தின் முதல் 15 நிமிடங்களில் புற ஒலியைக் கேட்க முடிகிறது.
6. திடீரென்று தோன்றும் பேரொலி அசைவுடன் கூட உணர்வைத் திரும்ப வரவழைக்கிறது.

### பதில்

இடைவிடாத ஜபத்தினால் நாடிகள் சுத்தப்படுத்தப்படும் பொழுது மனித சமுதாயத்திற்கு தன்னலமற்ற தொண்டு

புரிவதால் சித்த சுத்தி ஏற்படுகையில் சாதகனுக்குப் பல்வகை ஸமாதி அனுபவங்கள் ஏற்படுகின்றன. அது தியானத்தின்பொழுது மன ஒருமைப்பாட்டின் தரத்தைப் பொறுத்தது. அனுபவம் சாதகர்களிடம் வேறுபடுகிறது. சிலர் காட்சிகளைக் காண்பர். சிலர் ஒலிகளைக் கேட்பர். ஒளிகள் தோன்றுதல் சூக்ஷும லோக வாசிகளிடமிருந்து கிடைக்கப்பெறும் ஊக்கமாகும். இது நல்ல ஆன்மீக முன்னேற்றத்தின் அறிகுறியாகும்.

1. ஆமாம், இது ஸமாதியின் ஒரு வகை. சாதகர்களால் எந்தவிதமான அனுபவத்தையும் நினைவு கூற முடியாவிட்டாலும் ஒப்பற்ற உள் ஆன்மீக பலம், ஆற்றல், சொலற்கரிய அமைதி, ஆனந்தத்தை உணர இயலும்.

2. ஒளி வட்டமாகவோ அல்லது சக்கரத்தில் ஒரு வடிவத்திலோ இருக்கிறது.

3. சக்கரங்கள் புத்தகங்களில் உள்ளவாறு இருக்க வேண்டியதில்லை.

4. ஆழ்ந்த தியானத்திற்குப் பிறகு மீண்டும் இயல்பான உணர்விற்கு வருவதற்கு 5 நிமிடங்கள் ஆகலாம். சில சமயங்களில் அது அரைமணி நேரத்திற்கும் அதிகமாகலாம். பல வேளைகளில் அந்த அரிய நிலையின் நினைவு பகல் வேளையிலும் தொடரும்.

4. ஒலியைக் கேட்டல் ஆழ்ந்த தியானத்தின் விளைவாகும்.

6. பலத்த ஒலி ஒருவித உணர்ச்சியேயாகும். அசைவும் அதைப் போன்றதே. இதனால் எவ்வித தொந்தரவும் ஏற்படாது. படிப்படியாக முன்னேறும் எல்லா சாதகர்களுக்கும் இது பொதுவானதேயாகும். அவைகள் முன்னேற்றத்தின் அறிகுறிகள். பயிற்சியில் ஒழுங்குப் பாடுதான் ஸமாதியில் மேல்நிலையை அடைவதற்குத்

தேவை. மேல்நிலை சாதகர்கள் கடவுளை அனைத்துயிர்களிலும் காணும் திறத்தையும், எல்லா நாமரூபங்களில் பின் உறையும் சாரத்தைக் காணும் ஆற்றலையும் அடைகின்றனர். இத்தகைய மகத்தான முன்னேற்றத்தை அடையும் சாதகர்கள் நல்ல சத்துள்ள உணவு, நிறைய பழரசம், ஆற்றல் அளிக்கும் உணவு, போதுமான ஓய்வு ஆகியவற்றை ஏற்கவேண்டும். வாழ்க இத்தகைய மகாயோகிகள்!

## 26. சாதனைக்கு உதவுபவை

1. உங்கள் மனதை பூரண கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவாருங்கள். மிக உயர்ந்த ஆன்மீக அனுபவத்தைப் பெற்று வெளிப்படுத்துவதற்கானதொரு நல்ல கருவியாக அதை ஆக்குங்கள்.

2. புலன் ஆசை மிக்க இந்தப் பெரிய உலகின் நாயகி மாயையே. அவளே இவ்வுலகில் உள்ள மகத்தான சக்தி. ஆனால் இறையருள், தியானம், பக்தி, விவேகம், வைராக்கியம் ஆகியவற்றின் ஆற்றல் இதை விட அதிகமானது.

3. தியானத்தின் பொழுது தூண்டுதல்களால் நீங்கள் தாக்கப்படுகையில் உங்களது இஷ்டதேவதை உங்களைச் சுற்றிலும் பாதுகாப்பு வளையமாக இருக்கும். தைரியமாயிருங்கள். வீரத்துடன் முன்னேறுங்கள்.

4. ஒரு பெரும் சூன்யமும் இருளானதுமான பகுதியை நீங்கள் கடக்க வேண்டியதிருக்கும். பயப்படாதீர்கள். கடவுளின் கிருபையால் உங்களுக்குப் பேரொளி கிட்டும். பொறுமையுடனிருங்கள். முன்னேறிச் செல்லுங்கள்.

5. மாயையின் கட்டளையால் தியானத்தில் பூதசக்திகள் உங்களுக்குத் தொந்தரவு செய்ய முயலும். இது ஒரு பரீட்சை.

எல்லாத் தடைகளையும் தாண்டிச் செல்வதற்கான ஆற்றலை கடவுள் உங்களுக்கு அருளுவார். உறுதியுடன் நில்லுங்கள் அசையாதீர்கள். வெற்றி எப்பொழுதும் உங்களுக்கே. ஆணிப் படுக்கை உங்களுக்கு மலர்ப்பஞ்சணையாக மாறும் உங்கள் தலைமீது பூக்கள் சொரியப்படும். எதிரிடை சக்திகள் பூக்களாக மாற்றப்படும்.

6. உங்கள் அடிமனத்திலிருந்து எழும் இருண்ட எண்ணங்களால் நீங்கள் தாக்கப்படுவீர்கள்.

7. இருண்ட எண்ணங்கள் பலவிதமான பயங்கரமான இருண்ட வடிவங்களை எடுக்கும். அவை உங்களை பயமுறுத்தும். கீழான சூக்ஷ்ம இனங்கள் கோரமான முகம். நீண்ட பற்களுடன் உங்களைப் பயமுறுத்தும். கடவுளின் கிருபையாலும், உங்கள் தியான சக்தியாலும் அவை அழிந்துபோம்.

8. அச்சம், ஆசை, காமத்திலிருந்து நீங்கள் உண்மையிலேயே விடுபட்டிருக்கிறீர்களா என்பதற்காக நீங்கள் சோதிக்கப்படுவீர்கள்.

9. தேவதைகளிடமிருந்து உங்களுக்கு அழைப்பு வரும். அவர்களுக்கு நன்றி செலுத்துங்கள். ஆனால் மயங்கி விடாதீர்கள்.

10. அழகான தேவ கன்னிகைகள் உங்கள் முன் தோன்றுவார்கள். அவர்கள் ஆடிப்பாடி சிரித்து உங்களை மயக்க முயல்வர். கவனமாயிருங்கள்.

11. பற்றற்று இருங்கள். பொருட்களின் அசுத்தங்கள், வெறுமை மற்றும் நிலையாத் தன்மையை கண்டு கொள்ளுங்கள். விவேகமாகிய வாளையும் பற்றின்மையாகிய கோடரியையும் பயன்படுத்துங்கள்.

12. ஓ ராம்! வெற்றி வீரராகத் திகழுங்கள். அமைதியை அடைந்து கால தேசத்தைக் கடந்த எல்லையற்ற அழியாத ஆனந்தத்தில் புகுங்கள்.

தனது சாதனையின் போது சாதகன் சில அனுபவங்களைப் பெறுகிறான். ரிஷி மகாத்மாக்கள் மற்றும் பல்வகையான அற்புதக் காட்சிகளை அவன் காண்கிறான். பல்வேறு இனிய கீதங்களை அவன் கேட்கிறான். திவ்ய மணங்களை முகர்கிறான். எண்ணத்தை அறிதல், முன் அறிவித்தல் போன்ற ஆற்றல்களைப் பெறுகிறான். இந்த நிலையில் சாதகன் மிக மேலான இலட்சியத்தை தான் அடைந்துவிட்டதாக முட்டாள்தனமாக கருதி தனது சாதனையை அவன் நிறுத்திவிடுகிறான். இது ஒரு மாபெரும் தவறு. அவன் போலியான திருப்தியை அடைகிறான். சிறிதளவு தூய்மை மற்றும் மன ஒருமைப்பாட்டினால் தோன்றும் சில மங்களகரமான அறிகுறிகளே இவை. சாதனையில் மேலும் தீவிரமாக முன்னேற வேண்டும் என்பதற்காக கடவுள் சாதகனுக்கு தரும் ஊக்கப் பரிசுகளே இவை. இந்த அனுபவங்களால் சாதகன் மேலும் உறுதி அடைகிறான்.

தன்னலமற்ற தொண்டின் மூலம் எவர் மனத்திலுள்ள அசுத்தங்களை அகற்றவில்லையோ, யமநியமத்தை எவர் கடைப்பிடிக்கவில்லையோ ஒழுக்கப் பண்புகளை எவர் வளர்க்கவில்லையோ, மேற்காணும் முன் தகுதிகளுடன் எவர் தியானத்தை மேற்கொள்ளவில்லையோ அவர்களால் தெய்வீக ஒளி இறங்குவதைக் கண்டு கொள்ள முடியாது. இந்த ஆற்றல் மிக்க ஆன்மீக ஒளியை பெறுவதற்கு உரிய சக்தி, மனதிடம் இல்லை. எனவே அவர்கள் பயந்து போய் சாதனையை நிறுத்திவிடுகின்றனர். இது பெரும் தவறு. அவர்கள் தங்கள் மனத்தை தூய்மைபடுத்தி தெய்வீக குணங்களைப் பெற்று புதிய ஆர்வம், ஊக்கம், மற்றும்

சக்தியுடன் தங்களது சாதனையை மீண்டும் தொடங்க வேண்டும்.

அவர்கள் சாதனையில் ஒழுங்காக இல்லையானால், அவர்களது வைராக்கியம் குறையுமானால், உலகாயத நபர்களுடன் அவர்கள் அதிகமாகப் பழகினால், அவர்கள் வீழ்ச்சி அடைகிறார்கள், தெய்வ அருள் மறைகிறது, அனுபவங்கள் மறைந்துபோகின்றன. மீண்டும் தங்களது ஆன்மீகப் புகழ் ஏற்றத்தை அவர்களால் அடைய முடிவதில்லை.

எனவே சாதனையில் ஒழுங்குப்பாடும், அதிகமான வைராக்கியமும் எப்பொழுதும் பேணப்படவேண்டும்.

போலி வைராக்கியத்தின் காரணமாக சாதகர்கள் தங்கள் உடலைப் புறக்கணிக்கின்றனர். சரியாக அவர்கள் உணவு உண்பதில்லை, அவர்கள் மெலிந்து போகின்றனர். தீவிரமாக அவர்களால் சாதனையை தொடர முடிவதில்லை. அவர்களது பின்னடைவிற்கு இதுவும் ஒரு காரணம்.

அவர்களது அபரிமிதமான ஆர்வம், உற்சாகம் காரணமாக அவர்கள் சாதனையில் அளவுக்கு அதிகமாக ஈடுபடுகின்றனர். அதிகமாக வருத்திக் கொள்கின்றனர். தங்கள் சக்தியையும் மீறிச் செல்கின்றனர். இத்துடன் சரியான உணவும் சாப்பிடப்படாத பொழுது அவர்கள் பல்வேறு வியாதிகளுக்கு இலக்காகி சாதனையை விட்டுவிடுகின்றனர்.

ஆழ்ந்த தியானத்தில் ஒருவர் உறுதி பெறும் வரை, ஆரம்பத்தில் தியானத்துடன் மனதுக்கினிய ஏதாவது வேலை இணைக்கப் படவேண்டும். ஓய்வு நேரங்களில் கொஞ்சம் நூல் வாசித்தல், சிறிது வேலை இருத்தல் நல்லது.

ஆரம்ப சாதகன் எப்பொழுதுமே தனது குரு அல்லது மூத்த சாதகர் ஒருவரிடம் உதவி பெற்றுத்தான் தியானம் செய்ய வேண்டும். இது மிகவும் முக்கியம்.

பிறகு பிரபஞ்ச உணர்வு அனுபவம் வருகிறது. பிரம்மனைக் காணுதல் உங்களுக்கு முக்தி நல்காது. அவை சிற்றனுபவங்களேயாகும். 'பூமா' அனுபவமே உங்களுக்கு முக்தியை அளிக்கும்.

பிரம்மனுடன் நீங்கள் ஒன்றாகி எங்கும் பிரம்மத்தைக் காண்பதுவே அனைத்திலும் மேலான அனுபவமாகும்.

எல்லாம் சாதனையைப் பொறுத்தே அமைகிறது. பயிற்சியே மனிதனைப் பூரணமாக்குகிறது என்பது நீங்கள் அறிந்ததே. இலட்சியத்தை நீங்கள் நெருங்குகையில் உங்களிடம் தோன்றும் மட்டற்ற மகிழ்ச்சியை அனுபவியுங்கள். அற்புதமான அமைதியை நீங்கள் இப்பொழுது அனுபவிப்பீர்கள். ஆழ்ந்த மோனத்தில் அமிருதத்தைப் பருகுங்கள். உள்ளங்கை நெல்லிக்கனி போல உயர்ந்த மோனத்தில் அதிசய ஆத்மன் உங்களுக்கு வெளிப்படும். அவித்யை, மாயை மற்றும் அவற்றின் விளைவுகளான மோகம், பயம் அனைத்தும் ஓடிவிடும். எங்கும் ஒளி, ஞானம், தூய்மை மற்றும் ஆனந்தமே நிலவும்.

சிலர் விவரிக்கமுடியாத ஆத்மனின் அற்புதங்களை அனுபவிக்கின்றனர். சிலர் ஆத்ம சாம்ராஜ்யத்தின் எல்லைப் பகுதியில் இருப்பர். தத்தாத்ரேயர், ஜடபரதர், வாமதேவர், சதாசிவ பிரம்மேந்திரர் போன்றோர் ஆனந்த சாகரத்தில் மூழ்கிப் போயிருந்தனர். எந்த அளவு வாசனைகள், ஆணவம், மோகம் முதலியன இல்லாதாகின்றனவோ அந்த அளவுக்கு ஆத்மானந்தம் அதிகரிக்கிறது. சாதனை அதிகரிக்குமளவு ஆத்மானந்தமும் கூடுகிறது.

அத்யாயம் நான்கு

# ஸமாதி அல்லது உணர்வு கடந்த நிலை

## 27. ஸமாதி என்றால் என்ன?

மனம், வாக்கு கடந்த உள் தெய்வீக அனுபவமே ஸமாதி. அதை விளக்க மொழியோ வழியோ கிடையாது. ஸமாதி நிலை என்பது முழு ஆனந்தம், அமைதி, இன்பம் அனைத்து மனச் செயல்களும் இங்கே ஒடுங்குகின்றன. தன்மைக்கும் முன்னிலைக்குமிடையில் வேற்றுமை எதுவும் கிடையாது.

தொடர்பு அனைத்துக்கும் அப்பாற்பட்டது இந்த நிலை. அது செயலற்ற நிலை அல்ல. அது பூரண விழிப்பு நிலையாகும். அது வெறும் உணர்ச்சி வசப்பட்ட உற்சாகமோ அல்லது அதிசய உணர்வோ அல்ல. உண்மை அல்லது பூரண உணர்வின் நேரடியான, பிரத்யேக உள் அனுபவமாகும். சிறிது பயிற்சியால் பெறப்படும் அனுபவம் அல்ல அது. ஸமாதியை அடைய ஒருவரிடம் கண்டிப்பான பிரம்மச்சரியம், உணவுக் கட்டுப்பாடு மற்றும் இதயத் தூய்மை இருத்தல் வேண்டும்.

ஒருவன் மிகவும் தூயவனாக மாறினாலொழிய ஸமாதி நிலையில் புகமுடியாது. மனம் முழுக்கவும் தூய்மை யாக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் தெய்வீக ஒளியைப் பெறத்தக்கதாக பாத்திரம் அமையும். மனம் கடந்த, படைப்பு அனைத்தையும் ஒரே வீச்சில் ஈர்க்கும் இந்த அனுபவத்தைப் பெற, பிரபஞ்ச உணர்வினைப் பெறத் தக்க திடீர் அழுத்தத்தைத் தாங்கவல்ல ஆற்றலை அது பெற்று விளங்க வேண்டும்.

ஸமாதியின் மூலமே ஒருவன் அறியாததை அறிய முடியும். காணாததைக் காணமுடியும். புகமுடியாததில் புக முடியும். மூவுலகத்திலுமுள்ள ஒட்டு மொத்த லௌகிக விஞ்ஞான அறிவானது ஸமாதியில் மிக மேலான நிலையை அடைந்த முனிவரின் அளவற்ற ஞானத்தின் முன் ஒன்றுமேயில்லை. வெறும் தூசுக்கு நிகர்.

பலர் நினைப்பது போல ஸமாதி என்பது கல்லைப் போன்ற ஜடநிலை அல்ல.

மனமானது பூரணமாக தியானத்தில் மூழ்கும்போது அது ஸமாதி எனப்படுகிறது.

ஸமாதியில் ஜீவாத்மா - பரமாத்ம ஐக்கியம் உணரப்படுகிறது.

ஸமாதியில் நீங்கள் உலக வாழ்வின் கட்டுப்பாடுகளைக் கடந்து நிறைந்த உள் வாழ்வை அடைகிறீர்கள்.

ஸமாதியில் மனம் அத்ன் உணர்வையே இழந்து தியானிக்கப்படும் பொருளுடன் ஒன்றிவிடுகிறது.

சமய நூல்களை ஒழுங்காகப் படிப்பதுவே ஒருவித ஸவிகல்ப ஸமாதி ஆகிறது.

சீடன் சோம்பி உட்கார்ந்து கொண்டு, ஸமாதியில் குரு தன்னைத் தள்ளிவிடுவார் என்று எதிர்பார்க்கக் கூடாது.

பரமாத்மனை ஒருவன் உணருகையில் அங்கே தியானமோ ஸமாதியோ கிடையாது.

நேரிடை தியான ஸமாதியில் ஞானி தன்னுள் உலகை எண்ணங்களின் அசைவாகக் காண்கிறான்.

தூய நிர்விகல்ப ஸமாதியை அனுபவித்த யோகி பிறப்பிறப்பை கடக்கிறான்

பிரபஞ்ச உணர்வு நிலை விளக்கத்திற்கு அப்பாற்பட்டது. அது அச்சம், பரமானந்தம் மற்றும் தூய மகிழ்ச்சியைத் தூண்டுகிறது. பிரபஞ்ச உணர்வு என்பது பூரண உணர்விற்குத் தாழ்ந்த நிலை தான். இதில் பார்ப்போன், பார்வை, பார்க்கப்படுவது; அறிவோன், அறியப்படுவது, அறிவு மற்றும் தன்மையும் முன்னிலையும் ஒன்றாகிவிடுகின்றன. பிரபஞ்ச உணர்வில் பார்ப்போனும் பார்க்கப்படுவதும் இன்னும் உண்டு.

பிரபஞ்ச உணர்வு என்பது ஒருமித்த வாழ்வின் பூரண உணர்வேயாகும். பிரபஞ்சமானது உயிருள்ள, அசைவுள்ள, அறிவுள்ள ஒரே உயிர்ப்பு சக்தியால் நிரம்பி உள்ளது என்றும் குருட்டு சக்தி அல்லது உயிரற்ற பொருள் என்று எதுவும் கிடையாது என்றும் யோகி உணருகிறான். அவன் தெய்வீகப் பார்வையைப் பெற்று வர்ணிக்க முடியாத ஆனந்தத்தை அனுபவிக்கிறான். அனைத்தும் அவனே என அவன் உணர்கிறான். பாம்பு, தேள், புலி எல்லாம் அவனது கண், மூக்கு, காது, கை, கால் போல அவனுடன் ஒன்றியவையே என்பதை உணருகிறான்.

ஆகாயம், பூ, வானம், கடல் ஆகியவற்றுடன் அவன் ஒன்றாகிவிடுகிறான். தன் நாடி நரம்புகளில் வாழ்வின் அமிருதம், அழியாத தேனமுதம் பாய்வதாக உணர்கிறான். நிறைவான அன்பெனும் கடலில் பிரபஞ்சம் முழுவதும் மூழ்கியிருப்பதாக அவன் உணர்கிறான்.

## 28. ஜடஸமாதியும் சைதன்ய ஸமாதியும்

ஸமாதி இரு வகைப்படும் : ஜடஸ்மாதி, சைதன்ய ஸமாதி. கௌபீனம் அணிந்து மூச்சை அடக்கி பத்மாசனத்தில் உணர்வற்று அமர்வதுதான் ஸமாதி என்று பொதுவாக கருதப்படுகிறது. தனது சூழ்நிலையைப் பற்றி சிறிதும் உணர்வு இருக்கக்கூடாது, ஒரு கத்தியை உடலினுள்

சொருகினாலும் சிறிதும் உணர்ச்சியற்று இருக்கவேண்டும். இதுதான் ஸமாதியில் இருப்பவனின் இலக்கணம் என்று பொதுவாக மக்கள் நினைக்கின்றனர். இத்தகைய ஸமாதிகள் இருக்கத்தான் செய்கின்றன. கேசரி முத்திரை, கும்பக பிராணாயாமம் எனும் மூச்சை நிறுத்துதல் போன்ற ஹடயோக கிரியைகளால் தூண்டப்பட்ட ஜடஸமாதிகள் அவை. பிராணன் மேலே கொண்டு செல்லப்பட்டு ஏதாவது சக்கரத்தில் நிலைநிறுத்தப்படுகிறது. தாற்காலிகமாக அந்த மனிதன் செத்ததற்கு நிகர். இது நீண்ட தூக்கத்திற்கு நிகர். இந்த ஸமாதிகளுக்கு முக்கியத்துவமே கிடையாது. ஸம்ஸ்காரங்களும் வாசனைகளும் முழுவதுமாக எரிக்கப்படவில்லை. இந்த ஸமாதியில் பூரண ப்ரக்ஞை இல்லை. ஸமாதியிலிருந்து அந்த மனிதன் அதே பழைய வாசனைகள், சம்ஸ்காரங்களுடன் பழைய மனிதனாகவே திரும்புகிறான். அவனுக்கு விசேஷ ஞானம் எதுவும் இருக்காது. இது ஏதோ ஒரு வித விளையாட்டு வித்தை. இத்தகைய ஸமாதி, முக்தி அல்லது விடுதலை தரமாட்டா. இத்தகைய காட்சிகளால் சாதாரண உலகியல் மக்கள் ஏமாற்றப்படுகிறார்கள்.

உண்மையான ஸமாதி என்பது முற்றிலும் வேறுபட்டது. அது புலன் கடந்த அறிவை அளிக்கிறது. ஞானாக்னியால் எல்லா சந்தேகங்களும், மயக்கங்களும், அவித்யா, காமம், கர்மம் எனும் மும் முடிச்சுக்களும் அழிக்கப்படுகின்றன. எல்லா சம்ஸ்காரங்களும் வாசனைகளும் முழுவதுமாக வறுக்கப் படுகின்றன. அது பூரண பயமின்மையையும், அசையாத நிலையையும் அளிக்கின்றன. பகவத்கீதை இரண்டாம் அத்யாயத்தில் இந்த நிலை விரிவாக விளக்கப்படுகிறது.

வேலை செய்யும்பொழுது கூட ஸமாதிநிலை பாதுகாக்கப்படுகிறது. எல்லார் இதயத்திலும் உறையும் ஆத்மனின் தொண்டிற்கான பூரண கருவிகளாக மனமும்

உடலும் பயன்படுத்தப்படுகின்றன. ஸ்ரீ சங்கரர், பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், ஸ்ரீ ராமர் போன்றோர் செயல் புரியும் பொழுதும் பிரம்ம ஸ்திதியிலிருந்து சிறிதும் பிசகாதிருந் தனர். தனது ஆட்சியைக் கவனித்த பொழுதும் ராஜா ஜனகர் உண்மையான ஸமாதியை அனுபவித்தார். ஒரு வினாடி கூட அவர் பிரம்மனை மறந்ததில்லை. அவர் சோதனைக்குட் படுத்தப்பட்ட பொழுது சொன்னார் : "மிதிலை முழுவதும் எரிந்தாலும் எனக்கு எந்த வித நஷ்டமும் கிடையாது. அழியாத ஆத்ம சாம்ராஜ்யம் என்னிடம் உள்ளது". ஸமாதியில் நிலை பெற்றவன் தனது மனத்தையும் உடலையும் பூரண நடுநிலையில் வைத்து அவற்றை ஆத்மபாவனையுடன் சமூகத் தொண்டில் பயன்படுத்துகிறான். அவன் யாண்டும் பிரம்மத்தில் நிலைத்திருக்கிறான். அவன் யாண்டும் ஸமாதியில் உள்ளான். எந்த நிலைமையிலும் அவனுக்கு விக்ஷேபம் அல்லது சலனம் கிடையாது. ஆத்ம ஞானத்தின் காரணமாக அவன் உறுதியுடன் இருக்கிறான். உண்மை ஸமாதியானது தியானத்தில் போலவே செயலிலும் பாதுகாக்கப்பட வேண்டும். ஒருவனது ஆத்மபலம் மற்றும் ஆத்மானுபவத்திற்கு இதுவே உண்மையான தேர்வாகும். இதுதான் உண்மையான சைதன்ய ஸமாதியாகும். கண்களை மூடி மலைக்குகை களிலும் காடுகளிலும் ஒருவன் அடையும் ஸமாதி, வேலையின்போது சிதறடையுமானால், அது ஸமாதியேயல்ல.

## 29. ஸமாதி மார்க்கம் பற்றிய விளக்கம்

மனமும் சுவாசமும் பாலும் நீரும் போல. மன அடக்கம் தான் ராஜயோகம். பூரண யோகியாக விரும்பும் ஒருவன், ஸமாதியை அற்புதமாக அனுபவிக்க விரும்பும் ஒருவன், மனத்தையும் சுவாசத்தையும் கட்டுப்படுத்த வேண்டும். யோகத்தை அவன் தொடர்ந்து பயின்று, விதிகளைக்

கடைப்பிடிக்க வேண்டும். ஐந்து தத்துவங்களையும் அவன் பூரணமாக வெல்லவேண்டும்.

மனத்தைக் கட்டுப்படுத்துதலே ஞானத்திற்கு வழி வகுக்கிறது. இந்த 'நிரோதம்' தான் ஸாங்க்யம் மற்றும் யோகத்தில் பூர்த்தியாகும். எல்லா சாதனைகள் மற்றும் ஆன்மீகப் பயிற்சிகளின் அடிப்படையே நிரோதம் தான். எல்லா வழிபாட்டின் சாரம் மன அடக்கமே. இதுவே ஞானமும் தியானமுமாகும். மன அடக்கத்தினால் மிக உயர்ந்த இலட்சியம் அடையப்படுகிறது. பொருள்களிலிருந்து மனமானது பூரணமாக விலக்கப்பட வேண்டும். இதயத்தில் மனம் கரைந்து போகும்வரை அது அடக்கப்பட வேண்டும்.

ஆத்மன் அல்லது பிரம்மமே உங்களது அழியாத ஆத்மாவாகும். அது ஒன்றே ஒளிரும் உண்மையாகும். இந்த ஆத்மனை நீங்கள் அறிந்தால் தான் நீங்கள் பூரணத்துவத்தை அடையமுடியும். இந்தப் பிறவியிலேயே பூரணத்துவம் உங்களுடையதாகும். அடிப்படை உண்மையான, பூரணத்து வமான இந்த ஆத்மனை நீங்கள் உணர்ந்தால்தான் உங்கள் வாழ்க்கை பயனுள்ளதாகவும் அர்த்தமுள்ளதாகவும் ஆகும். அகப் பூரணத்துவமான ஆத்மனை அறிபவன் தான் எல்லாத் துன்பங்களையும் கடந்து சுதந்திரனாகிறான். இந்த ஆத்மனை நீங்கள் அறியவில்லையானால் பேரிழப்பு உங்களுக்குக் காத்திருக்கிறது.

ஸமாதி என்பது ஒரு வெறும் உணர்ச்சி பூர்வமான உற்சாகமோ, அல்லது உத்வேகமோ அல்ல. அது பூரண உணர்வு அல்லது அடிப்படை உண்மையை நேரடியாக உள்முகமாக அனுபவிப்பதாகும். அது எல்லா உணர்ச்சி, உற்சாகம் மற்றும் துடிப்புகளுக்கு அப்பாற்பட்டது. வர்ணிக்கமுடியாததொரு பூரண ப்ரக்ஞை ஸமாதியில் உள்ளது. சாதகன் அவனது தேடுதலின் மையத்தில் இப்பொழுது இருக்கிறான், பூரண சுதந்திரத்தை உணர்கிறான்.

எரியும் வீட்டிலிருந்து தப்பிக்கும் வழியை ஒருவன் எவ்வளவு ஆத்திர அவசரத்துடன் தேடுவானோ, அதைப் போல சாதகன் ஒருவன் ஸம்ஸாரத் தீயிலிருந்து தன்னை விடுவிக்க மிகுந்த வேட்கை கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் அவனால் ஆழ்ந்த தியானம், ஸமாதியினுள் புகமுடியும்.

மனம் தூய்மைப்படுத்தப்பட்டு ஸமாதி நிலைக்கு கொண்டு வரப்படும்பொழுது அது பிரம்மமாகவே ஆகிறது. ஸமாதியில் இரண்டின் காட்சி கிடையாததால், பயம் எதுவும் இல்லை. அவித்தை ஸமாதியில் இல்லாதாகிறது.

ஸமாதி உங்களை ஆத்மாவில் அமர்த்துகிறது. ஸமாதியின் மூலம் எல்லைக்குட்பட்ட ஜீவாத்மன் பரம்பொருளில் லயமாகிறது. ஸமாதியில் மன உளைச்சல் இல்லை. அங்கே பூரண அமைதி, பூரண சாந்தி நிலவுகிறது. மனம் பூரணமாக ஒடுங்குகிறது. ஸமாதி தியானத்தைத் தொடர்ந்து வருகிறது. ஆழ்ந்த தியானமே ஸமாதி. ஆழ்ந்த தியானத்தில் கட்டுப்பாட்டுடன் இருக்கும் மனம் நிர்விகல்ப ஸமாதியில் புகமுடியும்.

ஸமாதியில் மனம் தனது இயல்பான தொழிலிலிருந்து விலகி, அதனால் தொடப்படாத ஆத்மனில் நிலை பெறுகிறது. ஸமாதியில் மனம் செயல்படுவது கிடையாது. அது பிரம்மனில் லயமாகிறது. நீங்கள் உணர்வுடன் கூடிய ஆழ்ந்த தூக்கம் போன்றதொரு நிலையை தூண்ட முடியுமானால், அது ஆழ்ந்த உறக்கம் அல்ல, அதுவே ஸமாதியாகும். அது தூங்காத தூக்கமாகும். அதில் புலன்களும் மனமும் செயலற்றதாகின்றன. ஞானக்கினியால் அறியாமைத் திரை அழிக்கப்படுகிறது. சாதகன் பிரபஞ்சம் கடந்த அரிய சுதந்திரமான பூரண இன்பத்தையும், அமரத்துவத்தின் மேலான மோனத்தையும் அனுபவிக்கிறான்.

ஸமாதியில் தூய்மைப்படுத்தப்பட்ட மனம் புறப்பொருள் களிலிருந்து உள்ளிழுத்து, உள்ளே நோக்கி, ஆத்மனில் ஒருமைப்படுகிறது. அது ஆத்மனுடன் ஐக்கியமாகிவிடுகிறது. கற்பூரம் நெருப்பாக ஆகிவிடுவது போல, அது ஆத்மனாக ஆகிறது. பிரம்மஞானம் என்பது உண்மையான அனுபவமாகும். அது வெறுமனே அறிவதல்ல. 'பிரம்மவித் பிரம்மைவ பவதி'- பிரம்மத்தை அறிவதும் பிரம்மனாக ஆவதும் ஒன்றே - இது உபநிஷதங்களின் ஆணித்தரமான கூற்று.

ஸமாதியில் உள்பார்வை, உள்ளுணர்வு இருக்கிறது. ஞானசக்ஷு அல்லது திவ்வியசக்ஷு (ஞானக்கண்) திறக்கிறது. பிரம்மாகார விருத்தி ஓங்குகையில் ஞானமாகிய மூன்றாவது கண் திறக்கப்படுகிறது. ஸமாதி அனுபவத்தில் உள்ள முனிவன் தன் சொந்த ஆத்மனில் லயிக்கிறான். அவன் பிரபஞ்சக் காட்சி மற்றும் புலன் கடந்த தெய்வீக ஞானத்தைப் பெறுகிறான்.

நீங்கள் ஸமாதி நிஷ்டையில் இருக்கும் வரை, இருப்பது பிரம்மன் ஒன்றே. நிரந்தர ஸமாதி என்பது கண்ணை மூடி உட்கார்ந்திருப்பது அல்ல. அது உடல் பற்றைத் துறந்து, ஜீவாத்மனையும் பரமாத்மனையும் ஒன்றாகக் கருதி, தன்னையே பரமாத்மாவாகக் கருதி அந்த ஞானத்தில் செயல்படுவதாகும். ஸமாதி என்பது மனோ நாசமேயாகும். அவன் எங்கே சென்றாலும் ஒரே ஆத்மனையே அவன் எங்கும் காண்கிறான். தன்னை மறுத்தல் அல்லது தன்னையறிதல் மட்டும் போதாது, ஆனால் இந்த இரண்டும் ஒன்றி இருத்தலே நிரந்தர ஸமாதியாகும். ஆத்மஞானம் என்பது பிரம்மநிஷ்டையாகும். இதை அடைந்தவனுக்கு சரீரம் கிடையாது.

உணர்ச்சியிலிருந்து மனம் விடுபட்ட நிலையே முக்தி. விஷயம் என்பது புலன்களின் செயல்பாடு. எனவே

புலன்களுடன் தொடர்பில்லாமல், அல்லது மனத்தின் செயல்பாடுகளான ஆசைகள், அச்சங்கள் ஆகியவற்றிலிருந்து மனம் விடுபட்டிருப்பதே முக்தி. பிரம்மத்துடன் இணைந்தாலன்றி உணர்ச்சிகளிலிருந்து மனத்தைப் பிரிக்க இயலாது. பிரம்மனுடன் மனம் ஒன்றாகிறது. இதுவே முக்தி. இதுவே "நிர்விஷய நிலை".

ஜீவாத்மன் பரமாத்மன் ஆகிறது. இதுவே முக்தி. நீரோடு கலந்த உப்பு நீராவது போல, பிரம்மனுடன் கலந்த மனம் பிரம்மனாகிறது. மனம் பிரம்மனாகும்போது மனத்தின் படைப்பான இந்த உலகமும் பிரம்மனில் கரைந்து பிரம்மனாகிறது. எனவே 'சர்வம் பிரம்மமயம்' என்பது நிஷ்டை கூடியவனுக்கே சாத்தியமாகும்.

வேதாந்தத்தின்படி அவித்தை அல்லது அக்ஞான நாசமே ஸமாதியாகும். பதஞ்ஜலி மகரிஷியின் கருத்துப்படி அப்யாஸ வைராக்கியத்தால் பிரகிருதியின் பிடியிலிருந்து விடுபடு வதனால்தான் சாதகன் ஸமாதியை அடைகிறான்.

வேதாந்தி நித்திய ஆனந்தத்தையும் ஸஹஜஸமாதியின் இயற்கையான அமைதியையும் அனுபவிக்கிறான். அவன் சாட்சி அல்லது மௌன பார்வையாளராக இருக்கிறான். எண்ண ஓட்டத்தை அவன் பலவந்தமான முறை எதனாலும் கட்டுப்படுத்த முயல்வதில்லை. 'தத் த்வம் அஸி' மஹாவாக்கியத்தின் உட்பொருளை தியானிப்பதன் மூலம் அவன் பிரம்மாகார விருத்தியை உண்டாக்குகிறான். சித்தம் பிரம்மாகார விருத்தியாக மாற்றப்படுகிறது. மற்ற எல்லா விருத்திகளும் அகற்றப்படுகின்றன. இந்த விருத்தி அறியாமையை அழித்து தானும் அழிந்து போகிறது. தனது ஒற்றுமையை உணரும் சாதகனிடம் பிரம்மன் ஒளிர்கிறது. விருத்தி தொடர்ந்து இருக்கையில் மிக உயர்ந்த ஸமாதியான நிர்விகல்ப ஸமாதி அடையப்படுகிறது. அது அவ்வப்

பொழுது வரும்பொழுது முனிவர் சவிகல்ப ஸமாதியை பெறுகிறார்.

ஞானியின் ஸமாதி முயற்சி இன்றி, தானாக வருவதாகும். 'யத்ர யத்ர மனோ யாதி தத்ர தத்ர ஸமாதய : - எங் கெல்லாம் மனம் போகிறதோ அங்கே அது ஸமாதியை அனுபவிக்கிறது. அவன் எப்பொழுதும் ஸமாதியை அனுபவிக்கிறான். முனிவர் ஒருவருக்கு 'ஸமாதியில்' மற்றும் 'ஸமாதியை விட்டு' என்பதெல்லாம் கிடையாது. எந்தவித முயற்சியும் இன்றி அவர் ஸமாதியை எப்பொழுதும் அனுபவிக்கிறார். எனவே அது ஸஹஜாவஸ்தை அல்லது ஸஹஜஸமாதி என்று அழைக்கப்படுகிறது வாழ்வின் ஒவ்வொரு வினாடியிலும் அவன் சுதந்திரம், ஆனந்தம், அமைதியை அனுபவிக்கிறான். இந்த வாழ்விலேயே அவன் அமரத்வ அமிருதத்தைப் பருகுகிறான்.

யோகியின் ஸமாதி பகுத்தறிவது, பிரித்தறிவது. இந்த ஸமாதியில் பிரகிருதி, புருஷன் ஆகியவற்றிற்கிடையேயான வேறுபாட்டில் கவனம் செலுத்தப்படுகிறது. ஞான ஸமாதியில் இத்தகைய பிரிவு தேவையில்லை. பரமாத்மன் அல்லது பிரம்ம சிந்தனையுடன் ஒன்றிக்க ஏற்படுத்தப்படும் பிரம்மாகார விருத்தி அவித்தையை இல்லாததாக்கி தானும் மறைந்து போகிறது.

## ஸமாதி

இறைவனுடன் ஒன்றிப்பதுவே ஸமாதி. அது உணர்வுகடந்த அனுபவம். அது அத்யாத்மிக அனுபவம்.

ஒரு ஹடயோகி கேசரி முத்திரையைப் பயின்று தன்னை ஒரு பெட்டிக்குள் வைத்து அதை பூமிக்கடியில் மாதக் கணக்கில் புதைக்கச் சொல்லுவான். இந்த வகை ஸமாதியில் புலன்கடந்த மேலான அறிவு எதுவும் கிடையாது. ஜடஸமாதியில் சாதகன் உணர்வின்றி இருக்கிறான். அது

ஏறக்குறைய ஆழ்ந்த உறக்கத்திற்கு நிகர். சாதகனிடம் புலன் கடந்த அறிவு எதுவும் இருக்காது. உண்மையில் இது ஒரு கடினமான யோகக்கிரியைதான். எனினும் இது ஆத்ம ஞானத்தை நல்காது. அது ஸம்ஸ்காரங்களையும் வாசனைகளையும் அழிக்காது. இந்த வகை ஹடயோகிகள் காலப்போக்கில் வர்த்தகரீதியில் செயல்படுகின்றனரே தவிர, ஆன்மீகப் பாதையில் முன்னேறுவதில்லை. அவர்கள் பெயர், புகழ், பணத்தின் பின் அலைந்து ஆன்மீகத்தில் முன்னேறாமல் படுகுழியில் விழுகின்றனர். சைதன்ய ஸமாதியில் பூரண உணர்வு உண்டு. புதிய புலன் கடந்த ஞானத்துடன் யோகி கீழே வருகிறான்.

ஸமாதி, முக்தி, துரீயம் எல்லாம் ஒரு பொருளுள்ள பல சொற்களே. ஸமாதி என்றால் உணர்வு கடந்த நிலை என்பது பொருள். ஸமாதியில் தியானிப்பவனுக்கு அவனைப் பற்றிய அறிவு உண்டு. பிறப்பு இறப்பிலிருந்து விடுதலையே முக்தி. பேரானந்த நிலையை அடைவதே முக்தி. எல்லாவித துன்பங்களிலிருந்தும் விடுபடுவதே முக்தி. துரீயம் நான்காவது நிலை. ஜாக்ரத் (விழிப்பு நிலை), ஸ்வப்னம் (கனவு நிலை), ஸுஷுப்தி (ஆழ்ந்த உறக்க நிலை) என்ற மூன்று நிலைகளையும் கடந்தது அது. இம் மூன்று நிலைகளிலிருந்தும் வேறுபடுத்துவதற்காக அது நான்காவது நிலை எனப்படுகிறது.

தெய்வீகத்தில் ஒருவன் தன்னை இழப்பதுவே மோட்சமாகும். ஆளுமை அல்லது தனது தனித்தன்மையாம் மோகத்திலிருந்து விடுபடுவதே அது. இந்த போலியான ஆளுமையைக் கரைப்பதால் அழிவு எதுவும் ஏற்படாது. ஆறு கடலுடன் சங்கமமாவது போல், ஜீவாத்மன் பேரறிவும், பரமானந்தமும், ஞானத்துடனும் கூடிய பரமாத்மனுடன் ஐக்கியமாகிறது.

ஸமாதி நிலை என்பது மனம், வாக்கினால் எட்டப்படாத நிலை. ஆப்பிளைச் சாப்பிட்டு அறியாதவனுக்கு உலகாயதரீதியில் எவ்வாறு ஆப்பிளின் ருசியை உங்களால் விளக்கிக் கூற முடியாதோ, கண்பார்வை அற்ற குருடனுக்கு நிறத்தைப்பற்றி விவரிக்க முடியாதோ அதுபோல ஸமாதி நிலையை வர்ணிக்க இயலாது. ஸமாதி நிலை என்பது ஒரே ஆனந்தம், இன்பம், அமைதி, இவ்வளவுதான் சொல்லமுடியும். இதை ஒருவன் தானே உணர வேண்டும்.

ஸமாதி அல்லது உணர்வு கடந்த நிலையில் தியானிப்பவர் தமது ஜீவபோதத்தை இழந்து பரமாத்மனுடன் ஒன்றிக்கிறார். அவர் அமைதி, ஆனந்தம், அறிவின் சொரூபமாக ஆகிறார். இவ்வளவு தான் சொல்ல முடியும். தொடர்ந்த தியானத்தின் மூலம் இதை நீங்களே உணரலாம்.

நிர்விகல்பஸமாதி என்பது உணர்வுகடந்த இறைநிலையாகும். இந்த நிலையில் கற்பனையுடன் கூடிய விகல்பம் எதுவும் கிடையாது. இதுவே வாழ்வின் குறிக்கோள். இப்பொழுது எல்லா மனச் செயல்களும் இல்லாதாகின்றன. புத்தி மற்றும் பத்து இந்திரியங்களின் செயல்பாடு முற்றிலும் அற்றுப் போகிறது. சாதகன் ஆத்மனில் லயிக்கிறான். தன்மைக்கும் படர்க்கைக்கு மிடையில் எந்தவித வேறுபாடும் கிடையாது. உலகமும் எதிரிடை இரட்டைகளும் பூரணமாக மறைந்துபோகின்றன. இது எல்லாத் தொடர்புகளுக்கும் அப்பாற்பட்டது. அது மந்த நிலை அல்ல. அது பூரணபோத நிலை. சாதகன் ஆன்மஞானம், மேலான அமைதி, சொலற்கரிய ஆனந்தத்தை அடைகிறான். இந்த நிலை வார்த்தைகளால் விவரிக்க முடியாதது. அது சாதகனால் உணர்ந்து அனுபவிக்கப்பட வேண்டும். அறிவோன், அறிவு, அறியப்படு பொருள் என்ற மும்மை மறைந்துபோகிறது. இப்பொழுது மனிதன் பிரம்மமாகிறான். ஜீவபோதம் முற்றிலும் இல்லாததாகிறது இது யோகாரூட நிலை என்றும் அழைக்கப்படுகிறது.

எல்லாப் புலன்கள் மற்றும் மனம் அமைதி அடைகின்றன. அறிவு வேலை செய்வது நின்று போகிறது. இந்தத் தூங்காத தூக்கம் மஹாநித்திரை அல்லது உணர்வு கடந்த நிலை எனப்படுகிறது. ஜீவாத்மன், பரமாத்மனுடன் ஒன்றாய் லயித்த பூரண போத நிலை. இந்த தூக்கத்திலிருந்து விழிப்பது என்பது கிடையாது. நாம ரூபக் காட்சிகள் மறைந்து போகின்றன.

ஸமாதி அல்லது மேலுணர்வு நிலையில் யோக சாதகன் இறைவனுடன் ஒன்றித்துவிடுகிறான். புலன்கள், மனம், அறிவு எல்லாம் செயல்படாது நின்றுவிடுகின்றன. நதி கடலுடன் சங்கமமாவது போல, ஜீவாத்மன் பரமாத்மனுடன் லயிக்கிறான். எல்லா வேறுபாடுகளும் உபாதிகளும் மறைகின்றன. யோகி மிக மேலான அறிவையும் ஆனந்தத்தையும் அடைகிறான். இந்த நிலை வர்ணனைக்கு அப்பாற்பட்டது. இதை நீங்களேதான் உணர வேண்டும்.

## II

மனத்தின் அலைகளை நிறுத்தி, அதை நிர்விகல்ப ஸமாதியில் நிலைபெறச் செய்யுங்கள். இதற்கு நிலையான பன்முக தியானப் பயிற்சி தேவை. ஆரம்பத்தில் தியானத்தில் தடைகள் ஏற்படலாம். ஆனால் பயிற்சி உங்களைப் பூரணராக்கும். பின்னர் நீங்கள் தியானத்தில் லயித்திருக்கலாம். காற்று இல்லாத இடத்தில் நின்று ஒளிரும் சுடர்போல நிலைத்த மனத்துடன் நீங்கள் ஸமாதியில் லயிக்கலாம். தியானத்தில் வெற்றி பெறும்முன் முதலில் ஆசனத்தில் வெற்றி பெறுங்கள். உங்கள் ஆசனத்தில் சிலை போல இரண்டு அல்லது மூன்று மணி நேரம் அமருங்கள். உடல் நிலையாக இருந்தால் மனமும் நிலைபெறும்.

சிறிதுநேரம் மனம் ஒருமைப்படுவதை ஸமாதி என்று தவறாக எண்ணிவிடாதீர்கள். சிறிது மன ஒருமைப்பாட்டின்

காரணமாக உடல் உணர்வுக்கு கொஞ்சம் மேலே நீங்கள் போவதை ஸமாதி என்று தவறாக எண்ணிவிடாதீர்கள்.

மனதை உடலிலிருந்து பிரித்து அதை பரமாத்மனுடன் ஒன்றச் செய்யுங்கள். இதுவே ஸமாதியாகும். இது பிறப்பிறப்பிலிருந்து முக்தி நல்கும். ஊக்கம், உற்சாகத்துடன் நீண்ட நாள் பயிற்சியினால் ஸமாதி கிட்டுகிறது.

தியானத்தின் மூலம் ஒருவன் அடையும் மிக உயர்ந்த இலட்சியமே ஸமாதியாகும். அது ஏதோ கொஞ்ச பயிற்சியினால் பெறப்படும் ஒன்றல்ல. ஸமாதியை அடைய ஒருவன் கண்டிப்பான பிரம்மச்சர்யம், உணவுக் கட்டுப்பாடு, மனத் தூய்மை ஆகியவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். இவற்றைப் பெறவில்லையாகில் அந்த நிலையை அடையமுடியாது. இந்த முன் தகுதிகள் நன்கு பெறப்பட வேண்டும். அதன் பின்தான் ஒருவன் ஸமாதிநிலையை அடைய ஒருவன் முயலவேண்டும். ஒருவன் பகவானின் பக்தனாக இருந்தாலொழிய ஸமாதியினுள் புக இயலாது. அப்படி இல்லையெனில் ஸமாதி என்பது வெறும் ஜடநிலை ஆகிவிடும்.

உலகப் பொருள்களின்பால் வாசனைகளும், பற்றுதலும் பூரணமாக அகன்று நீங்கள் அந்த அசையாத நிலையில் இருந்தால்தான் நீங்கள் ஜீவன்முக்தர் ஆகமுடியும். உங்கள் சொந்த ஆத்மனில் நீங்கள் லயிப்பீர்கள். இரண்டற்ற மேலாம் நிலையில் நீங்கள் லயிப்பீர்கள். உங்களிடம் ஞானப் பார்வை ஏற்படும். மேகங்கள் இல்லாத வானத்தில் சூரியன் பிரகாசிப்பதுபோல எந்தவிதத் தடங்களும் இன்றி ஞான ஒளி உங்களிடம் ஒளிரும். உலகப் பொருள்கள் எதுவும் உங்களைக் கவராது, மயக்கம், துன்பத்திலிருந்து நீங்கள் முற்றிலும் விடுபடுவீர்கள். உலகில் எங்கும் எதிலும் ஆத்மன் பரவியிருக்கிறது என்பதை நீங்கள் உண்மையாக உணர்வீர்கள். பிரம்மதேஜஸுடன் நீங்கள் ஒளிர்வீர்கள்.

சமநோக்கையும் சம மனநிலையையும் நீங்கள் பெறுவீர்கள். உலகாயதப் பொருள்களின் விருப்பத்திலிருந்து நீங்கள் விடுபடுவீர்கள். ஏனெனில் பிரம்மானந்தத்தை அனுபவிக்கும் மனம் எப்பொழுதும் குளிர்ச்சியாக இருக்கும். திருப்தியான அமைதி நிறைந்த மனத்திலிருந்து பொங்கியெழும் தேவாமிருதத்தின் இனிமையான ஸ்நானத்தில் நீங்கள் லயிப்பீர்கள்.

48 நிமிடங்களுக்கு (2 கடிகைகள்) சிகித்வஜன் பிரம்மானந்த அனுபவத்தில் லயித்திருந்தான். நிர்விகல்ப சமாதியில் அவன் அசையாத கம்பம் போன்று இருந்தான். அவனது குருவான கும்பமுனியின் வடிவத்தில் வந்த அவனது மனைவி சூடாலை சிங்கம் போல கர்ஜித்த போதிலும் கூட அவனது ஸமாதி நிலை கலையவில்லை. அவள் அவனை மேலும் கீழும் தூக்கிப் போட்ட போதிலும் கூட, அவன் உடல் கீழே விழுந்தபோதும் அவனிடம் எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை.

நீங்கள் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கும்போது நாடித் துடிப்பு 30க்கு வரும். உங்கள் அருகில் இருப்பவரால் உங்களது சுவாசத்தை உணர முடியாது. மூக்கு வழியாக சுவாசம் வெளிவராது. ஹடயோகிகளின் ஜடசமாதியில் இதயத் துடிப்பு முற்றிலுமாக நின்று விடும். சைதன்ய ஸமாதியின் ஆரம்ப நிலையில் இதயமும் நுரையீரலும் மிக மிக மெதுவாகச் செயல்படும்.

உயர்நிலை சாதகர்கள் ஸமாதியில் விரைவில் புக விரும்பினால் எல்லாவித வேலைகளையும் மற்றும் சமய நூல் வாசித்தலையும் நிறுத்திவிட வேண்டும். அவர்கள் மௌனத்தைக் கடைப்பிடித்து கங்கை, யமுனை, நர்மதை போன்ற ஏதாவது ஒரு நதிக்கரையில் தனியே தங்க வேண்டும். வெறும் 1 1/2 சேர் பால் அல்லது பால், பழங்களை மட்டுமே அவர்கள் அருந்தவேண்டும். சரியான

மனநிலையுடன் அவர்கள் ஸமாதியில் மூழ்கிவிட வேண்டும். 2 அல்லது 3 மணி நேரத்திற்கு தூக்கத்தை அவர்கள் குறைத்துவிட வேண்டும். நவம்பர் மாதத்தில் பனிகாலத்தின் தொடக்கத்தில் அவர்கள் சாதனையைத் தொடங்க வேண்டும். தியானத்தில் உண்மையான ஓய்வு இருக்கிறது. இது தூக்கத்தில் கிடைக்கும் ஓய்வைக் காட்டிலும் மிகவும் மேலானது. ஒழுங்காக தியானம் செய்பவனுக்கு அரை மணி அல்லது ஒரு மணி நேர ஆழ்ந்த உறக்கம் போதுமானது.

## 30. ஆனந்தமான தெய்வீக அனுபவ நிலை

தன்னை இழந்து தியானப் பொருளுடன்தான் ஒளிரும் தியானமே ஸமாதி நிலையாகும். எண்ணுபவனும், தியானிக்கப்படும் பொருளும் ஒன்றாய்விடுகின்றன. மனம் த்யேயரூபமாகிவிடுகிறது. தியானம், தியானிப்பவன், தியானிக்கப் படுபொருள் போன்ற தனி எண்ணங்கள் மறைந்துபோகின்றன. ஸமாதி நிலையில் சாதகன் எந்தவிதமான அக அல்லது புறப் பொருளைப் பற்றிய அறிவையும் பெற்று விளங்குவதில்லை. அம்பு செய்பவன் தனது தொழிலில் லயித்திருக்கையில் பக்கத்தில் தன்னைக் கடந்து செல்லும் அரசனைக் கவனியாமல் இருப்பதைப் போல, ஆழ்ந்த தியானத்தில் இருக்கும் யோகி எதையும் அறியாமலிருக்கிறான்.

ஆணவமும் மனமும் கரைகின்ற பொழுது ஸமாதி அல்லது தெய்வீக ஆனந்தம் உதிக்கிறது. இது ஒருவன் தனது சொந்த முயற்சியால் அடையப்பட வேண்டியதாகும். அது எல்லையில்லாதது, பிரிவு இல்லாதது, எல்லையற்றது. இந்த அனுபவம் உணரப்படும் பொழுது மனம், ஆசைகள், செயல்கள் மற்றும் இன்ப துன்ப உணர்ச்சிகள் அனைத்தும் சூனியத்தில் மறைந்துபோகின்றன.

ஸமாதி பல வகைப்படும். ஆனால் அவற்றுள் ஒரு சிலதான் முக்கியமானவையாகும்.

பாவ சமாதியில் பக்தனால் ஸமாதி உணரப்படுகிறது. அந்த நிலையை பக்தன் "பாவம்" மற்றும் "மஹாபாவ"த்தின் மூலம் அடைகிறான். பகவான் ஸ்ரீ கிருஷ்ணரைத் தியானிப்பவன் எங்கும் ஸ்ரீ கிருஷ்ணரை மட்டுமே ஸமாதி நிலையில் காண்கிறான். அவன் தன்னை ஸ்ரீ கிருஷ்ணராகவும், பிருந்தாவன கோபிகைகளாகவும், கௌராங்கர், ஏகநாதராகவும் காண்கிறான். ஸ்ரீ கிருஷ்ணரை தியானிப்பவன் எங்கும் நிறைந்த விராட் சொரூபத்தைக் காணும் அனுபவத்தைப் பெறுகிறான்.

ஸவிகல்ப ஸமாதி, நிர்விகல்ப சமாதி என மேலும் இரு வகை ஸமாதி உண்டு. முதல் வகையில் அறிவோன், அறிவு, அறியப்படுபொருள், மற்றும் காண்போன், காட்சி, காணப்படுபொருள் என்ற திரிபுடி உண்டு. ஸம்ஸ்காரங்கள் அழிக்கப்படவில்லை. பிந்தியதில் ஸம்ஸ்காரங்கள் முற்றிலும் வறுக்கப்பட்டு அழிக்கப்படுகின்றன. நிர்விகல்பத்தில் திரிபுடி கிடையாது.

ஸவிகல்ப ஸமாதிக்கு மற்றொரு பெயர் ஸம்ப்ரக்ஞாத ஸமாதி என்பதாகும். அஸம் பிரக்ஞாத ஸமாதி என்பது நிர்விகல்ப ஸமாதியின் மறுபெயராகும்.

நிர்விகல்ப ஸமாதியில் ஆணவ உணர்வு இருக்காது. ஆணவமும் மனமும் நம்மிடத்தில் உருகி லயமாகின்றன. தூய மனம் நம்ம சொரூபமாக ஆகிவிடுகிறது. இது நிர்பீஜ ஸமாதி எனப்படும். இந்த ஸமாதியில் மனத்திற்கு ஒரு ஆதாரம் கிடையாது. ஸம்ஸ்காரங்கள் ஒட்டு மொத்தமாக வறுக்கப் படுகின்றன. ஸவிகல்ப ஸமாதி நிர்விகல்ப ஸமாதியாக மாறுகிறது. நிர்விகல்ப ஸமாதியில் எந்தவித எண்ணமும் கிடையாது. இது எண்ணமற்ற பூரண உணர்வாகும்.

விகல்பம் இல்லாத நிலையே நிர்விகல்பமாகும். எந்தவித எண்ணத்துடனும் தொடர்பு இல்லாமலிருப்பதே நிர்விகல்பமாகும். கற்பனை கிடையாது. மனம் அறிவு வேலை செய்வது இல்லை. எல்லா சம்ஸ்காரங்களும் வாசனைகளும் ஒட்டுமொத்தமாக வறுக்கப்படுகின்றன. எல்லா நாமரூபங்களும் சாம்பலாகிவிடுகின்றன. அஸ்தி - பாதி - ப்ரியம் மட்டுமே எஞ்சுகிறது. அஸ்தி-பாதி- ப்ரியம் என்பது ஸத் சித் ஆனந்தமாகும். எப்பொழுதும் இருப்பது 'அஸ்தி! ஒளிர்வது'பாதி! இது பூரண உணர்வாகும். இன்பம் தருவது ப்ரியம். இது கலப்பற்ற ஆனந்தம். நிர்விகல்ப ஸமாதியில் மனமானது, பற்றுதல்கள் மற்றும் சிதறல்களிலிருந்து விடுவிக்கப்படுகிறது. காற்று, இல்லாத இடத்தில் உள்ள விளக்கின் சுடர்போல அது அசையாது இருக்கிறது.

ஸமாதி அல்லது உணர்வு கடந்த நிலையில் சாதகன் இறைவனுடன் லயமாகிறான். புலன்கள், மனம், அறிவு, செயல்படாது போகின்றன. நதி கடலுடன் சங்கமமாவது போல, ஜீவாத்மன் பரமாத்மனுடன் லயிக்கிறது. ஸமாதி உயர் ஞானத்தை அளிக்கிறது. ஒருவன் ஜனன மரண சக்கரத்திலிருந்து விடுபட்டு கைவல்யம் அல்லது முக்தியை அடைகிறான்.

உலகில் புலன்கள் மூலம் பெறப்படும் அறிவு மேலான அறிவு ஆகாது. அது உங்களுக்கு நிரந்தர திருப்தியையும், அழியாத அமைதியையும் ஆனந்தத்தையும் அளிக்காது. அது எல்லைக்குட்பட்ட அறிவாகும். அனைத்துவித அறிவை நீங்கள் பெற்றாலும் உங்களுக்குள் ஏதோ ஒருவித சூன்ய உணர்வு இருக்கிறது. உயர் ஞானத்தை, அனைத்தையும் அறியவல்ல பரஞானத்தை அறிய வேண்டும் என்ற உத்வேகம் உங்கள் மனத்தில் இருக்கிறது. "*யஸ்மின் விக்ஞாதே ஸர்வ மிதம் விக்ஞாதம் பவதி*". இந்த தெய்வீக

அறிவு மனம், புலன்களுக்கு அப்பாற்பட்டது. முடிவான உண்மையை மனமும் புலன்களும் அணுக முடியாது. மனமும் புலன்களும் எல்லைக்குட்பட்ட கருவிகளாகும். புத்திக்கும் மனத்திற்கும் அவற்றிற்கான வரன்முறைகள் உண்டு. அவை பூவுலகில் மட்டுமே செயல்படும். ஸமாதியில் பரபோதத்தை நீங்கள் பெறுவது அகப்பார்வையினாலாகும். ஸமாதியின் மூலமே நீங்கள் அறியாததை அறிய முடியும், காணாததைக் காணமுடியும், புக முடியாத இடத்தில் புகமுடியும்.

தாரணை அல்லது மன ஒருமைப்பாடு, தியானம், ஸமாதி அல்லது பேருணர்வு நிலை ஆகியவை ராஜயோகம் அல்லது அஷ்டாங்கயோகத்தின் உள் அங்கங்களாகும். இவை அந்தரங்க சாதனமாகும். அவை மனம் மற்றும் அந்தரங்க சாதனையைப் பூர்த்தி செய்கின்றன. தாரணை, தியானம், ஸமாதி ஆகிய மூன்றும் சம்யமம் எனப்படுகின்றன. அவை ஒருங்கே பயிலப்படுகின்றன. மன ஒருமைப்பாட்டின் மனமுயற்சியில் அவை படித்தரங்களாகும். தியானம் மன ஒருமைப்பாட்டையும், ஸமாதி தியானத்தையும் பின் தொடர்கின்றன.

ஸமாதியில் மனம் அதன் ஒருமைப்பாட்டுப் பொருளுடன் ஐக்கியமாகிவிடுகிறது. தியானம் செய்பவரும் தியானிக்கப் படு பொருளும், எண்ணுபவனும் எண்ணமும், தன்மையும், படர்க்கையும் ஒன்றாகின்றன. மன ஒருமைப்பாட்டில் மனமானது பொருளில் நிலை நிறுத்தப்படுகிறது. தியானத்தில் மனமானது பொருளைப் பற்றிய ஒரே எண்ணத்தினால் நிரப்பப்படுகிறது, மற்ற எல்லா எண்ணங்களும் வெளியேற்றப்படுகின்றன.

ஸமாதியில் மனம் ஒடுக்கப்படுகிறது, சித்தம் அடக்கப் படுகிறது, எண்ணங்கள் கட்டுப்படுத்தப்படுகின்றன, எல்லா கொதிக்கும் எண்ணங்களும் அடக்கப்படுகின்றன. யோகி

மோனவாரிதியில் லயித்து பிரம்மஞானத்தை அடைகின்றான்.

ஸமாதி என்பது பேரானந்த லயம் எனும் பெருநிலை. தண்ணீரில் உப்பு கரைவது போல, சுடரில் கூடம் கரைவது போல மனமானது ஆத்மாவில் கரைகிறது. அது ஒரு தூய உணர்வு நிலை. மனமானது எப்பொழுதும் மாறுபடும் தன்மையது. இந்த விருத்திகள் அல்லது அலைவுகளிலிருந்து மனித மனமானது ஒருமைப்பாடு தியானத்தின் மூலம் விடுவிக்கப்பட்டால், அவன் பிரம்மனாகிறான்.

மன ஸோ வ்ருத்தி சூன்யஸ்ய பிரம்மாகாரதயா ஸ்திதி : பிறப்பிறப்பிலிருந்து விடுதலை அல்லது முக்தி அடைவதற்கான சாதனமாகும். அது உண்மை அல்லது பூரணப் பொருளை நேரடியாக அந்தர் முகமாக உணர்வதற்கு வகை செய்கிறது. வாழ்வின் எல்லாத் தொல்லைகளுக்கும், மறுபிறவிக்கான காரணங்களுக்கும் அது முற்றுப்புள்ளி வைக்கிறது. புதிய பிறவிகளுக்கு வழி வகுக்கும் ஸம்ஸ்காரங்கள் அல்லது பதிவுகளை அது அழிக்கிறது. அவனது எல்லா முந்தைய கர்மங்களும் பூர்த்தியாகாவிடினும் அது பிராரப்தத்தை கடக்க ஒருவனுக்கு உதவுகிறது.

யோக சக்தியில் சிரத்தை அல்லது நம்பிக்கை, மன ஒருமைப்பாடு ஆற்றல், ஸ்மிருதி அல்லது நினைவாற்றல், யோகத்தின் இறுதி நிலையான ஸமாதி, தியானத்தின் மூலம் பெற்ற நேர்முக அனுபவம் ஆகியவை ஸமாதியை அடைவதற்கு உறுதுணையாகின்றன.

## 31. பக்தி யோக ஸமாதி

பக்தி யோகத்தில் இம்மி அளவு ஆணவம் அல்லது தற்புகழ்ச்சிக்கு இடமில்லை. பக்தன் பகவானிடம் பரிபூரண சரணாகதி அடைகின்றான். அவன் தன்னைப் பூரணமாக

பகவானிடம் ஒப்புவித்து அவரது அருளைப் பெறுகின்றான். அருள் என்பது ஒரு மாபெரும் ஆன்மீக ஆற்றலாகும். அது பக்தனின் முழு அமைப்பையும் மாற்றிவிடுகிறது. அது அவனிடம் ஊக்கத்தையும், புதிய தெய்வீக வாழ்க்கையையும் ஊட்டுகிறது. இறையருளைப் பற்றிய உண்மையை சரணாகதி பக்தனுக்கு உணர்த்துகிறது. எல்லா சமயத்திலும் அவன் மீது அருளைப் பொழிய பகவான் தயாராயிருக்கிறார் என்பதை அது அவனுக்கு உணர்த்துகிறது. இறையருளால் தான் பக்தனது முழு அம்சமும் மாற்றி அமைக்கப்பட்டு புதுப்பிக்கப்படுகிறது. இறை அருளால் பக்தனது உடல் முழுவதும் தெய்வீக சக்தி பாய்ந்து தெய்வீக அருளைப் பெறுவதற்கு ஏற்ற கருவியாக மாற்றி அமைக்கப்படுகிறது.

பக்தியில் ஒன்பது படிகள் உண்டு. இதை நவவிதாபக்தி என்பர். சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்மநிவேதனம் என்பவையே அவையாகும். சிரவணம் என்பது இறைவனது லீலைகளைக் கேட்பதாகும். அவனது நாமத்தைப் பாடுவதே கீர்த்தனம். அவனை நினைப்பதுவே ஸ்மரணம். அவனது பாதங்களைப் பூஜிப்பதே பாதஸேவனம். இறைவனுக்கு புஷ்பங்களை ஸமர்ப்பிப்பதுவே அர்ச்சனம். நமஸ்காரம் செய்வதுவே வந்தனம். தொண்டு பாவனையே தாஸ்யம். இறைவனுடன் நட்பு பாராட்டுவதே ஸக்யம். சரணாகதி அல்லது தன்னை அர்ப்பணிப்பதுவே ஆத்மநிவேதனமாகும்.

ஆர்வம், நம்பிக்கை, பக்தி, (இறைவன் நாமத்தைப் பாடுவதில் விருப்பம்) ருசி, நிஷ்டை (உறுதி), ரதி (இறைவனிடம் அதிகமான நாட்டம்), ஸ்தாயி பாவம் (ப்ரேமையில் உறுதி), மஹாபாவம் (ப்ரேம மயம் அல்லது பரமப்ரேமை) ஆகியவை பக்தியோகமாம் ஏணியின் எட்டு படிகளாகும். ஆர்வம், பக்தி, பூஜை, தன்மயமாதல் ஆகியவை பக்தியோகத்தின் நான்கு நிலைகளாகும். ஸாலோக்யம்,

ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் ஆகியவை பக்தர்களின் நால்வகை முக்தியாகும்.

சரணாகதி அருளைக் கீழே ஈர்க்கிறது. சரணாகதி மூலம் ஜீவாத்மன் பரம்பொருளுடன் ஒன்றாகிறான். அருள் சரணாகதியை முழுமையாக்குகிறது. அருளின்றி பூரண ஐக்கியம் முடியாதகாரியம். சரணாகதியும் அருளும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. அருள் ஆன்மீகப் பாதையில் உள்ள தடைகள், குழிகள் மற்றும் இடையூறுகளை இல்லாததாக்குகிறது.

பக்தன் பாவசமாதியையும் மஹாபாவத்தையும் பெறு கிறான். அவன் தெய்வத்தின் இனிமையான அரவணைப் பை அனுபவிக்கிறான். அவன் தெய்வீக ஐசுவர்யத்தை அடைகிறான். கடவுளின் அனைத்து ஆன்மீக செல்வங்களும் அவனைச் சேருகின்றன. திவ்ய சக்ஷு அல்லது தெய்வீகப் பார்வையை அவன் பெறுகிறான். தெய்வீக புலன்கள் மற்றும், ஒளிமிகுந்த உடலை அவன் அடைகிறான். இறைவனுடன் பூரணமாக ஐக்கியமாய்விட அவன் விரும்பவில்லை. இறைவன் முன்னர் அமர்ந்து பக்தித் தேனைப் பருக அவன் விரும்புகிறான். அவனது பக்தியின் மேன்மையால், அவன் விரும்பாவிட்டாலும் இறைவனுடன் ஐக்கியம் தாற்காலிகமாக கிட்டுகிறது. கடவுளுடன் அவன் ஒன்றிவிடுகிறான். ஆரம்பத்தில் அவன் கடவுளைப் போல இருக்கிறான். படிப்படியாக அவன் ஸாயுஜ்யம் அல்லது கடவுளுடன் ஐக்கியமாகிவிடுகிறான்.

ஸ்ரீ கிருஷ்ண பகவானின் திருவுருவத்தை தியானிக்கும் பக்தன், ஸமாதியில் லயிக்கும் பொழுது ஸ்ரீ கிருஷ்ணனை மட்டுமே எங்கும் காண்பான். மற்ற எல்லா வடிவங்களும் மறைந்துபோகும். இது ஒரு வகை ஆன்மீக அனுபவம். அவன் தன்னையே கிருஷ்ணனாகக் காண்பான். பிருந்தாவன கோபியர், கௌராங்கர், ஏகநாதர் போன்றோர்

இந்த அனுபவத்தைப் பெற்றனர். எங்கும் நிறைந்த கிருஷ்ணபிரானைத் தியானிப்போர் பெறும் அனுபவம் வேறு. அர்ஜுனனுக்கு இந்த அனுபவம் ஏற்பட்டது. அவனுக்கு விராட் முழுவதும் உணரும் அனுபவம் எற்பட்டது. அவனுக்கு பிரபஞ்ச உணர்வு உண்டாயிற்று.

## 32. ராஜயோக ஸமாதி

ராஜயோகத்தின் பிரகாரம் ஸம்ப்ரக்ஞாத ஸமாதி, அஸம்ப்ரக்ஞாத ஸமாதி என்று இரண்டு வகை ஸமாதி உண்டு. முந்தையதில் ஸம்ஸ்கார விதைகள் அழிக்கப் படவில்லை. பிந்தையதில் அவை முற்றிலுமாக அழிக்கப்படுகின்றன. அதனால் தான் முந்தையது ஸபீஜ ஸமாதி (விதையுடன் கூடியது) என்றும் பிந்தையது நிர்பீஜ ஸமாதி (விதையற்ற அல்லது சம்ஸ்காங்கள் அற்ற) என்றும் அழைக்கப்படுகின்றன. ஸம்ப்ரக்ஞாத ஸமாதி அஸம்ப்ரக் ஞாத ஸமாதிக்கு இட்டுச் செல்லுகிறது.

ஸம்ப்ரக்ஞாத ஸமாதிக்கு ஸவிகல்ப ஸமாதி அல்லது ஸபீஜ ஸமாதி என்பதும் மற்றொரு பெயர். இந்த ஸமாதி தியானிக்கப்படும் பொருளைப் பற்றிய பூரண அறிவைக் கொணர்கிறது. மனமானது மற்ற எல்லாப் பொருள்களையும் தவிர்த்து எந்தப் பொருளைத் தியானிக்கிறதோ அந்தப் பொருளின் தன்மையதாகி அதனுடன் ஒன்றிவிடுகிறது. இந்த ஸமாதியில் இயற்கையைக் கட்டுப்படுத்தவல்ல அனைத்து சக்திகளையும் பெறுகிறான்.

ஸவிதர்க்க, ஸவிசார, ஸானந்த, அஸ்மித ஸமாதி என ஸம்ப்ரக்ஞாத ஸமாதி நான்கு வகைப்படும். இந்த நான்கு வகை ஸமாதிகளும் ஏதாவதொன்றைப் பற்றிக் கொண்டு நிற்கின்றன. ஆலம்பனம், அல்லது தர்க்கம் அல்லது கேள்வி இதில் உண்டு. அவை மிகுந்த ஆனந்தத்தைக் கொடுத்தாலும் ஸமாதியின் மிக சிறந்த, மிகச் நுண்ணிய வகை ஆகமாட்டா.

அவை இயற்கையின் நுண்ணிய மூலகங்கள் மற்றும் பொறிபுலன்களையும் பற்றியவை ஆகும். பொருள்கள், மூலகங்கள் மற்றும் ஞானேந்திரியங்கள் பற்றிய நேரடி அறிவை அவை உங்களுக்குத் தருகின்றன.

ஏணியில் ஏறும் பொழுது உள்ள படிகளைப் போன்று இந்த நிலைகள் அமைகின்றன. ஆரம்பத்தில் தியானம் ஒரு ஸ்தூலப் பொருள் அல்லது வடிவத்தின் மீதுதான் பண்ணப்பட வேண்டும். இந்த வகை தியானத்தில் நீங்கள் முன்னேறுகையில் நீங்கள் நிர்க்குண தியானத்தை மேற்கொள்ளலாம். மனமானது படிப்படியாக தியானத்தில் பயிற்சி கொடுக்கப்பட்டு அடக்கப்பட வேண்டும். எடுத்த எடுப்பிலேயே அது மிக உயர்ந்த அஸம்ப்ரக்ஞாத ஸமாதியை அடைய முடியாது. அதனால்தான் பதஞ்ஜலி மகிரிஷி பல்வேறு கீழ்நிலை ஸமாதிகளைப் பற்றி விரித்துரைக்கிறார். மனமானது பல்வேறு ஸ்தூலப் பொருள்களுடன் மிகவும் நெருக்கமாக தொடர்பு கொண்டிருக்கையில் அதை உடனேயே சூக்ஷ்மப் பொருள் மீது நிலைக்கச் செய்வது இயலாத காரியம். யோக ஏணியில் படிப்படியாக ஏறுவது அவசியம். ஏணியின் ஒவ்வொரு படியிலும் நீங்கள் மிகவும் கவனமாக காலை வைத்தல் வேண்டும். அஸம்பிரக்ஞாத அல்லது நிர்விகல்ப ஸமாதியை அடையும் முன் நீங்கள் பல்வேறு படித்தரங்களை கடந்து சென்றாக வேண்டும். ஆனால் தங்களது முந்தைய பிறவிகளில் பல்வேறு கீழ்நிலைகளைக் கடந்து சென்றுள்ள யோகப்ரஷ்டர்கள் இறையருளின் துணையுடன் எடுத்தவுடனேயே உயர்ந்த நிலையை அடையமுடியும். யோக சாதகன் மேல் நிலையை அடைந்துவிட்டால் கீழ்நிலை களுக்குத் திரும்பவேண்டியதில்லை.

ஸம்ப்ரக்ஞாத ஸமாதியின் எல்லா வகைகளும் ஸாலம்பன யோகம் (துணையுடன் கூடியதாக), ஸபீஜ யோகம்

(ஸம்ஸ்கார விதையுடன் கூடியதாக) ஆகும். யோகிகள் ஒரு வகை சுதந்திரத்தை அனுபவிக்கிறார்கள். ராஜயோகத்தில் தர்மமேகம் என்பது"தர்மமாகிய மேகம்" என்பதைக் குறிக்கிறது. மேகங்கள் மழையைப் பொழிவதைப் போல இந்த தர்மமேக ஸமாதி யோகிகளுக்கு சர்வக்ஞத்வத்தையும் எல்லா வகை ஸித்துக்களையும் ஆற்றல்களையும் அளிக்கிறது. எனவே இந்த ஸமாதி தர்மத்தைப் பொழியும் ஸமாதி எனப்படுகிறது. யோகி பரந்து விரிந்த கடவுட்காட்சியைப் பெறுகிறான்.

ரிதம்பர, ப்ரக்ஞாலோக, பிரஸன்னவாஹித ஆகியவை ஸம்ப்ரக்ஞாத ஸமாதியின் மூன்று நிலைகளாகும். ரிதம்பரத்தில் மனோவிருத்தியின் தத்துவம் ஸச்சிதானந்தம். அறிவோன் இன்னும் தனித்தே இருக்கிறான். நீங்கள் யதார்த்த ஞானம் அல்லது உண்மையான ஞானத்தை பெறுகிறீர்கள். இரண்டாவதில் எல்லா வகை ஆவரணமும் (திரை) நீக்கப்படுகிறது. மூன்றாவது நிலை அனைத்துவித விருத்திகளும் அகன்ற மனோநிலையாகும். சான்றிதழ் மற்றும் அனுமானத்திலிருந்து நீங்கள் பெறுவது உலகப் பொருள்களைப் பற்றிய அறிவாகும். ஆனால் ஸமாதியிலிருந்து நீங்கள் பெறுவது தெய்வீக அறிவாகும். அது பகுத்தறிவு, அனுமானம் அனைத்திற்கும் அப்பாற்பட்ட புலன் கடந்த அந்தர்முக அறிவாகும்.

## ஸவிதர்க்க, நிர்விதர்க்க ஸமாதி

காரணத்துடன் கூடிய ஸமாதி ஸவிதர்க்க ஸமாதி எனப்படுகிறது. மனமானது ஏதாவது ஒரு பொருளைப் பற்றி நிற்க முனைகிறது. இந்த ஸமாதியில் சப்தம் (ஒலி) அர்த்தம் (பொருள்) மற்றும் ஞானம் (அறிவு) ஆகியவை இணைந்துள்ளன.

நான்கு கரங்களுடன் கூடிய மகாவிஷ்ணுவின் சொரூபத்திலோ அல்லது புல்லாங்குழலுடன் கூடிய ஸ்ரீகிருஷ்ணரின் வடிவத்திலோ அல்லது வேறு எந்தப் பொருளின் மீதோ சாதகன் தியானிக்கலாம். தியானிக்கப்படும்பொருளின் அனைத்து நல்ல அம்சங்கள் மற்றும் குறைகள், குற்றங்கள் அனைத்தினுடைய நேரடிக் காட்சி அவனுக்குக் கிட்டும். பொருளின் முழு அறிவும் அவனுக்குக் கிட்டும். கேட்டிராத, சிந்தித்திராத அந்தப் பொருளின் எல்லா அம்சங்களும் அவனுக்குத் தெரியவரும். இதையெல்லாம் அவன் ஸவிதர்க்கஸமாதியின் மூலம் அடைவான். தியானிக்கப்படும் பொருளை மற்றப் பொருள்களிலிருந்து தனியே பிரிப்பதன் மூலம் சாதகன் அதிலேயே மீண்டும் மீண்டும் தியானிக்கிறான்.

ஸ்தூலப் பொருள்களின் மீது நீங்கள் தியானிக்கலாம். தீவிர தியானத்தின் மூலம் அவற்றின் மீது நீங்கள் ஆதிக்கம் செலுத்தலாம். மூலகங்கள் அவற்றின் உண்மையை உங்களுக்கு வெளிப்படுத்தும்.

புதிதாக அம்பு எய்யும் ஒருவன் எப்படி முதலில் பெரிய பொருள்களைக் குறிவைத்து, பிறகு படிப்படியாக சிறிய பொருள்களைக் குறி வைக்கிறானோ, அதுபோல யோகத்தில் ஆரம்பநிலையில் உள்ள சாதகன் பஞ்சமகாபூதங்கள், நான்கு கரங்களுடன் கூடிய ஹரி ஆகியவற்றில் மனத்தை ஒருமைப்படுத்துகிறான். பிறகு சூக்ஷ்மமான பொருள்களில் அவன் தியானிக்கிறான். இந்த விதமாக மனமானது சூக்ஷ்மமான பொருள்களில் ஒருமைப்பாடு கொள்கிறது. பகவானிடமிருந்து வெகு தொலைவில் இருந்தாலும் வைகுண்டத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு எவ்விதம் இருக்கிறாரோ அதேவிதத்தில் தனது தியானத்தின் வலிமையால் அவரை யோகி நேரடியாகக் காண்கிறான்.

ஸவிதர்க்க ஸமாதியில் கால தேசத்துடன் தொடர்பு வைத்து ஸ்தூலப் பொருள்கள் மற்றும் அவற்றின் தன்மைகளின் மேல் மன ஒருமைப்பாடு பயிலப்படுகிறது. இது ஸமாதியின் ஸ்தூல தன்மை. யோகி கால, தேசத்தைத் தவிர்த்து பொருள்களைத் தியானிக்கும் போது அது நிர்விதர்க்க ஸமாதி எனப்படுகிறது. இங்கே கேள்வியோ, வாதமோ, தர்க்கமோ கிடையாது.

ஸவிதர்க்கத்தில் சப்தம் (வார்த்தை), அர்த்தம் (பொருள்) மற்றும் ஞேயம் (எண்ணம்) என்ற விகல்பம் உண்டு. நிர்விகல்ப ஸமாதியில் இத்தகைய விகல்பம் கிடையாது. ஒரு வார்த்தையைப் புரிந்து கொள்வதில் மூன்று அம்சங்கள் உண்டு. உதாரணம் பசு என்று சொல்கையில் 1) பசு - வார்த்தை 2) பசு - பொருள் 3) பசு - மனத்தில் பசுவைப் பற்றிய எண்ணம் என்ற இந்த மூன்றும் உண்டு. தியானிப்பவர் இந்த மூன்றையும் ஒன்றாகக் கருதும்போது அது வார்த்தை, பொருள், எண்ணம் பற்றிய விகல்பமாகும்.

## ஸவிசார, நிர்விசார ஸமாதி

சூக்ஷ்மமான தன்மாத்திரைகள் மற்றும் அவற்றின் தன்மையை இடம், காலத்துடன் சம்பந்தப்படுத்தி நீங்கள் விவேகத்துடன் தியானிக்கையில் அது ஸவிசார ஸமாதி எனப்படுகிறது. இது சூக்ஷ்மம். இது ஸவிதர்க்க மற்றும் நிர்விதர்க்க ஸமாதியைக் காட்டிலும் சூக்ஷ்மமானது. தன்மாத்திரைகள் என்பவை சூக்ஷ்ம பூதங்கள் அல்லது அடிப்படை மூலங்கள். பஞ்ச மஹா பூதங்கள் என்பதை தன் மாத்திரைகளிலிருந்து சேர்த்தல் அல்லது பெருக்குவதன் மூலம் பெறப்படுகின்றன. முந்தையதைக் காட்டிலும் இதில் தியானம் ஒருபடி மேலே போகிறது. யோகி தன்மாத்திரைகளைப் பற்றிய அறிவை இதில் பெறுகிறான். அவன் தன் மாத்திரைகளை அடக்கவல்லவனாகிறான்.

பொருளின் பல்வேறு சூக்ஷ்ம ரூபங்களை - அதனது மூலப் பிரகிருதி உட்பட - நேரடியாகப் பார்க்க வல்லவனாகிறான்.

'சூக்ஷ்மம்' என்ற வார்த்தை பொதுவாக காரணத்தைக் குறிக்கிறது. ஆணவம் அல்லது அஹங்காரம், புத்தி அல்லது மஹத் தத்வம், பிரகிருதி போன்ற அனைத்து காரண மூலகங்களையும் அது குறிக்கிறது.

தியானத்தில் புரிதற்கு அரிய ஒரு (அசிந்த்ய சக்தி) மாபெரும் சக்தி உள்ளது. நாம் கேட்டும் சிந்தித்தும் அறிந்த சாதாரண தியானத்தைத் தவிர, இதுவரை நாம் கேட்டிராத, நாம் சிந்தித்திராத பலவற்றை தியான சக்தியால் நாம் அறியலாம்.

காரணத்திற்கும், அதன் விளைவுகளுக்கும் இடையில் எந்த வேறுபாடும் கிடையாது. எல்லா ஸ்தூலப் பொருள்களும் 26 தத்துவங்களிலிருந்து உண்டானவை. 26 தத்துவங்களின் தன்மையே அவற்றிலும் உள்ளன.

சூக்ஷ்மமான தன்மாத்திரைகளை இடம், காலத்திலிருந்து வேறுபடுத்தி அவற்றின் மீது நீங்கள் தியானித்தால் அது தர்க்கம் இன்றிய நிர்விதர்க்க ஸமாதி எனப்படுகிறது. ரஜஸ், தமஸ் நீங்கியதால் மனத்தில் வெறும் ஸத்வம் மட்டுமே எஞ்சி நிற்கின்ற காரணத்தால் யோகி திருப்தி அல்லது உள் அமைதி (அத்யாத்மிக ப்ரஸாதம்) யையும், ஒருவித பிரகாசத்தையும் அடைகிறான். மனம் மிகவும் நிலைபெறுகிறது.

## ஸானந்த ஸமாதி அல்லது ஆனந்தமான ஸமாதி

இப்பொழுது நாம் ஆனந்த ஸமாதியைப் பற்றி விளக்க முனைகிறோம். இது மகிழ்ச்சி தரும் ஸமாதியாகும். இந்த ஸமாதியில் ஸ்தூல மற்றும் ஐம்பூதங்கள் விடப்படுகின்றன. யோகி ஸாத்விக மனத்தின் மீதே தியானிக்கிறான். ரஜஸ்,

தமஸ் நீங்கிய மனதைப் பற்றி அவன் நினைக்கிறான். இந்த ஸமாதியின் மூலம் யோகியிடம் ஒருவித பிரத்யேக ஆனந்தம் தோன்றுகிறது.

## அஸ்மித ஸமாதி

இந்த ஸமாதியில் தியானப் பொருள் மனம்தான். அது எல்லா அனுபவங்களின் அறிவையும் தருகிறது. ஆன்மா ஆன்மாவை அறிகிறது. ஆணவத்தின் ஸாத்விக நிலைமை மட்டுமே எஞ்சுகிறது. யோகி அவனது ஸ்தூல சரீரம் நீங்கி அவனைப் பற்றி நினைக்க முடியும். தனக்கு ஒரு சூக்ஷ்ம சரீரம் இருக்கிறது என்பதை அவன் உணர்கிறான். இந்த ஸமாதி, அனுபவங்களின் மூல ஸ்தானத்திற்கே யோகியை அழைத்துச் சென்று முக்திக்கான வழியைக் காட்டுகிறது.

"சரீரம் தவிர நான் இருக்கிறேன் (அஸ்மி)" என்று யோகி உணர்கிறான். ஸ்தூல, சூக்ஷ்ம மற்றும் ஆனந்த ஸமாதி ஆகியவை உயர்ந்த ஸமாதி நிலை ஆகமாட்டா என்பதை அவன் அனுபவிக்கிறான். அவற்றில் அவன் குறைகளைக் கண்டு வெறுப்பு அடைகிறான். மேலும் அவன் தொடர்ந்து அஸ்மித ஸமாதியைப் பயிலுகிறான். அவன் ஆத்மபோதத்தை (அஸ்மித) அனுபவிக்கிறான். 'போதும்' என்ற உணர்வை அவன் பெற்று வைராக்கியத்தின் உச்ச கட்டத்தை அடைகிறான். (பரா வைராக்கியம்) இது இறுதியில் அஸம்ப்ரக்ஞாத ஸமாதிக்கு அவனை இட்டுச் செல்லுகிறது.

## அஸம்ப்ரக்ஞாத ஸமாதி, அல்லது நிர்பீஜ ஸமாதி அல்லது நிர்விகல்ப ஸமாதி

இது ஸமாதியில் மிக உயர்ந்த வகை. இது பிரகிருதி, புருஷன் இரண்டிற்குமிடையேயான இறுதியான விவேகத் திற்குப் பிறகு விவே க்யாதியால் வருகிறது. ஞானாக்னியால்

ஸம்ஸ்காரங்களாகிய விதைகள் முற்றும் எரிக்கப்படுகின்றன. இந்த ஸமாதி கைவல்யம் அல்லது பூரண சுதந்திரத்தை அளிக்கிறது. இதுவே யோகத்தின் இறுதிநிலை. மேலான, அழியாத அமைதியையும் ஞானத்தையும் இது நல்குகிறது. யோகி ஆன்மாவின் அதீத பெருமைகளை அனுபவிக்கிறான். மானசீக வாழ்க்கையிலிருந்து பூரண சுதந்திரம் பெற்று விளங்குகிறான். காலத்தைப் பற்றிய உணர்வு பூரணத்தைப் பற்றிய உணர்வாகிறது.

இந்த ஸமாதியில் திரிபுடியோ ஆலம்பனமோ கிடையாது. ஸம்ஸ்காரங்கள் முற்றிலும் வறுக்கப்படுகின்றன. இந்த ஸமாதி மட்டுமே பிறப்பிறப்பை ஒழித்து மேலாம் ஞானத்தையும் ஆனந்தத்தையும் நல்க முடியும்.

அஸம்ப்ரக்ஞாத ஸமாதியினுள் புகுந்து ராஜயோகத்தில் ஸித்தியை அதாவது வெற்றியை நீங்கள் பெறும்போது பிறப்பிறப்பைக் கொடுக்கும் எல்லா ஸம்ஸ்காரங்களும் வாசனைகளும் ஒட்டு மொத்தமாக வறுக்கப்படுகின்றன. மன தடாகத்திலிருந்து எழும் எல்லா விருத்திகளும், அதாவது மன அலைவுகளும், கட்டுப்பாட்டிற்குள் வருகின்றன. அவித்யா (அறியாமை), அஸ்மித (ஆணவம்), ராகத்வேஷ (விருப்பு வெறுப்பு), அபிநிவேசம் (வாழ்க்கையில் பற்று) ஆகிய ஐந்து தொல்லைகளும் இல்லாதாக்கப்பட்டு, கர்ம பந்தங்கள் அழிக்கப்படுகின்றன. இந்த ஸமாதி நிச்ரேயஸ் மற்றும் அப்யுதயம் அதாவது மேலாம் நன்மையையும், மேன்மையையும் நல்குகின்றன. அது பிறப்பிறப்பிலிருந்து விடுவித்து மோட்சத்தை அளிக்கிறது. ஆத்மஞானம் கைவரப் பெறுகையில் அறியாமை அகலுகிறது. அறியாமையாகிய அடிப்படைக் காரணம் அகல்கின்றதால் ஆணவமும் மறைந்து போகிறது.

அஸம்ப்ரக்ஞாத ஸமாதியில் மனத்தின் எல்லா மாறுபாடுகளும் கட்டுப்படுத்தப்படுகின்றன. எல்லா எஞ்சிய

ஸம்ஸ்காரங்களும் மொத்தமாக வறுக்கப்படுகின்றன. ராஜயோகத்தில் இதுவே மிக உன்னதமான ஸமாதி. இது நிர்பீஜஸமாதி (விதையற்ற) அல்லது நிர்விகல்ப ஸமாதி என்று இது அழைக்கப்படுகிறது.

இந்த ஸமாதியில் யோகி கண்களின்றிப் பார்க்கிறான், நாவின்றி ருசிக்கிறான், செவிகளின்றி கேட்கிறான், மூக்கின்றி முகர்கிறான், தோலின்றி தொடுகிறான். அவனது ஸங்கல்பம் அற்புதங்களை நிகழ்த்தும். அவர் நினைத்தாலே போதும், எல்லாம் நிகிழ்கிறது. இது தைத்திரீய ஆரண்யகத்தில் (I-11-5) விளக்கப்படுகிறது.

"குருடன் முத்தில் துளையிட்டான்; விரல் அற்றவன் அதில் நூலைவிட்டான்; கழுத்தில்லாதவன் அதை அணிந்தான்; தொடாதவன் அதைப் புகழ்ந்தான்".

காலக்கிரமத்தில் புருஷன் தனது நிஜசொரூபத்தை உணர்கிறான், கைவல்யத்தை அடைகிறான். பிரகிருதி மற்றும் அதன் விளைவுகளிலிருந்து அவன் தன்னை முழுவதுமாக விடுவித்துக் கொள்கிறான். அவன் தனது பூரண சுதந்திரத்தை உணர்ந்து ராஜயோகத்தின் மிகமேலான நிலையான கைவல்யத்தை அடைகிறான். எல்லாக் க்லேச கர்மங்களும் இப்பொழுது அழிக்கப்படுகின்றன. குணங்கள் தங்களது போகம் மற்றும் அபவர்கத்தைப் பூர்த்தி செய்துவிட்டு இப்பொழுது முற்றிலும் செயல்படாது போகின்றன. அவனுக்கு இப்பொழுது ஒருமித்த ஞானம் வந்துவிடுகிறது. இறந்த காலமும் எதிர்காலமும் நிகழ்காலத்தில் ஒன்றி விடுகின்றன. எல்லாமே 'இப்பொழுது' தான். எல்லாமே 'இங்கே' தான். அவன் இடம், மற்றும் காலத்தைக் கடந்தவனாகிறான். கைவல்யத்தை அடைந்த யோகியின் பூரண ஞானத்தின் முன் மூவுலகத்தின் எல்லா அறிவும், எல்லா உலக அறிவும் வெறும் தூசுக்குச் சமானம், இத்தகைய மேலான யோகிகளுக்கு வெற்றி, வெற்றி!

# 33. ஸமாதியிலிருந்து யோகி எப்படி கீழே வருகிறான்?

### சிகித்வஜன் மற்றும் பிரஹ்லாதனின் உதாரணங்கள்

சிகித்வஜன் நிர்விகல்ப ஸமாதியில் புகுந்தான். நிர்விகல்ப ஸமாதியில் அவன் தூணைப் போன்று அசையாமல் இருந்தான். அவனது மனைவியான சூடாலை சிங்கம் போல் கர்ஜித்தாள். இது அவனது ஸமாதி நிலையைக் கலைக்கவில்லை. பிறகு அவள் அவனை மேலும் கீழும் போட்டாள். அவனது உடல் கீழே விழுந்தாலும் அவனுக்கு உடல் உணர்வு வரவில்லை. பிறகு அவள் மனதை ஒருமைப்படுத்தி அவளது யோக திருஷ்டியில் ஒன்றைக் கண்டாள். அவனது இதயத்தில் ஸத்வத்தின் சிறிதளவு மிச்சம் இருக்கிறது என்பதைக் கண்டுகொண்டாள். அது அவனது சரீரத்தில் இன்னும் அறிவு இயங்கிக் கொண்டிருக்கிறது என்பதை அவளுக்கு உணர்த்தியது.

ஒரு விதையில் பூக்களும் பழங்களும் அடங்கிக் கிடப்பதைப் போல அறிவுக்குக் காரணமான ஸத்வத்தின் எச்சம் ஸமாதியில் இருப்பவனின் இதயத்தில் எப்போதும் இருக்கிறது. பிறகு அவள் அவனது சூக்ஷ்ம சரீரத்தினுள் புகுந்தாள். தத்துவத்தின் எச்சம் இருந்த பகுதியில் அலைவு ஏற்படுத்தினாள். பிறகு தனது சொந்த சரீரத்திற்குத் திரும்பி வந்து ஸாமவேதத்தை ஓதினாள். அதன் பின் சிகித்வஜன் தனது புற உணர்வினைப் பெற்றான். சத்துவத்தின் எஞ்சிய பகுதியால்தான் ஜீவன்முக்தர்கள் புற உலகப் பொருள்களைப் பார்க்கும் திறத்தைப் பெறுகிறார்கள்.

பிரஹ்லாதன் 5000 ஆண்டுகள் நிர்விகல்ப ஸமாதியில் தன்னை அமர்த்திக் கொண்டான். தனது வருகையைப் பிரஹ்லாதனுக்குத் தெரிவிப்பதற்காக தமது பாஞ்சஜன்

யத்தை பகவான் ஹரி அவனது செவிகளில் ஒலிக்கச் செய்தார். மெதுவாக பிரஹ்லாதனுக்கு இவ்வுலக உணர்வு வந்தது. அவன் தன் கண்களை மெதுவாகத் திறந்தான். அவனது நாடிகள் வழியாக பிராண அபானன் உடல் முழுவதும் வியாபிக்க ஆரம்பித்தன. கண்ணிமைக்கும் நேரத்தில் மனம் செயல்படத் தொடங்கிற்று. அவனது கண்கள், மனம், ப்ராணன் மற்றும் உடல் அனைத்தும் அதனதன் செயல்பாட்டுடன் உயிருடன் ஒளிபெற்றன.

ஜீவன் முக்தர்களிடம் தூய வாசனைகள் எரிந்த விதைகளைப் போல உள்ளன. அவை மறுபிறப்பை உண்டு பண்ணமாட்டா. இந்த தூய வாஸனைகள் ஸத்வ குணம் மற்றும் ஆத்ம தியானத்துடன் தொடர்பு உடையவை. ஜீவன் முக்தர்களிடம் அவை ஆழ்ந்த உறக்கத்தில் (சுஷுப்தியில்) வாசனைகள் போல உள்ளன. ஆயிரம் வருடங்களானாலும், உடல் இருக்கும் வரை ஜீவன் முக்தர்களின் இதயத்தில் தூய வாஸனைகள் அடங்கியிருக்கும், அவை படிப்படியாகக் கரையும். இந்த தூயவாசனைகள் மூலம் தான் புற உலகைக் காணும் திறனை ஜீவன்முக்தர்கள் பெறுகிறார்கள்.

மனிதா! ஸம்ஸாரமெனும் காட்டுத் தீ மற்றும் முத்தீயால் நீ சூழப்பட்டிருக்கிறாய். அடர்ந்த மோஹக் காட்டில் நீ நடந்து கொண்டிருக்கிறாய். மனமெனும் புலி உன்னை விழுங்க அச்சுறுத்துகிறது. காமம், மோகம், லோபம், குரோதம் போன்ற ஆறு திருடர்களால் நீ கவரப்பட்டிருக்கிறாய். ஆசை எனும் பாம்பு உன்னைத் தீண்டியுள்ளது. உடனே தப்பிக்கும் வழியைக் கண்டுபிடி. ஒரு ஆன்மீக குருவை அணுகு. அவருக்கு சிரத்தை பக்தியுடன் தொண்டு செய். அவரிடமிருந்து ஆன்மீக போதனைகளைப் பெறு. அவற்றை அப்படியே சிறிதும் பிறழாது கடைப்பிடி. நிர்விகல்ப ஸமாதியில் லயித்து மனம் மற்றும் பொருளின் பிடியிலிருந்து விடுபடு.

## 34. ஞானயோக ஸமாதி

ஞானயோக ஸமாதியும் ஸவிகல்ப நிர்விகல்ப என்று இரண்டு வகைப்படும். ஸவிகல்ப ஸமாதியும் ஒரு பொருளுடன் தொடர்பு உள்ள போது த்ருச்யானுவித் என்றும் ஒரு ஒலியுடன் தொடர்பு உள்ளபோது சப்தானுவித் என்றும் இருவகைப்படும்.

மனதின் மாறுபாடுகளான ஆசைகள் போன்றவற்றை கட்புலனாகும் பொருள்களின் சாட்சியான உணர்வாக தியானியுங்கள். இது உள்-த்ருச்யானுவித் ஸவிகல்ப ஸமாதி.

"நான் அஸங்க (பற்றற்ற) ஸச்சிதானந்த, சுயம்பிரகாசமான, அத்வைத சொரூபன்" என்பதில் தியானித்து உணருகையில் அது அந்த சப்தானுவித் ஸவிகல்ப ஸமாதி.

காற்றில்லாத இடத்தில் ஆடாது அசையாது எரியும் சுடர் போன்ற நிலையான மனத்துடன் தனது ஆத்ம சொரூபத்தில் முழுக்கவும் லயித்ததால் பொருள்கள் ஒலிகள் எதுவும் தெரியாத் நிலையில் ஒருவன் லயித்திருந்தால் அது அந்தர்-நிர்விகல்ப ஸமாதி எனப்படுகிறது.

நீங்கள் இதயத்தினுள் தியானம் செய்கையில் - நாமரூபங்களைத் தவிர்த்து புறப்பொருள்களில் பிரம்மனை மட்டுமே பார்க்கையில் அது பஹிர் - த்ருச்யானுவித் - ஸவிகல்ப ஸமாதி எனப்படுகிறது.

எல்லையற்ற ஸச்சிதானந்த வஸ்துவே பிரம்மன் என்பதில் தொடர்ந்து தியானம் செய்வதானது மத்திம வகையான ஸமாதி அல்லது பஹிர் சப்தானுவித் ஸவிகல்ப ஸமாதி எனப்படுகிறது.

மேலே சொன்ன இரண்டு வகை ஸமாதிகளைப் பயில்வதால் அலையற்ற கடல்போல் உள்ள ஆனந்தத்தை அனுபவிப்பதால் உண்டாகும். மனதின் நிலையான தன்மை

பஹிர் நிர்விகல்ப ஸமாதி என்ற மூன்றாம் வகை ஸமாதியாகும். ஒருவன் யாண்டும் இந்த அறுவகை ஸமாதியிலேயே தனது நேரத்தைச் செலவிடவேண்டும். இந்த ஸமாதிகளால் உடல் உணர்வு மறைகிறது. மேலாம் ஆன்மா உணரப்படுகிறது. எங்கிருந்தாலும் எந்தப் பொருளை நோக்கினாலும் மனம் யாண்டும் ஸமாதியிலேயே லயித்திருக்கிறது.

ஸமாதியானது 'அஹம் பிரம்மாஸ்மி - நான் பிரம்மனாக இருக்கிறேன்" என்ற ஒலியுடன் தொடர்புபடுத்தப்படுகையில் சப்தானுவித் என்னும் அஹம் பிரம்மாஸ்மி' என்ற ஒலியுடன் தொடர்பு இல்லாதிருக்கையில் சப்தானுவித் என்றும் சொல்லப்படுகிறது.

நிர்விகல்ப சமாதியில் மனமானது அறிவோன், அறிவு, அறியப்படுபொருள் என்ற திரிபுடி எதுவும் இல்லாத அத்விதீய பிரம்மனில் நிலை நிறுத்தப்படுகிறது. ஸவிகல்ப ஸமாதி என்பது இலட்சியத்தை அடைவதற்கான வழியே (சாதனம்). நிர்விகல்ப ஸமாதி அதன் பலன்.

ஸவிகல்ப ஸமாதியில் பொருளுக்கும் நபருக்கும் இடையில் தெளிவான வேறுபாடு இருந்தாலும் அந்த வேற்றுமை அத்விதீய பிரம்மத்தை அறிவதற்கு உதவிகரமாக இருக்கிறது. உதாரணமாக மண்ணால் செய்யப்பட்ட ஒரு மட்பாண்டத்தில் தெரியும் மண் வெறும் தோற்றமே. அது போல இரண்டாகத் தெரிந்தாலும் இரண்டற்ற பிரம்மனை உணர வேண்டும்.

நிர்விகல்ப ஸமாதியும் இரண்டு வகைப்படும். முதலாவது அத்வைத பாவனா ரூபஸமாதி. இது விருத்தி ஸஹிதம் (பிரம்மாகார விருத்தி இதில் உண்டு). இரண்டாவது அத்வைத அவஸ்தாரூப ஸமாதி. இது விருத்திரஹிதம் (இங்கே பிரம்மாகார விருத்தி இல்லாது போகிறது). அத்வைத பாவனாரூப ஸமாதி என்பது முடிவுக்கான

மார்க்கமே. அத்வைத அவஸ்தாரூப ஸமாதி என்பது இதன் பலனாகும்.

விசார சாகரத்தில் நீங்கள் காண்பீர்கள். இந்தவிதமாக இரண்டு வகையான தியானத்திற்கிடையேயுள்ள வேறுபாடு எடுத்துக் காட்டப்படுகிறது. பொருளையும் நபரையும் உணரும் தியானத்தில் பிரம்மனோடு த்வைத பாவனை உணரப்படுகிறது. பொருள், நபர் வேறுபாடு அற்ற தியானத்தில் அறிவோன், அறிவு, அறியப்படுபொருள் என்ற வேறுபாடு இல்லாது போகிறது. அதுபோல ஆழ்ந்த உறக்க நிலை மற்றும் இந்த இரண்டாவது வகை தியானத்தில் உள்ள வேறுபாடு இதுவே. முந்தையதில் பிரம்மன் வடிவில் மனதின் செயல்பாட்டில் மாறுபாடு இல்லை; இரண்டாவதில் அது தென்படுவது கிடையாது. இவ்வாறு ஆழ்ந்த உறக்கத்தில் உள் உறுப்பு இருப்பதே முற்றிலும் தெரியாமல் போகிறது. ஆனால் உணர்வற்ற தியானத்தில், உள் உறுப்பும் அதன் செயல்பாடும் பிரம்மன்வடிவில் மாற்றப்பட்டாலும் அந்தக் காட்சி இல்லாது போகிறது. இந்த மாற்றம் உணர்வுள்ள தியானப் பயிற்சியிலிருந்தே பெறப்படுகிறது. எனவே இது எட்டு வகைகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. அதன் விளைவுதான் நபர், பொருளை உணராத தியானம்.

உணர்வற்ற தியானம் இருவகைப்படும். 1) இரண்டற்ற மனக் காட்சி 2. இரண்டற்ற நிலையில் பிரம்மனில் லயித்தல்.

1. பிரம்மனின் வடிவை எடுத்த பின் உள்ளுறுப்பின் இரண்டற்ற மாறுபட்ட தோற்றம் தெரியாத செயல்பாட்டுடன் எழும்போது அது உணர்வற்ற தியானத்தின் இரண்டற்ற மனக் காட்சியின் ஒரு வடிவமாக கருதப்படுகிறது. இதற்கு மிகுந்த பயிற்சி வேண்டும். ஏனெனில் பிரம்மனின் செயல்பாட்டுத் தோற்றமும் மறைகிறது.

2. செயல்பாடு முற்றிலும் மறைந்துபோகையில் அது உணர்வற்ற தியானத்தின் இரண்டற்ற நிலையாக கருதப்படுகிறது. பழுக்கக் காய்ச்சிய இரும்பில் நீர்த் துளிகள் பட்டால் அவை எவ்விதம் உடனே இரும்பினால் உறிஞ்சப்படுகிறதோ அதுபோல உணர்வற்ற தியானத்தின் இரண்டற்ற கட்புலனாகும் தோற்றத்தைப் பயிலுகையில் அது பிரம்மனில் லயமாகிறது. இது முதலாவது வகையைத் தொடர்ந்து வருவதேயாகும்.

இரண்டற்ற பாவனைக்கும் ஆழ்ந்த உறக்கத்திற்கும் இடையில் உள்ள வேறுபாடு பிந்தையதில் மனவிருத்திகள் அறியாமையில் லயமாகின்றன. ஆனால் முந்தையில் அதே செயல்கள் பிரம்மத்தில் லயமாகின்றன. முந்தையதில் உள்ள பிரம்மானந்தத்தை எதுவும் மறைக்கவில்லை.

இந்த அனுபவத்தில் இருளோ சூன்யமோ கிடையாது. அது ஒரே ஒளிமயம். ஒலியோ உருவமோ ஸ்பரிசமோ கிடையாது. அது ஒருமைப்பாட்டின் உயரிய அனுபவமாகும். காலமோ காரண காரியமோ இங்கே கிடையாது. நீங்கள் சர்வக்ஞராகவும் சர்வ வல்லமை வாய்ந்தவராகவும் ஆகின்றீர்கள். ஸர்வவித் அதாவது அனைத்தையும் அறிந்த வராக நீங்கள் ஆகின்றீர்கள். உங்களுக்கு அனைத்தும் தெரியும். படைப்பின் சகல ரகசியங்களையும் நீங்கள் அறிவீர்கள். அமரத்வம், மேலாம் ஞானம், அழியாத ஆனந்தம் ஆகியவற்றை நீங்கள் பெறுகிறீர்கள்.

எல்லா வேற்றுமைகளும் இங்கே மறைந்துபோகின்றன. நபரோ பொருளோ கிடையாது. ஸாகார், நிராகாரம் எதுவும் இல்லை. தியானமும், ஸமாதியும் கிடையாது. த்வைதம், அத்வைதம் எதுவும் இல்லை. விக்ஷேபம் அல்லது ஒருமுனைப்பாடு கிடையாது. தியானிப்பவன், தியானிக் கப்படு பொருள் கிடையாது, இரவோ பகலோ கிடையாது.

மிக மேலான நிர்விகல்ப ஸமாதியில் நீங்கள் லயித்திருக்கும் போது உங்களுக்குப் பார்ப்பதற்கோ, கேட்பதற்கோ, முகர்வதற்கோ, உணர்வதற்கோ எதுவு மில்லை. உங்களுக்கு உடல் உணர்வே கிடையாது. பூரண பிரம்ம உணர்வே உங்களிடம் உள்ளது. ஆன்மாவைத் தவிர வேறு எதுவும் கிடையாது. அது ஒரு மகத்தான அனுபவம். பக்திமயமான அச்சத்துடன் கூடிய ஆச்சர்யம் உங்களை ஆட்கொள்ளும்.

ஆணவமும் மனமும் கரையும்பொழுது இந்த அனுபவம் எழும். அது ஒருவன் தனது சொந்த முயற்சியால் அடையப்படவேண்டியது ஒன்றாகும். அது எல்லையற்றது, வரம்பற்றது, தூய உணர்வு அனுபவமாகும். இந்த அனுபவம் உணரப்படுகையில் மனம், ஆசைகள், செயல்கள் மற்றும் இன்பதுன்ப உணர்ச்சிகள் யாவும் சூனியத்தில் மறைந்து போகின்றன.

இப்பொழுது ஜீவத்வம் போய்விட்டது. சிறிய 'நான்' உருகிவிட்டது. பிரிக்கும் மனம் மறைந்துபோய்விட்டது. எல்லாத் தடைகள், எல்லா வேற்றுமை உணர்வுகள், பிரிவுகள் மறைந்துபோய்விட்டன. இடம், காலம் பற்றிய எண்ணமே இல்லை. சாஸ்வதமே எஞ்சியுள்ளது.

ஓம் எனப் பாடுங்கள். ஓம் என்பதுவே உங்களது உண்மைப் பெயர். ஓம் ஆத்மா. ஓம் பிரம்மன். ஓம் சத் சித் ஆனந்தப் பரம்பொருள். ஓம் மௌனம். ஓம் உங்கள் மையம். ஓம் உங்கள் அடைக்கலம். ஓம் ஹிருதயம். ஓம் ஜபம் செய்யுங்கள். ஓம் கீர்த்தனை செய்யுங்கள். ஓம் என உணருங்கள். ஓமில் வாழுங்கள். எல்லாமே ஓம் தான். உண்மையில் வாழுங்கள். அவனது இருப்பை பூக்கள், மரங்களில், கற்களில், நாற்காலிகளில், பறவைகளில், நாய்களில், சூரிய நட்சத்திரங்களில் எங்கும் உணருங்கள். மோனத்தில் புகுங்கள். ஆத்மாவில் மகிழுங்கள். உண்மை,

அறிவு, ஆனந்தத்தின் ஒளியில் மகிழுங்கள். மனத்தின் பின்னணியில் அறிவு மற்றும் ஆனந்தத்தின் சாகரமே இருக்கிறது. மனதை மீண்டும் அதன் உற்பத்தி ஸ்தானத்திற்கே (யோனி), ஆதார இடத்திற்கே (அனுஷ்டானம்) செலுத்துங்கள்.

ஓம் என்பதை நினைவு கூறுங்கள். ஸோஹம், ஓம் சிவோஹம், சிவோஹம், அஹம் பிரம்மாஸ்மி, அனல் ஹக் என்பதை நினையுங்கள். உண்மை ஒன்றே. பரமாத்மனுடன் உங்களது ஒற்றுமையை இந்த மந்திரங்கள் உங்களுக்கு நினைவூட்டுகின்றன. அவை உபநிடத மகாவாக்கியங்கள். இந்த மாயமான, பொய்யான சிறிய 'நானை' அவை ஒன்றுமில்லாததாக்குகின்றன.

மௌனமே, ஆத்மா. ஆத்மா மஹாமௌனம் (பேரமைதி). 'அயம் ஆத்மா சாந்த :- இந்த ஆத்மா மௌனமானது ' - இதுவே சுருதிகளின் வாக்கு. ஆத்மாதான் மையம். எந்த வேலையிலும் எந்தச் சூழ்நிலையிலும் நீங்கள் இந்த மையத்தை மறக்காதீர்கள். தளர்ச்சி அடையவேண்டியதில்லை. எனது நண்பர்களே! எழுந்து செயல்படுங்கள். நம்மில் மிகவும் மோசமானவர்கள் கூட முக்தி அடையலாம். பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தந்துள்ள உறுதி மொழியை மீண்டும் ஒரு முறை கேளுங்கள்; "*கௌந்தேய! ப்ரதி ஜானீஹி த மே பக்த : ப்ரணச்யதி* - " ஓ கௌந்தேய! எனது பக்தனுக்கு அழிவில்லை என்று தெரிந்து கொள்வாயாக".

மையத்தில் வாழ்ந்து அமைதியையும் ஆற்றலையும் பெறுங்கள். ஒரு பாத்திரத்திலிருந்து இன்னொரு பாத்திரத்திற்கு இடைவெளியின்றி விழும் தைலதாரை போன்று ஆத்ம ஞானத்தை தொடர்ந்து வைத்திருங்கள். நீங்கள் பிரம்மாகார விருத்தி ஸ்திதியை பெற்று விளங்கவேண்டும் (மையத்தில் நிலைபெறுதல்). நீங்கள் ஆத்மாவைப் பற்றி நினைக்கையில், பொருள்களைப் பற்றிய

எண்ணம் அடங்குகையில், இந்தப் பிரம்மாகார விருத்தி தூய மனத்திலிருந்து எழுகிறது. பிரம்ம சிந்தனை நிலைபெறும் பொழுது உங்களுக்கு இயற்கைநிலை அல்லது ஸஹஜ நிஷ்டை கைகூடும். இது ஸ்வஜாதீய விருத்தி ப்ரவாஹம் (ஆத்மனைப் பற்றிய சிந்தனை ஓட்டம்).

ஆத்மார்த்தமான சிறிது பயிற்சி மிகவும் அவசியம். ஞானயோகப் பயிற்சி எல்லா வேளைகளிலும் செய்யலாம். சில சமயங்களில் உங்களுக்கு எப்பொழுது ஓய்வு நேரம் கிடைக்கிறதோ நீங்கள் ஒரு அறைக்குள் சென்று ஆழ்ந்த தியானத்தில் அமரலாம். ஞான யோகத்திற்கு ஆசனமோ அறையோ தேவையில்லை. நடக்கும்பொழுது, பேசும் பொழுது, சாப்பிடும் பொழுது எப்பொழுதும் பிரம்மாகார விருத்தியைப் பெற்று விளங்குங்கள்.

நீங்கள் பொருள்களைப் பார்க்கும்பொழுது ஜடம் (உணர்வற்றது), விநாசி (அழியக்கூடியது) யான பொருள்களின் மாறுதலுக்குட்படும் நாமரூபங்களை மறுத்து, உள்ளே மறைந்திருக்கும் (அஸ்தி - பாதி - ப்ரிய) சச்சிதானந்த அந்தராத்மனை நினையுங்கள். காலப் போக்கில் பொய்யான நாமரூபங்கள் மறைந்துபோகும். நீங்கள் பாவ சமாதி, ஸம்யக் ஞானம், பஹிர் நிர்விகல்பத்தில் புகுவீர்கள்.

உங்களிடம் யாண்டும் புகழும், கீர்த்தியும், அமைதியும், ஆற்றலும் திகழட்டும். நீங்கள் ஆன்மா. நீங்கள் உண்மை. நீங்கள் பிரம்மன். நீங்கள் சச்சிதானந்தப் பிரம்மன் மனம், இந்திரியங்கள், பிராணன் மற்றும் உடலை நீக்கிவிட்டு பார்த்தால் எனதருமை நண்பர்களே நீங்கள் ஆத்மா. தத் த்வம் அஸி'.

## 35. ஸவிகல்ப, நிர்விகல்ப ஸமாதிகள்

பயிலப்படும் ஸமாதி ஸவிகல்ப, நிர்விகல்ப என்று இரண்டு வகைப்படும். ஸவிகல்ப ஸமாதியும் இரண்டு

வகைப்படும். ஒரு பொருளுடன் இணைந்திருக்கும்பொழுது த்ருச்யானுவித் என்றும் ஒரு ஒலியுடன் தொடர்புபடுத்தப்படும் பொழுது சப்தானுவித் என்றும் அழைக்கப்படுகிறது.

மனத்தின் மாறுபாடுகளான ஆசை போன்றவற்றை பார்க்கக்கூடிய பொருள்களாக கருதி அவற்றை சாட்சியாகக் காணும் உணர்வில் தியானியுங்கள். இது அந்தர் த்ருச்யானுவித் ஸவிகல்ப ஸமாதி.

நான் அஸங்க (பற்றற்ற) சச்சிதானந்தம், சுயம் ஜோதியான அத்வைத சொரூபம். இது அந்த : சப்தானுவித் ஸவிகல்ப ஸமாதி.

காற்றில்லாத இடத்தில் ஆடாது அசையாது எரியும் சுடர் போல பிரம்மனுடன் லயித்த நிலையில் பொருள் மற்றும் ஒலியிலிருந்து முற்றிலும் விடுபட்ட நிலை அந்தர் நிர்விகல்ப ஸமாதி எனப்படுகிறது.

இதயத்தினுள் நீங்கள் தியானத்தைப் பயிலுகையில் நாம ரூபங்களைத் தவிர்த்து நீங்கள் புறப்பொருள்களில் பிரம்மனாகிய ஸத் வஸ்து ஒன்றை மட்டுமே பார்க்கையில் அது பஹிர் த்ருச்யானுவித் ஸவிகல்ப ஸமாதி எனப்படுகிறது.

எல்லையற்ற சச்சிதானந்த வஸ்துவே பிரம்மன் என்று இடையறாமல் நினைப்பதுவே இடைநிலை ஸமாதி அல்லது பஹி சப்தானுவித் ஸவிகல்ப ஸமாதியாகும்.

மேற் சொன்ன இருவகை ஸமாதியைப் பயிலுவதால் அலையற்ற கடலைப் போல நிலையான மனதைப் பெற்று விளங்கும் நிலை பஹிர் நிர்விகல்ப ஸமாதி அல்லது மூன்றாவது வகை ஸமாதியாகும். ஒருவன் எப்பொழுதும் இந்த ஆறுவகை ஸமாதியில் தனது நேரத்தைக் கழிக்க வேண்டும்.

இந்த ஸமாதிகளால் உடல் உணர்வு மறைகிறது. மேலாம் ஆன்மா உணரப்படுகிறது. எங்கிருந்தாலும் எந்தப் பொருளைப் பார்த்தாலும் மனம் யாண்டும் ஸமாதியில் ஆழ்கிறது.

## 36. ஆறு வகை ஞானயோக ஸமாதி

அந்தர் த்ருச்யானுவித் ஸவிகல்ப, அந்த: சப்தானுவித் ஸவிகல்ப, அந்தர் நிர்விகல்ப, பாஹ்ய த்ருச்யானு, வித்ஸவிகல்ப, பாஹ்ய சப்தானுவித், பாஹ்ய நிர்விகல்ப என்பவையே அறுவகை ஸமாதியாகும்.

காணும் பொருள்கள், காமம், குரோதம் போன்ற விருத்திகள் யாவும் பிரம்மனின் தோற்றங்கள். பூமாலையில் இடையில் மறைந்துள்ள நூலைப் போல அனைத்தையும் அறியும், பொருள்கள் மற்றும் விருத்திகளின் சாட்சியாக மறைந்துள்ளது திருக் அல்லது பிரம்மனாகும்.

மனதின் எல்லா மாறுபாடுகள் அல்லது விருத்திகளும் மௌனசாட்சியான பிரம்மனால் தெளிவாகப் பார்க்கப் படுகிறது. த்ருக் (ஸாக்ஷி அல்லது காண்பது) த்ருச்யம் (பார்க்கப்படுவது) இரண்டுமே வேறல்ல. அனைத்துமே த்ருக் அல்லது பார்ப்பதன் வடிவங்களேயாம். காண்பனவெல்லாம் த்ருக் அல்லது பார்ப்போனே. இதுபோன்ற ஆராய்ச்சியே அதாவது ஸ்வரூப அனுஸந்தானமே அந்தர் த்ருச்யானுவித் ஸவிகல்ப ஸமாதியாகும்.

"நான் அஸங்க பிரம்மன்", 'நான் சுயம்ஜோதியான அழியாத ஆத்மன்', 'நான் சச்சிதானந்த பிரம்மன்' என்று மனதால் பாராயணம் செய்து, நினைந்து, உணர்வதுதான் அந்த : சப்தானுவித் ஸவிகல்ப ஸமாதியாகும். கட்புலனாவது எல்லாம் லயசிந்தனை மூலம் பிரம்மத்தில் உருகிக் கரைந்து தன்மயமாகின்றன. லயசிந்தனை என்பது கீழ்க்காணும் முறையில் சிந்திப்பதாகும் : "பிருதிவி அல்லது

மண் அதனது காரணமான நீரில் லயமாகிறது. நீர் அதன் காரணமான நெருப்பில், நெருப்பு காற்றில், காற்று ஆகாயத்தில், ஆகாயம் தமஸில், தமஸ் அவ்யக்தம் அல்லது மூலப்ரகிருதியில், அவ்யக்தம் பிரம்மனில் லயமாகிறது. இப்பொழுது இருப்பது ஒன்றுமில்லை. எல்லாமே பிரம்மன்" இது வேதாந்த யுக்தியால் பெறப்படும் புதுவகை திருஷ்டி அல்லது சாட்சியாகும்.

மேற்சொன்ன இரண்டு வகை ஸமாதிகளையும் மனத்தின் எல்லா வகை செயல்பாடுகளையும் விடுத்து நீங்கள் சுத்தசின்மாத்ர ரூப பிரம்மனாக எண்ணமற்ற நிலையில் இருந்தால் அது அந்தர் நிர்விகல்ப ஸமாதி ஆகிறது. மூன்றுவகை உள் ஸமாதியை நீங்கள் பயில்வதுபோல அனைத்து வேற்றுமைகளையும் இல்லாததாக்க நீங்கள் மூவகை வெளி ஸமாதியையும் பயில வேண்டும்.

கயிற்றில் பாம்பு கருதப்படுவதுபோல நாமரூபம் உள்ள உலகில் பிரம்மன் ஏற்றிச் சொல்லப்படுகிறது. வெண்மை, நுரையுடன் சேர்ந்த நீர் கடலில் அலை என்று கூறப்படுவது போல ஸத்சித் ஆனந்த நாமரூபம் என்ற ஐந்தும் ஒன்றிணைந்த ஸ்வரூபம் ப்ரபஞ்சம் எனப்படுகிறது. மேலே ஏற்றிக் கூறப்பட்ட நாமரூபங்களைத் தவிர்த்து நீங்கள் உலகை சத்சித் ஆனந்த பிரம்மனாக மட்டுமே பார்க்கவேண்டும். இது பாஹ்ய த்ருச்யானுவித் ஸவிகல்ப ஸமாதி. ஸத்சித் ஆனந்த பிரம்மனைத் தவிர வேறு எதுவுமே இல்லை என்று நீங்கள் உறுதியாக எண்ணி நாமரூபங்களை நீங்கள் பிரம்மத்தில் கரைத்துவிட்டு உங்களை பிரம்மனுடன் ஒன்றுபடுத்திக் கொள்ள வேண்டும்.

மேலே ஏற்றிச் சொல்லப்படும் நாமரூபங்களை அத்வைத ஆனந்த உணர்வுடன் இல்லையென்பது பாஹ்ய சப்தானுவித் ஸவிகல்ப ஸமாதியாகும். நீரில் கரைக்கப்பட்ட உப்பு நீருடன் ஒன்றாவது போல, எந்தவிதமான சரீர, மன

செயல்பாடு இன்றி முனிவர் பிரம்மத்துடன் லயிக்கும் அலையற்ற கடல் போன்ற எண்ணமற்ற நிலை பாஹ்ய நிர்விகல்ப ஸமாதியாகும். இந்த ஆறுவகை ஸமாதியைப் பயின்ற முனிவரின் மனம் அது வெளியே போகும்போ தெல்லாம் ஸமாதியில் புகுகிறது. இந்த நிர்விகல்ப ஸமாதியில் நிலை பெறும் அந்த முனிவர் குணாதீதர், பகவத் பக்தர், அதிவர்ணாச்ரமீ, அல்லது பிராம்மணர்.

## 37. உபநிடதங்கள் கூறும் ஸமாதி

1. தியானிப்பவன், தியானிக்கப்படு பொருள், தியானம் என்ற மூன்றும் (திரிபுடி) இன்றி தூய உணர்வு நிலையே, மேலான ஆனந்த நிலையே ஸமாதியாகும். ஜீவாத்மன் பரமாத்மனுடன் ஒன்றிய நிலையே அது.

2. காற்றில்லாத இடத்தில் உள்ள விளக்கின் சுடர் போல, தியானம், தியானிப்பவர் என்ற எண்ணத்தை விடுத்து, எப்பொழுதும் த்யேய வஸ்துவான பிரம்மனையே நினைக்கும் சித்தமே ஸமாதியாகும்.

3. எண்ணங்கள், ஆசைகள், அலைவு ஆகியவற்றிலிருந்து விடுபட்ட மனம் பரப்பிரம்மனில் லயிக்கிறது. இதுவே ஸமாதி.

4. ஆத்மஞானத்தின் மூலம் ஒருவனது இதயத்தினுள் ளேயே இருக்கும் ஆத்மனை எவன் நேரடியாக உணர்கிறா னோ, உடல் எண்ணம் எப்பொழுது முற்றிலும் இல்லாமலா கிறதோ, அமைதி எப்பொழுது அடையப் படுகிறதோ அந்த நிலையில் மனத்தின் விருத்திகள், மனம், புத்தி, அனைத்தும் இல்லாதாகின்றன. இந்த மனோ நாச நிலையே ஸமாதி.

5. கும்பகத்தின்போது பிராண, அபானனைக் கட்டுப்படுத்தி இரண்டு கைகளின் விரல்களாலும் சண்முக முத்திரையைச் செய்து பார்வையை மூக்கு நுனியில் லயிக்கச் செய்து மனமானது ஓம் எனும் பிரணவத்தில் ஒன்றாகிறது.

6. பசுவின் மடியிலிருந்து பால் சொட்டுவதுபோல, அமிருதம் சொட்டுகிறது. புலன்கள் உள்முகமாகி அடங்குகின்றன. மனோ நாசம் நிகழ்கிறது. இது யோக ஸமாதி.

7. ஐந்து ஞானேந்திரியங்கள் மனத்துடன் அமைதி யுடனிருக்கின்றனவோ, அறிவு எப்பொழுது செயல்படாமல் அமைதி அடைகிறதோ அதை மேலான நிலையென முனிவர்கள் மொழிகின்றனர்.

8. மனதின் எல்லா சங்கல்பங்களும் (ஆசைகளும்) எப்பொழுது அடங்குகின்றனவோ, மனமானது ஜாக்கிரத்தி லும் (விழிப்பு நிலையிலும்) உறக்கத்திலும் இல்லாமல், அசைவின்றி பாறையைப் போல அமைதியாயிருக்கிறதோ அதுவே மிக உயர்ந்த ஸமாதியின் பிரம்மநிலையாகும்.

9. இடை, பிங்கலையைத் தவிர்த்து பிராணன் எப்பொழுது சுஷும்னையில் சஞ்சரிக்கிறதோ அப்பொழுது மனம் நிலைபெறுகிறது. மனதின் பூரண அமைதி நிலையே ஸமாதியில் பிரம்மநிலையாகும். அது மனோன்மணி எனப்படுகிறது.

10. ஜீவன் முக்தன் ஸாரூப மனோ நாசத்தை அடைகிறான். அது தனது இடத்தில் ஆணவத்தின் லேசான தடத்தை விட்டுச்செல்கிறது. ஆனால் விதேஹமுக்தனுக்கு ஆணவம், உறக்கம், பாபங்கள் அனைத்தும் முழுக்கவும் இல்லாதாகின்றன. அவர் அரூப மனோ நாசத்தை அடைகிறார்.

11. எல்லா சுடர்விடும் ஆசைகளிலிருந்தும் சித்தம் அல்லது மனமானது எப்பொழுது விடுபடுகிறதோ, எப்பொழுது மனம் அழிகிறதோ, ஆழ்ந்த உறக்கம் அல்லது ஸுஷுப்தியைப் போன்ற அமைதியான நிலையை யோகி அடைகிறான்.

12. ஸங்கல்பம் அல்லது ஆசை இல்லாத காரணத்தால் அந்த நிலை விழிப்பு நிலையுமல்ல, கனவு நிலையுமல்ல. தமஸ் இல்லாததால் அது சுஷுப்தி அல்லது தூக்கமும் அல்ல.

13. வாசனைகளாகிய புல்லை எரிக்கும் தீயாகிய பிரம்மஞானத்தை ஸமாதி என்ற வார்த்தை குறிக்கிறது. அது வெறும் மௌனமோ அல்லது ஜடநிலையோ அல்ல.

14. பிரம்ம தியானம் அல்லது பிரம்மாகார விருத்தியை வளர்த்து எண்ணங்கள் அல்லது விருத்திகளை முழுவதுமாக இல்லாதாக்குவதே ஸமாதியாகும்.

15. கேட்கப்படும் அல்லது பார்க்கப்படும் எந்தப் பொருளும் பிரம்மன் அல்ல என்ற அறிவு வருகையில் ராகத்வேஷ வேகம் மிகவும் குறைகிறது. விவேகம், வைராக்கியத்தால் பிரம்மஞானம் நிலைபெறுகிறது. இந்த (நிஷ்டை) நிலைதான் ஸமாதி.

16. "நான் அந்த மேலாம் பிரம்மன். நான் பிரம்மன் மட்டுமே" - மற்ற எல்லா எண்ணங்களையும் தவிர்த்து இந்த ஒரு எண்ணம் மட்டுமே இருந்தால் அது ஸமாதி.

17. ஜீவாத்ம பரமாத்ம ஞானம் மேலோங்கி திரிபுடி இல்லாததாகி தியானத்தில் தன்னை முழுக்க மறப்பதுவே ஸமாதி.

18. கற்றோனே! பிரம்ம ஞானத்திற்கு வழி காட்டும் தன்னடக்கமுள்ள சித்தத்தால் அடையப்படும் அந்த மேலான அறிவு அல்லது உணர்வு நிலையே ஸமாதி.

19. மாறும் எண்ணங்கள் இன்றி, ஆணவம் இல்லாமல், சீதோஷ்ணம் சுகதுக்கம் போன்ற எதிரிடை இரட்டைகள் இன்றிய மனநிலையே ஸமாதி. முதுகெலும்பின் (மேரு தண்டம்) வளையாத நிலையே ஸமாதியைக் குறிக்கிறது.

20. புலன் இன்பத்திற்கான எல்லா ஆசைகளையும் துறந்து, போக எண்ணங்களைத் துறந்து, பெறுதல் விடுதல் ஆகிய எண்ணங்களிலிருந்து விடுபட்டு இருக்கும் மனத்தின் நிறைநிலையே ஸமாதி.

21. நீரில் உப்பு கரைவது போல் ஆத்மனில் மனம் லயிப்பதுவே ஸமாதி

22. எல்லா ஸங்கல்பங்களும் இல்லாதாகி, எந்தவித வேறுபாடும் இன்றி ஜீவனும் பிரம்மனும் ஒன்றே என்ற அறிவைப் பெறுவது ஸமாதி.

23. விருத்திகள், மனம், புத்தி, மாற்றங்கள், சிதைவு எதுவுமே இல்லாத நிலை ஸமாதி.

24. "நான் சரீரம்", "நான் மனம்" என்று உறுதி செய்யும் ஆணவம் இன்றி தியானப் பயிற்சியால் பெறப்படும் இடையறாத பிரம்மாகார விருத்தியின் ஓட்டமே ஸம்ப்ரக்ஞாத ஸமாதியாகும்.

25. எல்லா வாஸனைகளையும் விருத்திகளையும் அழித்து பேரானந்தப் பெருநிலையை நேரடியாக அனுபவிக்கும் நிலையே அஸம்ப்ரக்ஞாத ஸமாதி. இது யோகிகள் மிகவும் விரும்புவது.

26. நாமரூபம் உள்ள பொருள்களையெல்லாம் நீக்கி ஆத்மானந்தத்தை நேரடியாக உணர்ந்து காற்றில்லாத இடத்தில் உள்ள விளக்குச் சுடர் போல மனம் ஆகிறது. இது நிர்விகல்ப ஸமாதி.

27. மனதை ஆத்மனில் லயிக்கச் செய்து அந்தர்முக விருத்தித் தொடர்ச்சியால் உணர்வு ஒளிர்வதே முனிவர்களால் பயிலப்படும் ஸமாதியாகும். இதில் எல்லா ஆசைகளும் தாங்களாகவே கழன்றுவிடுகின்றன.

28. மங்கள சொரூபமான, மேலும் கீழும் இடையிலும் எங்கும் நிறைந்த பரமாத்மனை நேரடியாக உணர்வதே ஸமாதியாகும்.

## 38. ஆறு மாதங்களில் ஸமாதி

கடவுள் அல்லது பிரம்மனுடன் ஒன்றிப்பதுவே ஸமாதி. நீங்கள் உத்தம அதிகாரியானால், முதல்தர சாதகரானால், தீவிர வைராக்கியம் மற்றும் முக்திக்கான நாட்டம் மற்றும் சாதன சதுஷ்டயம் உங்களிடம் இருக்குமானால், ஸ்ரீ சங்கரர், பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் போன்ற பிரம்மசுரோத்ரி பிரம்ம நிஷ்டரை உங்களுக்கு ஊக்குவிப்பவராக அருகில் கொண்டிருந்தால், கண்ணிமைக்கும் நேரத்தில் நீங்கள் ஆத்மானுபூதி அடைவீர்கள். ஒரு பூவை கையால் கசக்கும் நேரத்திற்குள் நீங்கள் ஆத்மனை உணரமுடியும். ஒரு பாத்திரத்தின் மேல் பாகத்திலிருந்து அடிப்பாகத்திற்கு ஒரு தானிய மணி செல்லும் நேரத்திற்குள் நீங்கள் அந்தர் தரிசனத்தைப் பெறலாம். இதில் சிரமமே இல்லை. சாதகன் ஹஸ்தாமலகர், பத்மபாதர், ஸ்ரீ சங்கரர், அர்ஜுனர், அல்லது பகவான் ஸ்ரீ கிருஷ்ணரைப் போல இருக்க வேண்டும். தன் குருவிடம் அவனுக்கு அளவு கடந்த பக்தி இருக்க வேண்டும். ஞானயோக மார்க்கத்தில் மிகவும் தேவைப்படுவது சிரத்தையே. இது இங்கே பகுத்தறிவு பூர்வமான நம்பிக்கை. பக்தியோகத்தில் இது குருட்டு நம்பிக்கை. அந்தக் கரணத்தின் அஸ்திவாரம் நன்கு அமையாவிட்டால், மனத்தூய்மை அல்லது சித்தசுத்தி இல்லாவிட்டால், ஈசுவரனோ, ஆயிரம் சங்கரர்களோ அல்லது ஸ்ரீ கிருஷ்ணர்களோ இந்த விஷயத்தில் உங்களுக்கு எதுவும் செய்யமுடியாது. இந்த முக்கிய விஷயத்தை நினைவில் வையுங்கள். அஷ்டவக்கிரர் மூலம் ராஜா ஜனகர் கண்ணிமைக்கும் நேரத்தில் உணர்ந்தார். போர்க்களத்தில்

ஒன்றரை மணி நேரத்தில் அர்ஜுனன் ஆத்மஞானம் பெற்றார்.

மகாராஷ்டிராவைச் சேர்ந்த முகுந்தராய் குதிரையின் மீது அமர்ந்திருந்த பாதுஷாவிற்கு ஒரு வினாடிப் போதில் சமாதியை அளித்தார். இதைப் போன்று எண்ணற்ற உதாரணங்கள் உண்டு.

முன்காலத்தில் செய்ததுபோல கலியுகத்தில் நீங்கள் மிகுந்த தவம் செய்யவேண்டாம். முன்பு மக்கள் பல வருடங்கள் ஒற்றைக்காலில் நின்று தவம் செய்தார்கள். பல்வேறு தவங்களை அவர்கள் செய்தார்கள். இதை நீங்கள் மகாபாரதம் மற்றும் சமய நூல்களில் காணலாம். இக்கால மக்களின் குறுகிய ஆயுள் மற்றும் மெலிந்த சரீரத்தைக் கருதி பகவான் அவர்கள் மீது கருணை புரிந்திருக்கிறார். இக்காலத்தில் சிரத்தை, நம்பிக்கை, பக்தி இருந்தால் ஒருவன் தவம், தியானத்தால் வெகு சீக்கிரத்தில் உணரமுடியும். அதிகாலை 4 மணிக்கு நீங்கள் ஒரு ரயிலைப் பிடிக்கவேண்டுமானால் எவ்வளவு சுறுசுறுப்பாகச் செயல்படுகிறீர்கள். இரவிலேயே மூட்டை முடிச்சுக்களைக் கட்டிவிடுகிறீர்கள். காலை டிபனுக்காக வேண்டிய தின்பண்டங்களை முந்திய இரவே தயாரிக்கிறீர்கள். அலாரம் கடிகாரத்தை நீங்கள் 3 மணிக்கு எழுந்துவிடும் வகையில் தயாராய் வைக்கிறீர்கள். இது போன்ற இன்னும் பல காரியங்களைச் செய்கிறீர்கள். இதில் பத்திலொரு பங்கு சிரத்தையையும் ஆர்வத்தையும் ஆன்மீக வழியில் நீங்கள் காண்பித்தால் ஆறே மாதங்களில் உங்களுக்கு ஸமாதி கிட்டும். அதை அடைவதிலிருந்து இப்பூவுலகிலோ அல்லது சொர்க்கத்திலோ எவரும் உங்களைத் தடுக்கமுடியாது.

# 39. மஹாபாரதத்தில் காணும் ஆறுமாதங்களில் ஸமாதி

மனதை அடக்கியவனாக யோகி ஒரு மலைக் குகைக்கோ, கோவிலுக்கோ அல்லது தனி அறைக்கோ செல்லவேண்டும். மனம், வாக்கு, செயல் மூலம் அவன் எதனுடனும் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது. காரணம், பொருள்களுடன் தொடர்பு கொள்ளுதல் யோகிகளுக்குத் துன்பம் தரும். எதனுடனும் அவன் உதாஸீனத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். தனது உணவில் அவன் மிகவும் ஒழுங்காயிருத்தல் வேண்டும். உலகியல் லாபம் அவனுக்கு மகிழ்ச்சியையோ, உலகியல் நஷ்டம் எவ்வித துக்கத்தையோ தரக்கூடாது. அவனைப் புகழ்வோனிடத்தும் இகழ்வோனிடத்தும் அவன் ஒரே மனப்பான்மையுடன் இருத்தல் வேண்டும். எவருக்காவது நன்மையோ தீமையோ நிகழ்ந்தால் அதைப் பற்றி அவன் சிறிதும் கருதக் கூடாது. லாபம் வருகையில் மகிழ்ச்சியோ நஷ்டம் ஏற்படுகையில் வருத்தமோ அவன் கொள்ளக் கூடாது. எல்லா உயிரிடத்தும் அவன் சமநோக்கு கொண்டு விளங்க வேண்டும். எவரிடமும் காற்றைப் போல பற்றற்று விளங்கவேண்டும். இம்மாதிரி எவன் அவனது மனதை ஆரோக்ய நிலையில் வைத்து பிறருக்காக செயல்படுகிறானோ, எல்லோரிடத்தும் எல்லாவற்றிடத்தும் சமநோக்கு கொண்டு விளங்குகிறானோ, ஆறுமாத காலம் ஒழுங்குப்பாடான கட்டுப்பாட்டு வாழ்க்கை வாழ்கின்றானோ, அவன் பிரம்மனை உணர்ந்து (நிர்விகல்ப ஸமாதி) பிரம்மனாகவே ஆகலாம்.

# 40. சில ஸமாதி அனுபவங்கள்

## உத்தாலக முனிவரின் அனுபவம்

உண்மையின் ஆனந்த லோகத்திற்கு ஒருவனை இட்டுச் செல்லும் ஸமாதி நிலையை உத்தாலக ரிஷியால் அடைய முடியவில்லை. ஏனெனில் குரங்கு மனம் புலனுலகப் பொருள்களில் ஒன்றிலிருந்து மற்றொன்றிற்கு தாவிக் கொண்டிருந்தது. அவர் பத்மாசனத்தில் அமர்ந்து உரத்தகுரலில் பிரணவ மந்திரமான 'ஓம்' - ஐ உச்சரித்துக் கொண்டிருந்தார். பிறகு அவர் அவரது தியானத்தைத் தொடங்கினார்.

பலவந்தமாக அவர் மனத்தை அடக்கினார். மிகுந்த சிரமத்துடன் அவர் பொருள்களிலிருந்து புலன்களைப் பிரித்தார். எல்லாப் புறப்பொருள்களிலிருந்தும் அவர் தம்மை முழுவதும் பிரித்துக் கொண்டார். உடலின் வாயில்களை அவர் அடைத்தார். அவரது மனம் எல்லா விகல்பங் களிலிருந்தும் விடுபட்டது. மீண்டும் மீண்டும் போர்க்களத்தில் தன்னை எதிர்க்கும் எதிரி வீரர்களை எவ்விதம் ஒரு வீரன் வெட்டி வீழ்த்துவானோ அதுபோல அவன் எல்லாப் பொருள்களைப் பற்றிய எண்ணங்களையும் இல்லாதாக் கினான்.

அவர் தம்முன் ஒரு பிரகாசமான ஒளியைக் கண்டார். மோகத்தை அவர் அகற்றினார். இருள், ஒளி, உறக்கம், மோகம் என்ற படித்தரங்களை அவர் கடந்தார். காலக்கிரமத்தில் அவர் நிர்விகல்பஸமாதி நிலையை அடைந்து பூரண அமைதியை அனுபவித்தார். ஆறுமாதங் களுக்குப் பிறகு அவர் ஸமாதியிலிருந்து எழுந்தார். நாட்கள், மாதங்கள், வருடங்கள் என்று அவர் ஆழ்ந்த ஸமாதியில் கழித்து பிறகு விழித்தெழுவார்.

## ராஜா ஜனகரின் அனுபவம்

"இதுவரை இந்த மனமெனும் முத்தில் என்னால் ஒரு துளையைப் போட முடியவில்லை. இப்பொழுது நான் அதைச் செய்து அனுபவம் எனும் நூலில் கோர்த்து என் மீது மாலையாக அணிந்து கொள்வேன். அதை நான் எனது குருமாரான எல்லாம் தெரிந்த ஸித்தர்களிடமிருந்து கற்றேன். இப்பொழுது பூரண பிரம்மத்துக்கே உரிய ஆனந்தத்தை நான் அனுபவிக்கிறேன். என் மனத்திலிருந்து 'நான், நீ போன்ற வேற்றுமை எண்ணங்களை நான் படிப்படியாக அகற்றிவிட்டேன். அவற்றை இனி நான் ஒரு பொழுதும் திரும்ப என் மனதிற்கு கொண்டு வரமாட்டேன். இதுகாறும் எனது ஆத்ம ஞானத்தைக் கெடுத்த எனது பெரும் பகைவனான மனதை இப்பொழுது நான் வென்றுவிட்டேன். என்னைவாட்டி வருத்திய எல்லாத் துன்பங்களிலிருந்தும் இப்பொழுது நான் விடுபட்டுவிட்டேன். அமைதியான வாழ்க்கையை நான் இப்பொழுது பெற்றுவிட்டேன். என்னை இந்த அளவுக்கு உயர்த்திய விவேக ஞானமே! நான் உன்னை வணங்குகிறேன்".

இவ்வாறு மனதின் எல்லா அலைவுகளையும் இல்லாதாக்கிய பின்னர் ராஜா ஜனகர் ஸமாதியில் சிலை போல அமர்ந்திருந்தார். அதில் நெடுநேரம் இருந்த பின்னர் அதிலிருந்து திரும்பி வந்து அவரது அசுத்த மனம் அகன்று போய் அமைதியான மனத்துடன் உலகைக் கண்டு கீழ்க்கண்டவாறு கூறினார் : " இந்த உலகில் அறிவதற்கு எனக்கு என்ன பொருள் இருக்கிறது? எது மாயை? இப்பொழுது நான் காணும் எனது கண்களுக்கு அனைத்தும் தூய ஞானமே. எனது சொந்த உண்மை சொரூபமான ஆத்ம ஞானத்தையே நான் எங்கும் உணர்கிறேன். நான் குறுக்கிடாத எந்தப் பொருளையும் விரும்பேன்; அல்லது வெறுக்கவும் மாட்டேன். எனது ஆத்ம ஞானத்தில் நிலைத்து

இருப்பேன். திட்டமிட்டபடி எல்லாம் நிகழும்" இவ்வாறு சொல்லிக் கொண்டே தமது அத்வைத நிலையில் அரசர் லயித்திருந்தார்.

## ராஜா பலியின் அனுபவம்

அரசன் பலி பிரபஞ்சத்தைப் பற்றி தியானத்தில் ஆழ்ந்து தமது ஆச்சாரியரின் வார்த்தைகளை மெய் எனக் கொண்டு கூறினார் : "இந்த மேலான பூமி ஞானமே; மூவுலகமும் ஞானமே; எனது உண்மையான தன்மையும் ஞானமே; விதிக்கப்பட்ட எல்லாக் கர்மங்களும் ஞானமே. காண்பன, காண்போன் எதுவும் இன்றி தனது சொரூபத்தில் ஒளிரும் அந்தப் பிரம்மமே நான்; அனைத்திலும் பரவிநிற்கும் அந்த ஞானதத்துவமே நான்; ஞான ஆகாசமே நான்; அறிவேநான். மேலாம் ஞானத்தை உணர்த்தும் பிரணவமான ஓம்காரத்தை மனதால் ஜபித்துக் கொண்டு அவர் தியானத்தில் லயித்தார்; ஸங்கல்பங்கள், கர்மங்கள், மனைவி, மக்கள், செல்வத்தைக் குறித்த ஆசைகள், ஐயங்கள், அறிவு, பொருள்கள் அனைத்தும் அற்றவராக வெகுநேரம் ஸமாதியில் ஆழ்ந்திருந்தார். காற்றற்ற இடத்தில் உள்ள விளக்குச் சுடர் போல அரசன் பலி அசையாமல் அமர்ந்திருந்தார். விருப்பு வெறுப்பு எதுவும் இன்றி நிறைந்த மனதுடன் பூரண ஸத் சொரூபமாக அவர் அமர்ந்திருந்தார். மேகமற்ற வானம் போன்ற நிலை இது.

இவ்வாறாக அரசர் ஸமாதியில் நாட்களைக் கழித்த போது அவனது அவையோர் அரண்மனையின் மேல் மாடத்திற்கு அவரைத் தேடிக்கொண்டு சென்றனர். அங்கே அவர்கள் அவரை நிர்விகல்ப ஸமாதியில் ஆழ்ந்திருந்ததைக் கண்டனர். வெகுநேரம் கழித்து அவர் கண்விழித்து ஆசையும் ஆணவமும் அகன்ற மனதுடன் தனது அரச காரியங்களைச் செய்யத் தொடங்கினார். மாசற்ற மனத்துடன் அவர் துன்பத்தில் துவளாமலும் இன்பத்தில் துள்ளாமலும்

சம மனநிலையில் இருந்தார். அனைத்தையும் சமமாக நோக்கினார்.

எத்தனை எத்தனை நல்ல எண்ணங்களும், கெட்ட எண்ணங்களும் இடையறாமல் அவரது மனத்தில் எழுந்தாலும், எத்தனைபொருள்கள் உண்மையாகவும் கற்பனையாகவும் அவர் முன் தோன்றினாலும் அவர் அத்தனையையும் அடக்கவல்லவராக இருந்தார்.

### கச்சாவின் அனுபவங்கள்

ஸமாதி நிலையிலிருந்து திரும்பி வந்த கச்சா இனம் புரியாத இன்பத்தை தான் அனுபவித்ததாகவும், விவரிக்க முடியாத ஒலியைக் கேட்டதாகவும் கூறினான். இப்பொழுது நான் என்ன செய்வேன்? எந்த இடத்திற்கு நான் பறந்து செல்வேன்? (பறப்பதற்கு எனக்கு இடமே இல்லையே) எதை நான் செய்யாமல் விடுவேன்? வெள்ளம் பெருக்கெடுத்து எங்கும் நிரம்புவது போல எனது ஆன்மாவே எங்கும் நிறைந்திருக்கிறது. உடலுக்குள்ளேயோ, வெளியேயோ, ஆகாயத்திலோ, பூமியிலோ, வேறு எங்குமே எனது ஆன்மாவே நிரம்பியிருக்கிறது. என் ஆத்மனில் இல்லாத பொருள் எதுவும் கிடையாது. சுயம் ஜோதியான பரப்பிரம்மன் நானேயன்றி வேறல்ல. இருப்பது இந்த சச்சிதானந்தமே.

## 41. சமாதிக்குத் தடைகள்

நண்பர்களே! தைரியமாயிருங்கள். மனதை அடக்கி ஸமாதியில் புக நீங்கள் முயற்சிக்கையில் பல்வேறு இடையூறுகளை நீங்கள் எதிர்கொள்ள நேரிடும். லயம் (மனம் செயலற்றுப் போதல்), விக்ஷேபம் (சிதறல்கள்), கஷாயம் (காமம்), சுகராகம் (இன்ப ருசி) ஆகியவற்றை நீங்கள் வெல்ல நேரிடும்.

லயம் அல்லது மனம் செயலின்மை என்பது ஆழ்ந்த உறக்கத்திற்கு நிகர். காமத்தைப் போன்று இதுவும் தீயது.

லயத்தில் உள்ள மனத்தைத் தட்டி எழுப்புங்கள். இடைவிடாத பயிற்சி, வைராக்கியம், ஞானாப்பியாஸம், பிரம்ம சிந்தனை ஆகியவற்றால் நீங்கள் லயம் மற்றும் மனச்சிதறலை வென்றுவிட்டாலும், மனமானது பூரண சமநிலை அல்லது அமைதியை அடைந்துவிடாது. அது ஒரு இடைநிலையாக இருக்கும். புறப்பொருள்களில் செயல்படு வதற்கான விதையான ராகம் அல்லது பற்றுதலிலிருந்து மனம் இன்னும் விடுபடவில்லை. இன்னும் மறைந்துள்ள வாசனைகள், கஷாயம் அல்லது காமம் நீடிக்கிறது. விசாரத்தால் நீங்கள் மனத்தை மீண்டும் மீண்டும் கட்டுப்படுத்த வேண்டும். ஆழ்ந்த தியானம் செய்து ஸம்ப்ரக்ஞாத அல்லது ஸவிகல்ப ஸமாதியைப் பயில வேண்டும். கடைசியில் நீங்கள் அஸம்ப்ரக்ஞாத அல்லது நிர்பீஜ ஸமாதி (விதையில்லாத ஸமாதி)யில் லயிக்க வேண்டும்.

நீங்கள் தியானத்தைப் பயிலாததால் உங்களால் ஸமாதியில் புகமுடியவில்லை. உங்களது மனத்தை ஒருமைப்படுத்த முடியாததால் உங்களால் ஆழ்ந்த தியானம் செய்ய முடியவில்லை. பொருள்களிலிருந்து புலன்களை உங்களால் முழுக்கவும் பிரிக்க முடியாததால் அதாவது பிரத்யாஹாரத்தைப் பயிலாததால் உங்களால் மனத்தை ஒருமைப்படுத்த முடியவில்லை. பிரத்யாஹாரத்தை முழுமையாக உங்களால் ஏன் செய்யமுடியவில்லை என்றால் பிராணாயாமம் மற்றும் யம, நியமத்தால் பிராணன் மற்றும் ஆசனத்தில் நீங்கள் வெற்றி பெறவில்லை என்பதனாலேயாகும்.

கடலைத் தன் அலகால் காலி செய்ய முயற்சிக்கும் டிட்டிப என்னும் பறவையின் பொறுமை ஸமாதியை

அடைய விரும்பும் சாதகனுக்கு இருத்தல் வேண்டும். இவன் தீவிர உறுதி கொண்டுவிட்டானானால், டிட்டிப பறவைக்கு கருடன் உதவிக்கு வந்ததைப் போல தேவர்கள் உங்களுக்கு உதவ வருவார்கள். நல்ல செயலுக்கு உதவி அனைத்துயிரிட மிருந்தும் கேட்கமாலேயே வருகிறது. சீதையை மீட்பதற்கு ராமருக்கு அணில்களும் குரங்களும் கூட உதவி புரிந்தன. தன்னடக்கம், தைரியம், ஆண்மை, பொறுமை, சகிப்புத் தன்மை, விடாமுயற்சி இருப்பவன் எதையும் சாதிப்பான். தாங்கமுடியாத தொல்லைகள் எதிர்ப்படினும் உங்களது முயற்சியை நீங்கள் கைவிடக்கூடாது.

ஆசைகள் உங்களைத் தொல்லைப் படுத்துகையில் புலன் வாழ்க்கையில் உள்ள குறைகளைக் கண்டு வைராக்யத்தை அடைய முயலுங்கள். புலனின்பங்களுக்கு வெறுப்பையும் உதாசீனத்தையும் வளருங்கள். போகம் துக்கத்தையும் பல்வேறு தொல்லைகளையும் உண்டாக்குகிறது என்பதை எண்ணுங்கள். திரும்பத் திரும்ப மனதைப் புலன்களிலிருந்து இழுத்து பகவானின் திருஉருவப்படத்தின் மீதோ அழியாத ஆத்மனின் மீதோ நிலைபெறச் செய்யுங்கள். மனம் சமநிலையை அடையும் பொழுது, லயம், சிதறலிலிருந்து அது விடுபடும்பொழுது அதைத் தொந்தரவு செய்யாதீர்கள்.

ரஸாஸ்வாதம் எனப்படும் ஸவிகல்ப ஸமாதியின் இன்பத்திலிருந்து மனத்தை நீங்கள் திசைதிருப்ப வேண்டும். ரஸாஸ்வாதமும் ஒரு தடையே. இது சாதகனை நிர்விகல்ப ஸமாதியை அடைவதிலிருந்து தடுக்கிறது. சில சாதகர்கள் இந்தப் போலியான இந்த இன்பத்தில் திருப்தி அடைந்து தங்களது சாதனையை நிறுத்திவிடுகின்றனர். அவர்கள் நிர்விகல்ப ஸமாதியை அடைய முயல்வதில்லை.

## 42. போலி ஸமாதி

ஒரு சமயம் ஆனந்தகுமரை விட்டு நான் எனது அசாதாரணமான யாத்திரையின்போது ரயில் பெட்டியில் எனக்கருகில் அமர்ந்திருந்த நன்கு உடை அணிந்திருந்த ஒருவர் ஒரு தினசரிப் பத்திரிகையில் வெளிவந்திருந்த செய்தியை என்னிடம் காட்டி, "சுவாமிஜி! இந்த சுவாமியை உங்களுக்குத் தெரியுமா? சமீபத்தில் அவர் ஒரு ஸமாதிக் காட்சியை செய்து காண்பித்தார். பூமிக்கடியில் அவர் தம்மைப் புதைத்துக் கொண்டார். ஒரு பெட்டிக்குள் அமர்ந்து 42 நாட்கள் அதைப் புதைக்கச் செய்து 43வது நாள் அந்தப் பெட்டியின் மூடியைத் திறக்கச் செய்து வெளியே வந்தார். இது அந்த ஊர் கலெக்டர், பல்கலைக் கழகப் பேராசிரியர்கள், டாக்டர்கள் மற்றும் பலர் முன்னிலையில் நிகழ்ந்தது". நான் கடந்த 20 ஆண்டுகளாக எந்தப் பத்திரிகையையும் பார்த்ததில்லை. ஆனால் அவர் சொன்ன விஷயம் எந்த ஒரு விஞ்ஞானி அல்லது அறிவு பூர்வமான சிந்தனையாளரின் மனதை ஈர்க்கவல்லது. நான் கேள்வி கேட்ட நபரின் முகத்தை நன்கு உற்று நோக்கிச் சொன்னேன். "இது உண்மையான ஸமாதி ஆகாது. இது வெறும் ஜடஸமாதியே. இந்த சாது ஏதோ இமாலய மூலிகைகளைத் தெரிந்து வைத்துக்கொண்டு இதற்கு முன் பல தடவை அதைப் பரிசோதித்துப் பார்த்திருக்கவேண்டும். ஏனெனில் ஸமாதி என்பது பிறர்முன் காட்டக்கூடியதொரு காட்சி அல்ல, காட்டவும் கூடாது. தங்கள் இருதயத்தைச் சுத்தப்படுத்தியவர்கள், கடவுளிடம் உன்னதமான பக்தி கொண்டவர்களால் மட்டுமே யோகத்தின் மிக உயர்ந்த நிலைக்குப் போக முடியும். இத்தகைய உண்மையான யோகிகள் பொதுமக்கள் முன்னிலையில் அதைச் செய்து காட்டமாட்டார்கள்". இதைக் கேட்ட பின்னும் எனது சகபயணிக்கு இந்த விஷயத்தைப் பற்றிய ஆர்வம் குறைந்ததாகத் தெரியவில்லை.

மற்றொரு சமயம் பிரபல ஒரு வாரப்பத்திரிகையில் 24 மணி நேரம். பூமிக்கடியில் தன்னை ஸமாதி நிலையில் புதைத்துக் கொண்ட ஒரு தென்னிந்தியரின் படத்தை என்னிடம் ஒருவர் காண்பித்தார்.

சாதனைக்காக என்னிடம் வந்த இன்னொரு இளைஞரைப் பற்றிய வேடிக்கையான செய்தியை உங்களுக்கு நான் சொல்ல விரும்புகிறேன். ஒரு நாள் அந்த இளைஞர் தனது அறைக் கதவுகளையெல்லாம் மூடி உள்ளே ஒரு சாதாரண ஆசனத்தில் அமர்ந்தார். திராதக், மன ஒருமைப்பாடு மற்றும் பகவான் ஸ்ரீ நாராயணரின் படத்தில் தியானம் செய்தார். தானாக அவரது சுவாசம் நுரையீரலின் கீழ்ப்பகுதிக்குச் சென்றது. சாதகர் 24 மணி நேரத்திற்கு கட்டைபோல அமர்ந்திருந்தார். ஆசிரம சமையற்கூடம் மற்றும் ஆசிரம வளாகத்தில் அவரைக் காணோம என்பதால் சிறிது பரபரப்பு ஏற்பட்டது. எவ்வளவோ கத்திப் பார்த்தும், கதவுகளைத் தட்டிப் பார்த்தும் அவர் கதவைத் திறக்கவில்லை என்பதால் அவரது அறைக் கதவை உடைப்பது ஒன்றுதான் கடைசி வழி என்ற முடிவிற்கு ஆசிரமவாசிகள் வந்தனர். அவ்விதம் கதவைத் திறந்து பார்த்தபோது நாசியில் லேசாக சுவாசம் போய்க் கொண்டிருந்தது. அவரது கண் இமைகள் அவ்வப்பொழுது படபடவென்று அடித்துக் கொண்டன. மார்புப் பகுதியும் மேலும் கீழும் சுருங்கி விரிந்து கொண்டிருந்தது. எவ்வளவோ உரக்கக் கத்தியும் அவரை எழுப்பமுடிய வில்லை. மேற்காணும் சின்னங்களைத் தவிர அவரது உடல் குறுகிப்போனது மாதிரி தெரிந்தது. ஒரு ஆசிரமவாசியிடம் அவரது இருபுருவங்களுக்கும் இடையில் உள்ள பாலப் பகுதியை சிறிது கீழ்நோக்கி அழுத்துமாறு சொன்னேன். ஏனெனில் அதனால் அவரது மன ஒருமைப்பாடு சிறிது கீழ் நிலைக்குக் கொண்டுவரலாம். இது விரும்பிய பலனைக் கொடுத்தது. சுவாசம் சாதாரணமாயிற்று. இளைஞர்

கண்ணைத் திறந்தார். பேந்தப் பேந்த அறையிலுள்ளோரையும் பொருள்களையும் பார்த்து விழித்தார். அவரது செயலிலோ, நடை உடை பாவனையிலோ சச்சிதானந்த நிலையின் சிறிதளவு அம்சத்தைக் கூட நான் கண்டதில்லை. இதை நான் சொல்வதற்குக் காரணம் இந்த இளைஞர்கூட பூமிக்கடியில் சில மணி நேரங்கள் தன்னைப் புதைத்துக் கொள்ளலாம் என்பதற்காகத்தான்.

சில சமயங்களில் உயிரியக்கத்தின் எல்லா அறிகுறிகளும் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படும் உணர்வற்ற ஒரு நிலைக்கு மனிதன் புகுகிறான். உணர்வற்ற உடல் இரண்டு கூர்மையான பிளேடுகளுக்கு மத்தியில் கூர்மையான முனைப் பகுதியில் வைக்கப்படுகிறது. ஒரு முனை தோள்பகுதியிலும் மற்றொரு முனை கணுக்கால் பகுதியிலும் வைக்கப்படுகிறது. பின்னர் நூறு கிலோவிற்கும் அதிகமான எடையுள்ள ஒரு பாராங்கல் அவன் மேல் வைக்கப்பட்டு ஒரு உளியால் அது பொடிப் பொடியாகுமளவுக்கு அடிக்கப் படுகிறது. உடலை வெளியே எடுக்கையில் உடலில் ஒரு கீறலோ காயமோ இல்லை. சில சமயங்களில் கூர்மையான அம்புகள் அவனது இதயத்திற்குக் கொஞ்சம் மேலே உடலில் பாய்ச்சப்படுகின்றன. அவை உடலின் மறுபகுதியில் துளைத்துக் கொண்டு வரும். அவனது தொண்டை ஒரு கத்தியால் அறுக்கப்படும். மார்புப்பகுதி ஒரு வாளினால் குத்தப்படும். அந்த ஆயுதங்கள் வெளியே எடுக்கையில் அந்த இடங்களில் சிறிதளவு காயம் கூட இருக்காது. காயங்களிலிருந்து ரத்தத்தை வெளியேற்றவோ அல்லது வெளியேற்றாமலிருக்கவோ அவன் விருப்பப்படி செய்யமுடியும். இந்த அதிசயக் காட்சிகள் பார்ப்பவர்களிடம் ஆச்சரியத்தை ஏற்படுத்தும். ஆனால் இத்தகைய சாகசங்களுக்கும் யோகத்திற்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. யோகி மேலான யோக நிலையை அடைந்துவிட்டான் என்பதற்கு இது சான்று ஆகாது.

உண்மையான யோகியும் இத்தகைய அற்புதங்களை நிகழ்த்த முடியும். ஆனால் போலி யோகிகள் மாயாஜாலத்தால் இத்தகைய நிகழ்ச்சிகளைச் செய்து காண்பிக்கின்றனர். ஒரு உண்மையான யோகி இத்தகைய சாகசங்களை பொதுமக்கள் முன்னிலையில் செய்ய ஒரு பொழுதும் துணியமாட்டான்.

ஒரு சமயம் காசியில் உள்ள சன்யாசிகள் ஒரு யோகியை சோதிக்க விரும்பினர். அந்த நபர் ஸமாதியில் லயித்திருக்கிறார் என்று அறிந்து பிரம்மஞானிக்கு எல்லாம் தெரியும் என்ற சாஸ்திரத்தை அறிந்தே அவரை சோதனை செய்ய முன்வந்தனர். யோகி அதை வெற்றிகரமாக முடித்தார். சன்யாசிகள் அவரை செருப்புத் தைக்கச் சொன்னார்கள். யோகி நூலை வாயில் வைத்துக் கடிப்பது முதலான செயல்களால் தேர்ச்சி பெற்ற செருப்புத் தைப்பவனைப் போலவே செருப்பைத் தைத்துக் காட்டினார். அந்தயோகி அவரது பூர்வாசிரமத்தில் ஒரு செருப்புத் தைப்பவரும் அல்ல, அல்லது செருப்புத் தைப்பதை இவ்வளவு கவனமாகப் பார்த்திருப்பவரும் அல்ல என்பதை இங்கே குறிப்பிட்டாக வேண்டும். "மலத்தின் ருசி எத்தகையது?", என்று அவர்கள் அவரைக் கேட்டனர். "அது வெங்காய ருசி கொண்டது" என்றார் அவர். பிறகு அவர்கள் காட்டிலிருந்து ஒரு மூலிகையைக் கொணர்ந்து அதன் பெயர் மற்றும் உபயோகத்தைக் கேட்டனர். உடனே அந்த யோகி சரியான பதிலைச் சொன்னார். ஸமாதி நிலையை உண்மையில் அடைந்தவர் அனைத்தையும் அறிந்தவர். அதுவும் விளக்கமாகக் கூறவல்லவர் என்பதை உணர்த்தவே இந்த நிகழ்ச்சிகளை இங்கே நான் கூறுகிறேன். அவருக்கு எல்லா மொழிகளும் தெரியும், எந்த மொழியிலும் பேசமுடியும். எந்த மொழியையும் அவரால் புரிந்து கொள்ளமுடியும். எல்லா விஞ்ஞானமும் அவருக்குத் தெரியும். அதனால் தான் உபநிஷதங்களில் "***கஸ்மின்னு பகவோ***

*விக்ஞாதே ஸர்வமிதம் விக்ஞாதம் பவதி'* - "பகவான்! எதை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டதாகிறதோ அது எது?", - என்று சொல்லப்பட்டிருக்கிறது. முக்காலத்தையும் கடந்து, நான்காவதான துரீயத்தையும் அவர் அறிந்ததால் அவருக்கு இறந்த காலம், நிகழ்காலம் மற்றும் எதிர்காலம் தெரியும்.

ஸமாதி யோகத்தின் மிக மேலான பலனாகும். தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்வதன் மூலம், எல்லா தீய பழக்கவழக்கங்களை தவிர்ப்பதன் மூலம், நல்ல பழக்கங்களை வளர்த்துக் கொள்வதன் மூலம், யம, நியம, ஆசன, பிராணாயாம, ப்ரத்யாஹார, தாரணை, தியானத்தை முறையாகப் பயில்வதன் மூலம் சாதகன் ஸமாதி அனுபவத்தைப் பெற முயல்கிறான். அதைத் திரும்பத் திரும்பப் பயில்வதன் மூலம் அது அன்றாட நிகழ்ச்சியாகி விடுகிறது. உள்முகமான ஆனந்தத்தை அனுபவிக்க ஆரம்பிக்கிறான். அதிகாலை வேளைகளில் ஸமாதியைப் பயின்று அதனது அமிருதானுபவத்தைப் பருகி அதன்பின் கீழே வந்து தனது அன்றாட காரியங்களிலும் ஈடுபடுகிறான். அவன் இவ்வாறு முன்னேறுகையில் அவனது ஆயுளையும் நீடிக்கிறான். இப்பூவுலகில் அவன் வாழ்ந்தது போதும் என்று அவன் கருதும்போது இம்மண்ணுலகத்திற்குத் திரும்பியே வராமல் நிரந்தரமாக ஸமாதியில் லயித்துவிடுகிறான். அவனது சுவாசம் மூளை நரம்புகளில் (பிரம்மரந்த்ரம்) அடைபட்டு விடுகிறது. உடல் முற்றிலும் உயிரற்றதாகி விடுகிறது. அதை அப்படியே விட்டுவிட்டால் உடல் படிப்படியாக அழியத் தொடங்கும். அதனால் தான் சில இடங்களில் சன்யாசியின் தலையில் தேங்காயை வைத்து உடைத்து கபாலத்தைப் பிளந்து அதன் பின் பூமிக்கடியில் புதைக்கும் வழக்கம் உள்ளது. ஏனெனில் சன்யாசிகள் ஸமாதியைப் பயில்வது வழக்கம். அவர்களது இறுதி யாத்திரை மஹாஸமாதி அல்லது அனைத்திலும் மேலான ஸமாதி என்று அழைக்கப்படுகிறது.

மனிதனது ஆன்மீக நாட்டத்தில் ஸமாதியே இறுதி நிலை என்பதை வாசகர்கள் மனதில் கொள்ளவேண்டும். கோல்கொண்டா சுரங்கத்தின் செல்வத்தை எவ்விதம் யாரும் கணக்கெடுக்கமுடியாதோ அதுபோல இந்த உயர்ந்த நிலையின் மேலான ஆன்மீகச் செல்வத்தை எவராலும் கணக்கெடுக்க முடியாது. அந்த நிலையில் தினமும் பயிலும் அதிருஷ்டக்கார சாதகன் அதில் மென்மேலும் புகுவதற்கு விரும்புகிறான். அது இறப்பற்ற பெருநிலையாம் அக்ஷய நிலையாகும்.

## 43. ஸமாதி பற்றிய (பிரச்னோத்தரி) கேள்வி - பதில்

### கேள்வி

" நல்ல தியானத்தைப் பெறுவதற்கு அதாவது உள் உலகத்துடன் தொடர்பு கொள்வதற்கு, நீங்கள் ஸமாதியினுள் புகுவதற்கு விரும்பினால், பிறகு உங்கள் சாதாரண உணர்வு எந்தவித மாற்றமும் இன்றி ஒரே மாதிரியாக இருக்கும். அதாவது, தங்களது ஆழ்ந்த தியானத்தில் உயர் உணர்வு உள்ளவர்கள், அதை விட்டு வெளியே வரும்போது முந்திய நிலையைக் காட்டிலும் எப்படி மாறுபட்டவர்கள் என்பது புரியவில்லை".

இந்த வாக்கியம் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை.

ஸமாதி மற்றும் உணர்வின் மேல் நிலைகள் நமது புற மற்றும் அக உணர்வு முழுவதையும் சாதாரணமாக பாதிக்கிறது. ஆழ்ந்த தியானத்திலோ அல்லது ஸமாதியிலோ மேலான உணர்வுடன் தொடர்பு கொள்ளும் ஒருவன் பழைய நபரைப் போன்று இருப்பதில்லை.

இந்த வாக்கியம் உங்களது மேற்சொன்ன கருத்துக்கு மாறானதாக இருக்கிறது.

ஆழ்ந்த தியானமும் ஸமாதியும் ஒருவனது சாதாரண, பொதுவான உணர்வில் நல்லவிதமாக மேலான மாற்றத்தைக் கொண்டு வரவில்லையெனில் அது எதைக் குறிக்கிறது? இந்த அனுபவங்களின் போது வேறு எந்தவிதமான உயர்நிலையும் கிட்டவில்லை, தூக்கம் அல்லது போதை மருந்துகளின் போது ஏற்படும் சுயநினைவின்மையே ஏற்பட்டிருக்கிறது என்பதாகும். சுய மறதி என்பது இயந்திரமயமானது. அதனால் எந்த நிலையிலிருந்து நாம் சுய மறதி நிலைக்குப் போனோமோ திரும்பவும் அதே நிலைக்கு நம்மைக் கொண்டு வந்துவிடும். ஆனால் தியானமும் ஸமாதியும் நன்மை உணர்வின் மேல் மட்ட நிலைகளுக்கு இட்டுச் சென்று நமது ஆளுமையிலேயே நல்ல பல மாற்றங்களை ஏற்படுத்துகிறது.

இந்த விஷயத்தில் விளக்கம் தருமாறு உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன்.

## பதில்

இத்தகைய சந்தேகங்களும் மாறுபட்ட கருத்துக்களும் வரக் காரணம் 'ஸமாதி' என்பதை பரவலாகப் பயன்படுத்துவ தால்தான். யோக நூல்களில் கூட இந்த 'ஸமாதி' என்ற வார்த்தை சில சமயங்களில் இரண்டு வெவ்வேறு விதங்களில் பயன்படுத்தப்படுகிறது.

அதனது மிக மேலான கருத்தில் பயன்படுத்தப்படுகையில் முனிவர் பெறும் பரமானுபவம் அல்லது மிக உயர்ந்த மேலான உணர்வைக் குறிக்கிறது. கீழான பொது நோக்கில் சொல்லப்படுகையில் ஸமாதி என்னும் வார்த்தை தொடர்ந்த இடைவெளியற்ற ஆழ்ந்த தியானம் அல்லது தியானிக்கப்படும் பொருளில் தியானிப்பவரின் குறிப்பிட்ட

காலத்திற்கு முழு தன்மயமாவதையே குறிக்கிறது. அதாவது, தியானிக்கப்படும் பொருள் (ஸஹஸ்ராரம் நீங்கலாக வேறு) ஏதாவது உள் சக்கரங்கள் (சக்தி கேந்திரங்கள்) அல்லது (ஆத்மன் தவிர்த்த) கீழ்நிலையில் உள்ள தத்துவங்களாக இருந்தால், பெறப்படும் ஸமாதி தன்னை மறந்த உயர் நிலை உணர்வாகாது. உண்மையில் இந்த நிலை வெறும் தூக்கமோ அல்லது சுயமறதி நிலையோ அல்ல, ஆனாலும் இந்த ஸமாதிகள் உயர்ந்த பரமானுபவமும் அல்ல. உதாரணமாக ஹடயோக ப்ரதீபிகாவின் விளக்கவுரையில் ஸமாதியின் ஒரு அளவு என்பது இவ்வளவு நேரம் என்ற கணக்கு இருக்கிறது. அந்த அளவுக்கு தியானிப்பவர் இடைவெளியற்ற ஆழ்ந்த தியானத்தைப் பெற்று விளங்கினால். அவரை 'ஸமாதி' நிலையில் உள்ளவராகக் கருதலாம். இந்தப் பொருளில் கண்டால், அது அபரோக்ஷ அனுபூதி அல்லது ஆத்மஞானம் அடைவதைக் குறிக்காது. அது ஒன்றுதான் ஒருவரை உண்மையாக மாற்றி அமைக்கும்.

இந்த விஷயத்தில் ஏற்படும் குழப்பத்திற்கான காரணத்தை இது தெளிவுபடுத்துகிறது. மேலே கூறிய கணக்குப்படி, ஒரு யோகி அல்லது சாதகன் ஸமாதி வரை போகும் ஆழ்ந்த தியான நிலையை அடைந்தால்கூட உண்மையில் ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்றவராகக் கருத முடியாது. இந்த விஷயத்தில் அவரது முழு உணர்விலும் பூரணமாற்றத்தைக் காணமுடியாது. ஆனால் அந்தயோகி (தாரணை, தியானம், ஸமாதியை தொடர்ந்து பயிலுவதன் மூலம்) மாயை அல்லது ஆவரணத்தின் திரையைக் கிழித்து, மிக மேலான ஆத்மானுபவத்தைப் பெறுகையில், "சாதாரண உணர்வு மாறாமல் எப்பொழுதும் ஒரேபோல இருக்கும்" என்று சொல்வது தவறாகும். ஆழ்ந்த ஸமாதியில் மிக உயர்ந்த அனுபவத்தைப் பெறும் யோகி பழைய நபர் அல்ல. அவர் திரும்ப வருகையில் ஒளி படைத்த நபராக வருகிறார். அதற்காக அவர் புதுவிதத்தில் புதிய நபராக நடந்து

கொள்வார் என்று எதிர்பார்க்கக் கூடாது. ஆனால் அவரது மொத்த சாதாரண உணர்வில் ஒரு குறிப்பிடத்தக்க மாற்றம் இருக்கத்தான் செய்யும். இது அவருடன் தொடர்புகொள்ளும் அனைவராலும் உணரப்படமுடியாமல் இருக்கலாம். இருப்பினும் அவரது பொது உணர்வில் குறிப்பிடத்தக்க மாற்றம் நிச்சயம் இருக்கும்.

உயர் மட்ட பொருளில் ஸமாதி என்பது தூக்கமோ அல்லது சுய மறதியோ அல்ல. அது புலன்கடந்த சக்திவாய்ந்த ஆத்மபோதமாகும். அதிலிருந்து கீழே வருபவர் முன்பு போலவே சாதாரண வாழ்க்கை வாழலாம், சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு எந்தவிதமான குறிப்பிடத்தக்க மாற்றமும் தென்படாமல் இருக்கலாம். ஆனால் அவரது உணர்வில் மாற்றம் இருக்கிறது என்பது மறுப்பதற்கில்லை. அவரது ஆளுமையில் பெரிய மாற்றம் இருக்கும்.

## கேள்வி

ஸமாதி பயில்பவர் அதை தனது புற உணர்வு முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்தவில்லையாயின் அது வீண்தானே! கங்கையில் குளிப்பவர் குளிக்கும்பொழுது சரியாக இருந்தாலும், குளித்தபின் அவருக்காக அவரது பழைய அழுக்கான உடைகள் கரையில் காத்திருக்கின்றனவே! இது தான் நிலைமையா?

## பதில்

புற உணர்வில் முன்னேற்றம் இருந்தாலொழிய ஸமாதி பயனற்றது. ஹடயோகியின் ஜட அவஸ்தையும் ஸமாதியின் கீழ்நிலைகளும் சரியாயிருக்கலாம். இங்கே யோகி மேலான பிரம்மஞானம் அல்லது பரம கைவல்யத்தை அடைய

வில்லை. ஆனால் மேலான அத்வைத நிர்விகல்ப அல்லது நிர்பீஜ அஸம்ப்ரக்ஞாத ஸமாதியுடன் ஒப்பிடுகையில் இந்தக் கருத்து தவறாகும். இதில் நிலைபெறும் ஒருவர் மாறிய நபராக ஆகிறார். அவரது அக மற்றும் புற உணர்வு உயர்வடைகிறது. நிர்விகல்பஸமாதியை அடைகையில், புற உணர்விலும் கூடவே முன்னேற்றம் நிகழ்கிறது. ஸஹஜ அவஸ்தையில் உள்ள ஜீவன்முக்தரின் நிலை இது. கிழிசல் துணியில் சுற்றியிருந்தாலும் தங்கம் தங்கம் தானே. ஒரு முனிவரின் பூரண உணர்வு சாதாரண விவகார உலகிற்கு இறங்கி வரும் போதும் மாறாமல் மங்காமல் அப்படியே இருக்கும். அது பாதிக்கப்படவில்லை. விழிப்பு நிலையில் விவகாரத்தில் புகுவதால் ஸஹஜ அவஸ்தையில் உள்ள முனிவரின் நிலையை சிறிதும் பாதிக்காது.

ஸமாதியை அடைவது வீண்போகாது, பயனற்றதுமல்ல. மனித குலத்திற்கு ஒருவன் செய்யும் மிகப் பெரிய நன்மை ஆத்மபோதம் அல்லது ஆன்மீக பூரணத்துவத்தை அடைவதேயாகும். இதனால் அவன் பூவுலகில் உள்ள மனிதகுலத்தின் ஒட்டுமொத்த முன்னேற்றத்திற்கு பெருமளவில் நலம் செய்தவனாகிறான்.

இந்த உயர்ந்த மேலான அந்தர்முக உணர்வானது உண்மையிலேயே பயனுடையதாக இருக்க வேண்டுமானால், இந்த ஸமாதி நிலை மனித குலத்தின் நன்மைக்காக புறத்தே வெளிப்படுத்தப்பட வேண்டும் என்பது சிலரது கருத்து. இது கேள்விக்குரிய பிரச்சினையாகும். ஒரு துறவி ஸமாதியில் நிலைபெறும்போது, இதைத் தொடர்ந்து அவரது புற உணர்வு முன்னேற்றமும் தானாகவே அமைகிறது. உள் பூரணத்துவம் புற உணர்வு மாற்றமாக வெளிப்படாமல் இருக்க முடியாது. பிறகு ஒரு நிலையில் அக மற்றும் புற உணர்வுகள் இரண்டும் எந்தவித வேறுபாடும் இன்றி ஒன்றாகவே ஆகிவிடுகின்றன. இதுவே ஸஹஜஸமாதி நிலை.

கங்கையில் குளிப்பவர் பற்றிய எடுத்துக்காட்டு பொருத்தமானதாகத் தோன்றவில்லை. இந்த அனுபவம் ஒரு இரும்புத் துண்டு தொட்டதெல்லாம் பொன்னாக்கும் ஸ்பர்சவேதிக் கல்லுடன் தொடர்பு கொள்ளுவதைப் போன்றதாகும். விளைவு முக்கியம், நிரந்தரமானது. யோகியின் சில குணாதிசயங்கள் மற்றவர்களுடன் பழகுகையில் சாதாரணமானதாகத் தோன்றலாம். ஆனால் இவை எதுவும் அவரது உயர்ந்த ஆன்மீக அனுபவத்தைச் சிறிதும் பாதிக்கமாட்டா.

இந்த பேரனுபவத்தின் உயர்நிலை ஒவ்வொருவரும் அவரவர் வாழ்வில் அனுபவித்து உணர வேண்டியதாகும். வாழ்வின் உண்மையான இலட்சியமும் இதுவே. பூரண வைராக்கியமும், தீவிர ஆன்மீக சாதனையுமே ஆத்மானுபூதியை அளிக்கவல்லது.

அத்யாயம் ஐந்து

# சில யோக அனுபவங்கள்

## 44. ஒரு யோகியின் அனுபவம்

மண், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களிலிருந்து தோன்றி ஐவகை யோகத்தன்மையில், யோகி யோகத்தீயால் உறுதியான உடலைப் பெறுகிறான். எனவே நோய், மூப்பு, மரணம் ஆகியவற்றால் பாதிக்கப்படமாட்டான்.

மண்ணின் மணம், நீரின் ருசி, தீயின் உருவம், காற்றின் ஸ்பர்சம், ஆகாயத்தின் ஒலி ஆகியவை யோக குணம். மூக்கு நுனியில் மனத்தை லயிப்பதால் யோகி திவ்ய கந்தத்தை அனுபவிக்கிறான்; நாக்கு நுனியில் மனத்தை லயிப்பதால் அவன் தெய்வீக ருசியை அனுபவிக்கிறான்; மேலண்ணத்தின் நுனியில் மனத்தை லயிப்பதால் தெய்வீக ருசியையும் தெய்வீக நிறத்தையும், நாக்கின் மத்தியில் மனதை லயிப்பதால் தெய்வீக ஸ்பர்சத்தையும், தெய்வீக ஒலியையும் அவன் அனுபவிக்கிறான். மனமானது புறப்பொருள்களால் ஈர்க்கப்படாததால் இந்த தெய்வீக அனுபவங்களால் அது நிலை நிறுத்தப்படுகிறது.

பிராணாயாமம், மன ஒருமைப்பாடு மற்றும் யோகக் கிரியைகளால் யோக வஜ்ரம் போன்ற உடலைப் பெறுகிறான். அவன் விரும்பும் வரை அவனால் அதை நீட்டித்து வைத்திருக்க முடியும். மகாராஷ்டிர யோகி சங்தேவ் அவரது உடலை 1400 வருடங்கள் வைத்திருந்தார்.

## 45. நான்கு வகை யோகிகள்

யோகிகள் நால்வகைப்படுவர். 1. ப்ரதமகல்பிக : இவன் ஒரு ஆரம்பசாதகன். விளக்கு இப்பொழுதுதான் ஒளிவிடத்

தொடங்கியுள்ளது. எந்த வித சித்துவும் அவனுக்குத் தெரியாது. அவன் ஸவிதர்க்க ஸமாதியைப் பயிலுகிறான் 2. மது பூமிகா : நிர்விதர்க்க ஸமாதியில் புகுந்து நிதம்பரப்ரக்ஞையை அடைந்தவன் (உள் ஒலி). தேன் தரும் திருப்தியை போல இது திருப்தி அளிப்பதால் இந்நிலை மதுமதி என்று அழைக்கப்படுகிறது.

3. பிரக்ஞா ஜ்யோதி : மூலகங்கள் மற்றும் புலன்களில் வெற்றி கண்ட யோகி. இந்த யோகி தேவர்களாலும் கூட தாண்டப்பட முடியாதவன் அவன். மதுப்ரதீகா என்னும் நிலையை அடைந்தவனாகிறான். 4. அதிக்ராந்த பாவனீய இந்த யோகி விசோக, ஸம்ஸ்கார சேக்ஷ ஆகிய நிலைகளை அடைகிறான். அவன் முழு சுதந்திரம் அல்லது கைவல்யத்தை அடைந்தவன் ஆவான்.

ராஜயோகி எல்லா சித்துக்களையும் சம்யமம் இன்றி ப்ரதிபாவினால் மட்டுமே அடையமுடியும் (தூய்மையின் மூலம் தானாகவே உதிக்கும்). புருஷன், பிரகிருதி இரண்டிற்குமிடையேயுள்ள வேறுபாட்டை உணர்ந்து விவேக க்யாதியின் மூலம் அடையப்படும் மேலான தெளிவே ப்ரசங்க்யானம் ஆகும்.

ஞானம் அல்லது ஆத்மானுபூதி அடைவதற்கு சித்துக்கள் நேரிடை தடையை உண்டாக்குகின்றன. இலட்சியத்தை நோக்கிய சாதகனின் பயணத்தை அவை இடையூறு செய்கின்றன. அவை பூரண பற்றின்மையை உண்டாக்குவதில்லை. அதனால் தான் ராஜயோக ஆசிரியரான பதஞ்ஜலி மகிரிஷி திரும்பத் திரும்ப யோக சாதகன் சித்துக்களைப் பெறவேண்டும் என்ற ஆசையை அறவே அழிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறார். சித்துக்களின் பின் அவன் போனால், ஒரு பெரும் சுழலில் அவன் சிக்குறுவான், அதிலிருந்து மீள்வது என்பது முடியாத

காரியமாய்விடும். அந்த சக்தியை அவன் துஷ்ப்ரயோகம் செய்து பயங்கர வீழ்ச்சியுற நேரிடும்.

மனமானது முழுக்கவும் தூய்மைப்படுத்தப்பட வேண்டும். அப்பொழுதுதான் தெய்வீக ஒளியைப் பெறுவதற்கான தகுதி அவனுக்கு வரும். மனதிற்கு அப்பாற்பட்ட அவனது புதிய பரந்த அனுபவத்தை ஒரே வீச்சில் பெறும் பிரபஞ்ச தரிசனத்தின் அழுத்தத்தைத் தாங்கும் ஆற்றல் அவனிடம் இருத்தல்வேண்டும். எனவே தெய்வீக ஒளி இறங்குவதில் சிறிது தாமதம் ஏற்பட்டாலும் பொறுமையாக காத்திருங்கள். தூய்மை, ஆற்றலில் வளருங்கள்.

## 46. ஸோமபானம்

### அம்ருத ஸ்ரவம்

ஸம்ஸ்கிருதத்தில் ஸோம என்பது சந்திரனைக் குறிக்கிறது. சந்திரனிலிருந்து வரும் அமிருதத்தைக் குடிப்பது ஸோமபானமாகும். மண்டையோட்டின் கீழ்ப்பகுதியில் மேலண்ணத்தின் அடியில் ஸோமரஸம் அல்லது குளிர்ந்த அமிருதம் உள்ளது. இந்த ரசத்தின் ருசி மிகவும் விரும்பத்தக்கது. பயிற்சியின் போது பல்வகையான ரஸங்கள் உண்டாகின்றன. ஒருவன் புதிய உணர்ச்சிகளைப் பெறுகிறான். முதலில் உவர்ப்பு ருசியை ஒருவன் பெறுகிறான். பிறகு காரருசி, பின் கசப்பு, பின் துவர்ப்பு பயிற்சி தொடருகையில் அவன் மோர், பால், நெய், தயிர், தேன், பதனீர், கடைசியில் அமிருதத்தின் ருசியைப் பெறுகிறான். கடைசி ஒன்றை உலகப் பொருள்கள் எதனுடனும் ஒப்பிடமுடியாது என்பதால் அதன் ருசியை விவரிக்கமுடியாது. எனவே அது அமிருதம் எனப்படுகிறது. நாக்கினை மெல் மேலண்ணத்தில் அடியில் வைப்பதன்மூலம் இந்த அமிருதம் ருசிக்கப்படுகிறது. அதிக பலனைப் பெற விரும்பினால் ஒருவன் தினமும் நாக்கை

நீட்டும் பயிற்சியில் ஈடுபட வேண்டும். பிறகு அது மடிக்கப்பட்டு மேலண்ணத்தின் அடியில் சுவாசத்தை அடக்கி மனத்தை ஒருமைப்படுத்தி வைக்கப்படுகிறது. இது 'நாபோ முத்திரை' எனப்படுகிறது. நாக்கு மேலண்ணத்தின் துவாரத்தில் புகும்பொழுது உடலில் அதிகமான சூடு உண்டாகிறது. இதன் விளைவு மேலண்ணத்தின் அடியிலிருந்து அமிருத தாரை பெருகுகிறது. இந்த திரவம் அமரவாஹினி எனப்படுகிறது.

ஸோம பானம் பருகுவதன் நன்மையை 'ஹடயோக ப்ரதீபிகா' வின் மூன்றாவது அத்யாயத்தின் 45வது சுலோகம் தெரிவிக்கிறது.

"மேலண்ணத்தின் அடியிலிருந்து பெருகும் அமிருதத்தால் நிரம்பிய உடலைக் கொண்ட யோகியை தக்ஷகன் பாம்பு கடித்தாலும் அந்த விஷம் அவனது உடலில் பரவாது". விஷம் அவனை ஒன்றும் செய்யாது.

"விறகு இருக்கும் வரை எப்படித் தீ அணையாதோ, எண்ணையும் திரியும் இருக்கும் வரை விளக்கின் ஒளி அணையாதோ அது போல சோம ரசத்தால் புத்துயிரூட்டப்பட்ட உடலில் ஜீவன் தங்கி இருக்கும். (H.P. 111 சுலோகம் 46)

"விபரீதகரணி முத்திரை பயிற்சியால் நாக்கைப் பின்னால் மடித்து மேலண்ணத் துவாரத்தை அடைத்து குண்டலினி சக்தியை தியானித்து தொண்டைப் பகுதியில் விசுத்த சக்கரத்தில் இருக்கும் 16 இதழ் கொண்ட தாமரையினுள் பெருகும் சோமரஸத்தை எவன் பருகுகிறானோ, அவன் எல்லா நோய்களிலிருந்தும் விடுபட்டு தாமரை இலைத் தண்டுபோல மிருதுவான உடலுடன் நெடுநாள் வாழ்கிறான்".

மேலண்ணத்தின் அடியில் சோமன் உள்ளது. சோம ரஸம் பாயும் போது நாபிஸ்தலத்தில் உள்ள சூரியனால் அது காய்ந்துபோகிறது இதைக் கட்டுப்படுத்துவதற்காக விபரீத கரணி பயிலப்படுகிறது.

விபரீத கரணி முத்திரை ஸர்வாங்காசனத்தைப் போன்றது. ஸர்வாங்காசனத்திற்கும் விபரீதகரணிக்கும் இடையில் உள்ள வேறுபாடு இதுதான்: ஸர்வாங்காசனத்தில் முகவாய்க் கட்டை மார்புடன் சேர்த்து அழுத்தப்படுகிறது. கழுத்திலிருந்து உடல் நேராக வைக்கப்படுகிறது. விபரீதகரணியில் கழுத்தில் அழுத்தம் கொடுக்கப் படுவதில்லை. தலையை தரையில் வையுங்கள். கால்களை மேலே தூக்குங்கள். கைகளை தரையில் வைத்திருங்கள். நிலையாயிருங்கள். இது தான் விபரீதகரணி. இது வயிற்றுப்புறத்தில் சூரிய மண்டலத்தில் அமிருதம் காய்ந்து போகாமலிருக்க உதவுகிறது.

நாபோ முத்திரையும், விபரீத கரணியும் செய்வதற்கு மிகவும் எளிதானவை. விபரீதக்ரணி மாலையில் செய்யப்படுவதில்லை.

## யோகி அமிருதத்தைப் பருகுகிறார்

தொப்பிளுக்குக் கீழே நெருப்புப் பகுதியான அக்னி மண்டலம் இருக்கிறது. இதயப் பகுதியில் சூரிய மண்டலம் உள்ளது. தலைப்பகுதியில் சந்திரமண்டலம் இருக்கிறது.

யோகியின் மூளையிலிருந்து சந்திர மண்டலத்திலிருந்து அமிருதம் பெருமளவில் பெருகுகிறது. அதை யோகி தன்னுள் உட்கிரகித்து வேறு எந்த உணவோ பானமோ ஏற்காமல் வெகுகாலம் ஜீவித்திருக்கிறார்.

தலையில் உள்ள சந்திரமண்டலத்திலிருந்து பெருகும் அமிருதம் வயிற்றுப்புறத்தில் உள்ள அக்கினி மண்டலத்தால்

ஏற்கப்படுகிறது. ஸர்வாங்காசனம், விபரீதகரணி இரண்டையும் செய்துவந்தால் உடல் முழுவதும் நன்கு போஷிக்கப்படுகிறது. ஒருவனுக்கு நீண்ட ஆயுள் கிட்டுகிறது. அக்னி மண்டலம் மேல்முகமாகிறது. தீ அமிருதத்தை ஏற்கமுடியாது.

## 47. ஒரு பக்தனின் அனுபவம்

இரவும் பகலும் வேட்கையுள்ள பக்தனின் இதயத்தில் தெய்வீக அன்பின் சுடர் எரிந்துகொண்டே இருக்கிறது. பக்தன் தனது உணவு மற்றும் பானத்தைப் பற்றிக் கவலைப்படுவதே கிடையாது. அவர் வாடி இருக்கிறார். பகவானைப் பிரிந்த ஏக்கத்தில் அவர் தவிக்கிறார். இரவில் அவர் உறங்குவது கிடையாது. பகவான் அவருக்கு எப்பொழுது தரிசனம் கொடுப்பார் என்பது அவருக்குத் தெரியாது. எனவே அவர் இரவு முழுவதும் விழித்திருக்கிறார். உலகோரின் கருத்துக்களைப் பற்றி அவர் கணக்கில் கொள்வதே கிடையாது. பகவான்பால் அவர் அன்பைப் பொழிகிறார்.

சில சமயங்களில் பகவானைப் பிரிய முடியாது பக்தன் பெரிதும் ஏங்குகிறான். அடுப்பில் சூடான வாணலியில் அவன் வறுக்கப்படுவதைப் போல உணருகிறான். உடனே தெய்வீக அமிருதம் சொட்டுகிறது. உடனே கங்கையில் குளிர்ந்த நீரில் குளிப்பதைப் போல உணருகிறான்.

பகவானிடமிருந்து ஒரு வினாடி கூட பக்தனால் பிரிந்திருக்க முடியாது. ஒரு வினாடி கூட அவனுக்கு ஒரு வருடம் போலத் தோன்றுகிறது. இந்த உணர்வு வருகையில் அவனது கண்கள் வெறுமையாகி முகம் வெளிறிப் போகிறது. இதயத்தில் ஒரு எரியும் உணர்ச்சி இருக்கிறது. பக்தனுக்கு இருப்புக் கொள்வதில்லை. அவன் கண்ணீர் பெருக்குகிறான். பிறகு அவனது தாகம் சிறிது தணிகிறது.

கடவுளின் சாந்நித்தியத்தை பக்தன் உணருகையில் ஏற்படும் தெய்வீகப் பேரானந்த நிலை ரஸம் எனப்படுகிறது. ரஸத்தின் முக்கிய அடிப்படையே 'பாவம்' தான். அது பகவானுடைய ஆனந்த அம்சமாகும். அது ஜீவாத்மனிடம் சூக்ஷ்மமாக அடங்கிய வடிவில் இருக்கிறது. ரஸத்தின் காரணம் விபவம். ரஸத்தின் விளைவு அனுபவம் ஸாத்விக பாவத்தின் வெளிப்பாடுகளான மெய்சிலிர்த்தல், தன்னை மறத்தல் போன்றவை ரஸத்தின் குறிப்பிட்ட விளைவுகளாகும்.

தூய 'சித்' தே 'பாவ'த்தின் தன்மையும் சாரமுமாகும். பக்தியை தொடர்ந்து செய்வதால் பக்தனின் மனம் தூய 'சித்' நிலைக்கு வந்து விடுகிறது. ஸ்தம்பனம் (தன்வயமிழத்தல்), ஸ்வேதம் (வியர்த்தல்), ரோமாஞ்சம் (மயிர்க் கூச்செறிதல்), ஸ்வரபங்கம் (குரல் கரகரத்தல்), வேபது (நடுக்கம்), வைவர்ண்யம் (நிறம் மாறுதல்), அச்ரு (கண்ணீர் பெருகுதல்), ப்ரளயம் (உணர்வற்றுப் போதல்) ஆகியவையே எட்டு ஸாத்விக பாவங்களாகும்.

## உள் ஒலி

தனது மனத்தை நிலைநிறுத்தி உள் ஒலியைக் கேட்டு உள் பதிலைக் கேட்பார் என்று ஐன்ஸ்டீன் சொன்னார். கேட்டல் என்பது ஓய்வு நிலையேயன்றி இறுக்கமல்ல. அது தூக்கநிலை போன்றது. ஆனாலும் தூக்கத்திலிருந்து அது வெகுவாக அகன்ற நிலை உணர்வு மனம் ஓரளவு மூழ்கடிக்கப்படுகிறது. முயற்சி மிகவும் குறைந்த நிலைக்கு தள்ளப்படுகிறது. மனத்தின் கட்டுப்படுத்தப்பட்ட அடங்கிய நிலை அது. மொஸார்த் போன்ற பெரும் பாடகர்கள் எல்லாம் அவர்களது உள் ஒலியைக் கேட்டனர். தான் செய்த பெரும் படைப்புகள் யாவும் இறைவனை நினைந்து அவரது சாந்நித்தியத்தில் உள் ஒலியைக் கேட்டு

எழுதியவையேயாகும் என்கிறார். இதை அவர் 'உள் அதிர்வுகள்' என்று குறிப்பிடுகிறார்.

## 48. ஆன்மீக விழிப்பு நிலை

ஒருவன் அனுபவிக்கும் வரையில் பிரம்மஞானம் அல்லது பேருணர்வு நிலை புரியாத ஒன்றாக இருக்கிறது.

ஜீவாத்மன் பரமாத்மனுடன் ஒன்றிக்கும் நிர்விகல்ப ஸமாதியே விழிப்புணர்வு நிலையாகும்.

நிர்வாணம், கிறிஸ்து உணர்வு, பேரின்பம் அல்லது பிரபஞ்ச உணர்வு அது.

மொழி அபூர்ணமானது, எல்லைக்குட்பட்டது என்பதால் இந்த விழிப்புணர்வு நிலையை வார்த்தைகளால் விளக்கமுடியாது.

மனமும் புலன்களும் செயல்படாது போகும் உன்னத நிலை அது உள்ளுணர்வு; ஸமாதியின் மூலம் யோகி நேரடியாக அதை உணர வேண்டும்.

மரணபயம் இல்லாதவன் உள்ஒளியைப் பெறத் தகுதியானவன்

அவன்தான் உணர்வு கடந்த பெரு நிலையை அடைவான்.

கூரிய, சூக்ஷ்மமான அறிவு, நல்ல உடல் அமைப்பு, நல்ல ஆரோக்கியம், விவேகம், வைராக்கியம், அமைதி, முக்திக்கான வேட்கை அனைத்தும் ஸமாதியில் புகவிரும்பும் சாதகனிடம் இருக்கவேண்டும்.

பரஞானத்தைப் பெறுவதற்காக தன்வாழ்வை அர்ப் பணிக்கும் சாதகன் நான்குவகை சாதனையைப் பயில வேண்டும்.

தியான வாழ்க்கை என்பது நேரான குறுகிய கத்தி முனைப் பாதையாகும். சாதகனை வழி நடத்த அவனது நம்பிக்கை ஒன்றே ஒளியாகும். குருவருள், திருவருள், பக்தி தவிர வேறு கதியே கிடையாது.

பாதை தெளிவாகத் தெரியாது, போவது உறுதியல்ல, குழிகள் வழியில் காத்திருக்கின்றன. சாதகன் இருளில் நடக்க வேண்டும். இருளில் நடக்க டார்ச் விளக்கையே, பகுத்தறிவின் துணையையோ வேண்டி அவன் கத்தக்கூடாது. பாதையின் முடிவில் அவனுக்காகக் காத்திருக்கும் பேரொளியை அடைந்துவிடுவோம் என்ற நம்பிக்கையுடன் அவன் நிதானமாக தளராது தன் பயணத்தைத் தொடரவேண்டும். அது வாழ்வின் விதி. அதை விளக்க முடியாது. உணரத்தான் முடியும்.

பேருணர்வு நிலையை அடைவது கடினம். முதல் தர சாதகனுக்கு அது ஒரு நிமிடத்திலும் வரலாம். அல்லது ஆறுமாதத்திலும் வரலாம். பல வருடங்கள் ஆகலாம். பல பிறவிகள் ஆகலாம். தளர்ச்சி அடையாதீர்கள். முன்னேறுங் கள், அத்யாத்மிக வீரர்களே!

நால்வகை கட்டுப்பாடு மூலம் உண்மையை நாடும் சாதகர் உலகின்பால் ஒரு வைராக்கியத்தை வளர்க்கிறார்.

உள் ஒளி அல்லது பேருணர்வு நிலையை அடைந்தவர் அனைத்து வகை பயத்திலிருந்தும் விடுபட்டவராகிறார். அவர் புதிய பிறவி எடுக்கிறார். அவர் இறைமனிதனாக மாறுகிறார். அவருக்கு இரட்டை உணர்வு உள்ளது. அவர் பிரம்மனில் லயிக்கிறார். அவர் உலகை தன்னுள்ளேயே காண்கிறார், உலக க்ஷேமத்திற்காக வாழ்கிறார்.

விழிப்புணர்வு பெற்ற முனிவரது பார்வையே மாறிவிடுகிறது. அவருக்கு அன்னியமாக எதுவுமே

கிடையாது. முழு பிரபஞ்சத்தையும் அவர் தன்னுள்ளேயே காண்கிறார். ஞானதிருஷ்டி அவரிடம் உதித்துவிடுகிறது.

ஞானம் பெற்றவர் பேச்சற்றவர் ஆகிறார். அவரது அனுபவத்தை அவரால் விளக்க முடிவதில்லை. மௌனத்தின் மூலம் அவர் மக்களது ஐயங்களை அகற்றுகிறார்.

அவரது உடல் எந்தச் செயலில் ஈடுபட்டிருந்தாலும் முனிவர் தமது ஆத்மபோதத்தை மறப்பதில்லை. அவித்யை அல்லது அறியாமையின் எஞ்சிய சிறுபகுதி அவரது உடல் மற்றும் மனத்தின் வேலைகளைக் கவனிக்கிறது. ஆனால் அம்முனிவர் தன்னை அதனுடன் சம்பந்தப்படுத்துவது இல்லை. வேரிழந்த மரம்போல அதுவும் விரைவில் இல்லாது போகிறது.

அவர் எதுவும் வாய் திறந்து பேசாவிட்டாலும் அவரது முன்னிலையில் மக்கள் தாங்கள் ஒரு இறை மனிதரின் முன் இருப்பதாக உணர்கின்றனர். அவரது முகம் தேவதூதனைப் போல் ஒளிர்கிறது. அது ஒளி, மகிழ்ச்சி மற்றும் அமைதியை பரப்புகிறது. அவரது கண்கள் பிரகாசமாயிருக்கின்றன. அவரது பேச்சு இனிமையும் ஊக்கமும் பொருந்தி இருக்கின்றன.

ஞானம் அடைந்த துறவியிடம் செல்வமோ சொத்தோ கிடையாது. அவரிடம் பங்களாக்களோ காரோ இல்லாவிடினும் அவர் தமது ஞானம் மற்றும் ஆன்ம சக்தியால் உலகம் முழுவதையும் தன்பால் ஈர்க்கிறார். ஒரு அற்புதமான ஆன்மீக காந்தம். அவரது ஆன்மீகச் செல்வம் அழியாதது. இத்தகைய ஞானியின் புகழ் ஓங்குக!

அத்யாயம் ஆறு

# குண்டலினி சக்தி

அன்னை குண்டலினியே! எழுக!

பிரம்மானந்தமே, அழியா ஆனந்தமே உனது இயற்கை நிலை. மூலாதாரத்தில் சர்ப்பத்தைப் போல உறங்கும் நிலையில் இருப்பவள் நீ. நான் என் உடல், மனத்தில் பாதிக்கப்பட்டு உள்ளேன். பிரபஞ்சத்தின் ஸ்வயம்பூவான சிவனின் துணைவியே! மூலத் தாமரையிலிருந்து எழுந்து நீ என்னை ஆசீர்வதிப்பாயாக!

ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆஜ்ஞையின் வழியாக நீ மத்தியில் உள்ள வழி மூலம் மேல் நோக்கி வருவாயாக.

மூளையில் ஆயிரம் இதழ் தாமரையாக ஸஹஸ்ராரத்தில் உன் நாதனான சிவனுடன் நீ இணைவாயாக.

சச்சிதானந்த ரூபியான அன்னையே! அங்கே நீ சுதந்திரமாக விளையாடுவாயாக.

அன்னை குண்டலினியே! எழுக! எழுக!

## 50. குண்டலினி எழுகையில் தோன்றும் அனுபவங்கள்

தியானத்தின்பொழுது நீங்கள் தெய்வீகக் காட்சிகளைக் காண்கிறீர்கள். தெய்வீக வாசனையை முகர்கிறீர்கள் தெய்வீகருசி, தெய்வீக ஸ்பர்சம், தெய்வீக அனாஹத ஒலிகளைக் கேட்டல் போன்ற பல்வேறு அனுபவங்களைப் பெறுகின்றீர்கள். கடவுளிடமிருந்து உங்களுக்கு அறிவுரைகள் வருகின்றன. இவையெல்லாம் குண்டலினி சக்தி எழுப்பியதைக் குறிக்கின்றன. மூலாதாரத்தில் துடிப்பு

இருக்கும் பொழுது, மயிர்க் கூச்செறியும் பொழுது, உட்டியான, ஜலந்தரம், மூலபந்தம் தாமே வருகையில் குண்டலினி எழுந்துவிட்டது என்பதை உணருங்கள்.

எந்த முயற்சியும் இல்லாமல் சுவாசம் தானே நிற்கிறதோ, எந்த சிரமமும் இன்றி கேவல கும்பகம் தானே வருகிறதோ அப்பொழுது குண்டலினி சக்தி செயல்படுகிறது என்பதை உணருங்கள். ஸஹஸ்ராரத்திற்கு பிராணசக்தி எழுகையில், நீங்கள் ஆனந்தத்தை அனுபவிக்கும் பொழுது, தானாகவே நீங்கள் ஓம் எனும் மந்திரத்தை ஜபிக்கிறீர்களோ, மனத்தில் உலக எண்ணங்களே எப்பொழுது இல்லையோ அப்பொழுது குண்டலினி சக்தி எழும்பிவிட்டது என்பதை உணருங்கள்.

உங்கள் தியானத்தின் பொழுது இருபுருவங்களுக்கு மிடையில் உள்ள திரிபுடியில் கண்கள் நிலைபெற்றால், சாம்பவி முத்திரை செயல்படுகையில் குண்டலினி செயல்படுவதாக உணருங்கள். உங்களது சரீரத்தினுள் பல பாகங்களில் மின் அதிர்வுகள் ஏற்படுகையில், பிராண அலைவுகள் உள்ளுறுப்புகளில் நிகழ்கையில் குண்டலினி செயல்படுவதாக உணருங்கள். தியானத்தின் பொழுது உடலே இல்லாதது போன்ற உணர்வு உங்களுக்கு ஏற்படும்பொழுது, உங்கள் கண் இமைகள் மூடி நீங்கள் முயற்சித்தால் கூட அவற்றைத் திறக்க முடியவில்லையோ, நரம்புகள் வழியாக மின்சார அலைள் மேலும் கீழும் பாய்கின்றனவோ அப்பொழுது குண்டலினி செயல் படுவதாக உணருங்கள்.

நீங்கள் தியானம் செய்கையில், உத்வேகமும் உள்ளுணர்வும் பெறுகையில், இயற்கை அதன் ரகசியங்களை உங்களுக்குத் தெரிவிக்கையில், எப்பொழுது உங்களது ஐயங்கள் அகலுகின்றனவோ, வேத ரகசியங்களை நீங்கள் எப்பொழுது தெளிவாக புரிந்து கொள்கின்றீர்களோ

அப்பொழுது குண்டலினி செயல் படுகிறது என உணருங்கள். உங்களது உடல் காற்றைப் போல லேசாகும் பொழுது, குழப்பமான நிலைமைகளில் உங்கள் மனம் சமநிலையில் இருக்கும்பொழுது, உங்களிடம் வேலை செய்ய அபரிமிதமான சக்தி இருக்கும் பொழுது குண்டலினி செயல்படுகிறது என தெரிந்து கொள்ளுங்கள்.

தெய்வீக உத்வேகம் உங்களிடம் வருகையில், சொற்பொழிவு செய்யும் ஆற்றல் உங்களிடம் வருகையில் குண்டலினி செயல்படுவதாக உணருங்கள். பல்வேறு ஆசனங்கள் மற்றும் யோக நிலைகளை நீங்கள் எந்தவிதமான சிரமமோ சோர்வோ இன்றி செய்கையில் குண்டலினி செயல்படுவதாக உணர்ந்து கொள்ளுங்கள். உயர்ந்த கவிதைகளையும் ஸ்தோத்திரங்களையும் நீங்கள் எந்தவிதமான சிரமமின்றி இயற்ற முடிகையில் குண்டலினி எழும்புவதாகத் தெரிந்து கொள்ளுங்கள்.

## 51. மனத்தின் படிப்படியான உயர்வு

அடிப்படை சக்தியின் மையங்களே சக்கரங்கள். இன்னொருவிதமாகச் சொல்லப்போனால், உயிருள்ள உடலில் பிராணவாயுவினால் வெளிப்படுத்தப்படும் பிராணசக்தியின் கேந்திரங்கள் இவை. பரம்பொருள் இந்த கேந்திரங்கள் அல்லது மையங்கள் வழியாகச் வெளிப் படுகையில் பல்வேறு பெயர்களைப் பெறுகிறது. ஸ்தூலப் புலன்களுக்கு இந்த சக்கரங்கள் தெரியமாட்டா. உடலை ஒழுங்குபடுத்தும் அவை கட்புலனானாலும், மரணத்தின் பொழுது உறுப்புகள் சிதைவுறுகையில் அவை மறைந்து போகின்றன.

மனத்தூய்மை யோகத்தில் வெற்றிக்கு வழிகோலுகிறது. பிறருடன் பழகுகையில் நீங்கள் உங்கள் நடத்தையை ஒழுங்குபடுத்திக் கொள்ளுங்கள். பிறர் மீது பொறாமை

கொள்ளாதீர்கள். இரக்கம் காட்டுங்கள். பாவிகளை வெறுக்காதீர்கள். அனைவரிடமும் பரிவுடன் இருங்கள். யோகப் பயிற்சியில் உங்களது முழு சக்தியையும் நீங்கள் ஈடுபடுத்தினால் யோகத்தில் வெற்றி எளிதில் கிட்டும். முக்திக்கும், தீவிர வைராக்கியத்திலும் உங்களுக்குப் பெரும் நாட்டம் இருத்தல் வேண்டும். உங்கள் முயற்சியில் நீங்கள் அந்தரங்க சுத்தியுடனும் தூய்மையுடனும் இருத்தல் வேண்டும். ஆழ்ந்த, தொடர்ந்த தியானம் ஸமாதியில் புகுவதற்கு மிகவும் அவசியம்.

கீழான ஆசைகள் மற்றும் காமம் உள்ளோரிடம் குதம், ஜனனேந்திரியத்தின் அருகில் உள்ள மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் ஆகிய கேந்திரங்களில் உலகாயத மனம் உழல்கிறது.

ஒருவரது மனம் தூய்மைப்படுத்தப்பட்டபின் மனம் தொப்புள் பகுதியில் உள்ள மணிபூரக சக்கரத்திற்கு எழும்புகிறது. ஆற்றலையும் ஆனந்தத்தையும் அனுபவிக்கிறது.

மனம் மேலும் தூய்மைப்படுத்தப்பட்டால், அது இதயப் பகுதியில் உள்ள அனாஹத சக்கரத்திற்கு செல்கிறது. அது அப்பொழுது பேரானந்தத்தை அனுபவித்து, இஷ்ட தேவதையின் ஒளி பொருந்திய வடிவத்தைக் காண்கிறான்.

மேலும் மனம் தூய்மை அடைகையில், தியானமும் பக்தியும் மிகவும் ஆழ்ந்ததாகும்போது மனம் தொண்டையின் மத்தியில் உள்ள விசுத்த சக்கரத்திற்கு சென்று அதிகமதிகம் ஆற்றலையும் ஆனந்தத்தையும் அனுபவிக்கிறது. இந்த சக்கரத்தை அடைந்த பின்னரும் கூட கீழ்நிலைகளுக்கு மனம் வருவதற்கான சாத்தியக்கூறு உண்டு.

இரு கண்களுக்கு மத்தியில் உள்ள ஆஜ்ஞா சக்கரத்தை யோகி அடைகையில் அவன் ஸமாதியை எய்தி

பிரம்மானந்தத்தை அனுபவிக்கிறான். பக்தனுக்கும் பிரம்மனுக்கும் இடையில் உள்ள வேறுபாட்டைப் பற்றிய லேசான அனுபவம் உள்ளது.

அவன் மூளையில் உள்ள ஆயிரம் இதழ் தாமரையான ஸஹஸ்ராரத்தை அடைகையில் யோகி நிர்விகல்ப ஸமாதியை அடைகிறான். இரண்டற்ற பிரம்மனுடன் அவன் ஒன்றாகிவிடுகிறான். அனைத்து பேதங்களும் மறைகின்றன. இதுவே மிக உயர்ந்த மேலான அஸம்ப்ரக்ஞாத ஸமாதி. குண்டலினி சிவனுடன் ஐக்கியமாகிறது.

யோகி தொண்டை மத்தியில் உள்ள சக்கரத்திற்கு இறங்கி வந்து சாதகர்களுக்கு அறிவுரைகள் வழங்கி, லோக க்ஷேமத்தில் ஈடுபடலாம்.

அத்யாயம் ஏழு

# மனோ சக்திகள்

## 52. சித்துக்கள் அல்லது அமானுஷ்ய ஆற்றல்கள்

இயற்கை சக்திகள் அனைத்தையும் ஆளவல்லவராக யோகி ஆகிறார். அவற்றை அவரால் அவரது விருப்பம்போல பயன்படுத்தமுடியும். அடிப்படை சக்திகளின் மீது அவருக்குப் பூரண கட்டுப்பாடு உண்டு.

தங்கள் சத்சங்கல்பத்தின் சக்தியால் ஞானிகள் தங்கள் பௌதிக உடலுடன் அவர்கள் விரும்பும் எதையும் சாதிக்க முடியும்.

தங்களது சிஷ்யர்களின் ஸம்ஸ்காரங்கள், அவர்களது பலவீனங்கள், குறைகள் ஆகியவற்றை யோகி தங்களது உள் யோகக் கண்ணால் கண்டு, அவற்றைப் போக்கி விரைவில் சாதனையில் முன்னேறும் வழியையும் தெரிவிக்கிறார். ஞானியும் இதைச் செய்ய முடியும். தனது யோக சம்யமம் அல்லது தாரணை, தியானம், ஸமாதியை ஒருங்கிணைப்பதால் யோகி எதையெல்லாம் செய்ய முடியுமோ, அதை ஞானி தனது ஸத்ஸங்கல்ப சக்தியினால் செய்யமுடியும்.

ஒருவனது ஆன்மீக முன்னேற்றத்தை அளவிட சித்துக் காட்டுதல் எந்த விதத்திலும் உதவாது. தன் சுயலாபத்திற்காக சித்துக்களைச் செய்து காட்டுபவன் ஒரு பெரிய உலகாயதவாதி ஆவான். விரைவில் அவன் வீழ்ச்சி அடைவான். சில சமயங்களில் புலன்கடந்த சக்திகள் இருக்கின்றன என்பதை தனது மாணவனுக்கு காண்பதற் காகவும், அவனை ஆன்மீகப் பாதையில் ஊக்குவிப்

பதற்காகவும் வேண்டி யோகி ஒருவர் அற்புதத்தைச் செய்து காண்பிக்கலாம்.

அணிமா, மகிமா போன்ற எட்டு சித்துக்களையும் உடல் பூரணத்துவத்தையும் தியானப் பயிற்சியின் மூலம் யோகி அடைகிறார் என்று சொல்லப்படுகிறது.

## 53. அஷ்டமா சித்துக்கள்

பூரணயோகி எட்டுவகை சித்துக்கள் கைவரப் பெற்றவராகிறார். அவை முறையே அணிமா, மகிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்ய, வசித்வம், ஈசித்வம் என்பவையாகும்.

1. **அணிமா** : தான் விரும்பும் விதத்தில் மிகச் சிறிய உருவத்தை யோகியால் எடுக்கமுடியும்.

2. **மஹிமா** : இது அணிமாவிற்கு எதிரானது. அவன் விரும்புமளவு பெரியதாக முடியும். அவன் தனது உடலை மிகவும் பெரிய அளவில் செய்து கொள்ள முடியும். பிரபஞ்சம் முழுவதையுமே அவனால் வியாபித்துக் கொள்ள முடியும். விராட் சொரூபத்தை அவனால் எடுக்க முடியும்.

3. **லகிமா** : பஞ்சு அல்லது இறகைப் போல மிகவும் லேசானதாக அவனால் உடலை ஆக்கிக் கொள்ள முடியும். இந்த சித்தினால் வாயுஸ்தம்பனம் செய்யப்படுகிறது. ஜலஸ்தம்பனத்தில் இந்த சக்தி அனைத்தும் குறைந்த அளவில் செய்யப்படுகிறது. ப்லாவினிப்ராணாயாமத்தால் உடல் மிகவும் லேசானதாக்கப்படுகிறது. அதிக அளவில் காற்றை உட்கிரகித்து யோகி தனது ஒப்படர்த்தியைக் குறைத்துக் கொள்கிறார். இந்த சித்தின் உதவியுடன் யோகி விண்ணில் சஞ்சரிக்க முடியும். ஒரு நிமிடத்தில் அவரால் ஆயிரக்கணக்கான மைல்கள் பிரயாணம் செய்ய முடியும்.

4. *கரிமா* : இது லகிமாவுக்கு எதிரானது. இதில் யோகி அதிக ஒப்படர்த்தியைப் பெறுகிறார். காற்றை உட்கிரகித்து தன் உடலை மலைக்கு ஈடான எடையுள்ளதாக யோகியால் செய்து கொள்ளமுடியும்.

5. *ப்ராப்தி* : யோகி பூமியில் நின்று கொண்டு மிக உயரமானதைத் தொடமுடியும். சந்திரனையோ, சூரியனையோ, விண்ணையோ அவரால் தொடமுடியும். இந்த சித்தின் மூலம் தான் விரும்பிய பொருள்களையும் அற்புத ஆற்றல்களையும் யோகி பெறுகிறார். எதிர்காலத்தில் நிகழ இருக்கும் நிகழ்ச்சிகளை அவரால் சொல்லமுடியும். பிறரது எண்ணங்களை அறிதல், தொலை ஒலியைக் கேட்டல், தொலை தூரத்திற்கு எண்ணத்தை அனுப்புதல் போன்ற ஆற்றல்களும் அவரிடம் வெளிப்படுகின்றன. பறவைகள், மிருகங்களின் பாஷையையும் அவரால் புரிந்து கொள்ள முடியும். தெரியாத மொழிகளையும் அவரால் புரிந்து கொள்ளமுடியும். எல்லா வியாதிகளையும் அவரால் குணப்படுத்த முடியும்.

6. *ப்ராகாம்யம்* : நீரினுள் அவன் மூழ்கி அவன் விரும்பும் பொழுது எப்பொழுது வேண்டுமானாலும் வெளியில் வரலாம். காசியில் வாழ்ந்த திரைலிங்க சுவாமி கங்கைக் கடியில் ஆறுமாத காலம் வசித்து வந்தார். யோகி தனது சக்தியால் சில காலம் கட்புலனாகாமல் மறைந்து போகும் முறையே அது. இதைச் சிலர் பரகாய ப்ரவேசம் (பிறரது உடலினுள் புகுதல்) என்பர். காசி மன்னன் அமருகனின் உடலில் ஸ்ரீ சங்கரர் புகுந்தார். தென்னிந்தியாவில் திருமூலர் ஒரு ஆடு மேய்ப்பவனின் உடலில் புகுந்தார். விக்கிரமாதித்த மன்னனும் இவ்விதம் செய்திருக்கிறான். நெடுநாள் இளமையோடிருக்கும் வித்தையும் இதுதான். யயாதி மன்னனிடம் இந்த சக்தி இருந்தது.

7. வசித்வம் ; இது கொடூர விலங்குகளை அடக்கி தன் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரும் ஆற்றலாகும். தனது இச்சாசக்தியைப் பயன்படுத்தி பிறரை வசீகரம் செய்து தனது விருப்பங்கள் மற்றும் உத்தரவுகளுக்கு உட்படுத்துவதேயாகும். அது காம உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்துவதாகும். அது, ஆண், பெண், மற்றும் இயற்கையை கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருதலாகும்.

8. ஈசித்வம் : இது தெய்வீக சக்தியைப் பெறுதலாகும். யோகி பிரபஞ்சத்தின் நாயகன் ஆகிறான். இந்த ஆற்றலைப் பெற்று விளங்கும் யோகியால் செத்தவரைப் பிழைப்பிக்க முடியும். கபீர்தாஸ், துள்சிதாஸ், அகல்கோட் சுவாமி போன்றோர் மாண்டவரை மீட்கும் இந்த ஆற்றலைப் பெற்று விளங்கினர்.

## 54. மற்ற மனோ சக்திகள்

யோகி கீழ்க்காணும் சிறு மனோ சக்திகளைப் பெறுகிறான்!

1. பசி தாகத்திலிருந்து விடுதலை

2. சீத உஷ்ணத்திலிருந்து விடுதலை

3. ராக த்வேஷத்திலிருந்து விடுதலை

4. தூர்தர்சன், தூரதிருஷ்டி

5. தூரசிரவணம், தொலையில் உள்ளதைக் கேட்டல், தூரசுருதி, தூரப்ரவசனம்.

6. மனோ ஜயம், மன அடக்கம்

7. காமரூபம், யோகி தான் விரும்பும் வடிவத்தை எடுக்க முடியும்.

8. பரகாய ப்ரவேசம் அவன் பிறரது உடலில் புகமுடியும். செத்த உடலை உயிர்ப்பிக்க முடியும். தனது ஆன்மாவினால் அதனுள் புகமுடியும்.

9. தேவானாம் ஸஹக்ரீடை, தரிசனம் - தேவர்களைத் தரிசித்து அவர்களுடன் விளையாடுதல்.

10. இச்சா ம்ருத்யு - விரும்பும் பொழுது மரணம்.

11. யதா ஸங்கல்பம் - விரும்புவதைப் பெறுதல்

12. த்ரிகால ஞானம் - இறந்த, நிகழ், எதிர்கால அறிவு.

13. அத்வந்தவம் - எதிரிடை இரட்டைகளைக் கடத்தல்.

14. வாக்ஸித்தி - ஸத்யத்தைக் கடைப்பிடிப்பதால் யோகி சொல்வது நடக்கும்.

15. கீழ் உலோகங்களை தங்கமாக யோகியால் மாற்றமுடியும்.

16. காய வ்யூஹம் - ஒரே பிறவியில் தனது எல்லாக் கர்மங்களையும் இல்லாதாக்க யோகி தான் விரும்பும் பல வடிவங்களை எடுத்தல்.

17. தர்தூல ஸித்தி - தவளை தத்திச் செல்லும் ஆற்றல்

18. பாதாள ஸித்தி - யோகி ஆசைகளை வென்று இன்னல்கள் மற்றும் நோய்களை இல்லாதாக்குதல்

19. அவன் தன் முந்தைய பிறவிகளின் அறிவைப் பெறுகிறான்.

20. நட்சத்திர மண்டலம், கிரகங்களைப் பற்றிய அறிவை அவன் பெறுகிறான்.

21. சித்தர்களைத் தரிசிக்கும் ஆற்றலை அவன் பெறுகிறான்.

22. பூதஜயம் (இயற்கையை வெல்லுதல்)

23. காமசாரி தான் விரும்பும் இடத்திற்கு அவனால் செல்ல முடியும்

24. ஸர்வவல்லமை, அனைத்தையும் அறியும் திறனைப் பெறுகிறான்

25. வாயுஸித்தி : யோகி பூமியை விடுத்து மேலே விண்ணில் மிதக்கிறார்.

26. புதையல் எங்கே உள்ளது என்பதை யோகியால் கூறமுடியும்.

## 55. அந்தரத்தில் மிதத்தல் - வாயுஸித்தி

தாங்கள் பெறப்போகும் அசாதாரண ஆற்றல்களால் ஈர்க்கப்பட்டு ஹடயோகம் மற்றும் குண்டலினி யோகத்தின் பால் பல சாதகர்கள் கவரப்படுகின்றனர். இந்த சக்திகளை அவர்கள் பெறுவது கீழை, மேலை நாடுகளைச் சேர்ந்த இளைஞர்கள் பலரைக் கவருவதற்காகவேயாகும். பொறுமை மற்றும் கட்டுப்பாட்டுடன் யோகத்தைப் பயிலுகையில் பல வகையான புதிய அனுபவங்களையும் ஆற்றல்களையும் யோகி பெறுவது உண்மையே என்றாலும், இந்த சிறிய அல்லது பெரிய சித்துக்கள் உண்மையான அர்த்தத்தில் யோகத்தின் அடிப்படையாகக் கருதப்படமாட்டாது. அவற்றை இலட்சியமாக கொள்ளக் கூடாது. ஆனால் அடையப்பட்ட நிலையைக் குறிப்பனவாகும். சாதகன் தன் பயிற்சியில் அடைந்துள்ள முன்னேற்றத்தைக் குறிப்பது. அது வழிப்போக்கனுக்கு மைல் கற்கள் தூரத்தைக் காட்டுவது போல, சாதகனுக்கு அவை அவனது முன்னேற்றத்தைச் சுட்டிக்காட்டுகின்றன.

பிராணாயாமத்தில் பூரணத்துவத்தை அடைய ஆரம்பிக்கையில் யோகி பெறும் அனுபவமே அந்தரத்தில் மிதத்தல் ஆகும். பிராணன் மத்தி நாடியான ஸுஷும்னையில் பிராணன் சஞ்சரிக்கையில் அந்தரத்தில் மிதத்தல் நிகழ்கிறது. முதுகுத் தண்டில் உள்ள ஸுஷும்னையில் பிராணசக்தியை நிறுத்தி வைப்பதில் யோகி வெற்றி பெறுகையில் மேலே எழுதல் நிகழ்கிறது. ஆரம்பத்தில் பிராண சக்தி ஸுஷும்னையினுள் புகுந்து வெளியேறிவிடும். அது அங்கே தங்குவதில்லை. ஆனால் பிராணாயாமம், முத்திரை, பந்தம், இச்சா சக்தி ஆகியவற்றை சேர்த்துப் பயில்வதன் மூலம் யோகி ஸுஷும்னைக்குள் பிராண சக்தியை நிற்க வைக்கிறான். இம்முறையில் யோகி சுயபிரேரணையையும் பயன்படுத்துகிறான். பிராணனை ஸுஷும்னையில் நிறுத்துவதில் யோகி வெற்றி பெறுகையில் உடல் பூமியிலிருந்து மேல் நோக்கி எழுகிறது. இந்த மிதத்தலை அடைவதில் யோகி மூன்று நிலைகளைக் கடக்க வேண்டியுள்ளது என்று யோக நூல்கள் கூறுகின்றன. பிராணாயாமத்தில் அவன் முன்னேறுகையில் முதலில் அவனது உடலில் மிகுதியாக வியர்வை தோன்றுகிறது. அடுத்ததாக உடலில் அதிர்ச்சிகள் தோன்றும் நிலையை அவன் அடைகிறான். இது குறிப்பாக முதுகுத் தண்டுப் பகுதியில் உண்டாகிறது. மூன்றாவது நிலையில் உடல் பூமியை விட்டு காற்றில் சஞ்சரிக்கிறது.

இந்த நிலையை நெருங்குகையில் சாதகருக்கு கிட்டும் அனுபவம் பூமியிலிருந்து எழுவது போன்ற உணர்ச்சியோகும். இது அவன் பூமியில் இருக்கும்போதே உணரும் ஒரு அனுபவமாகும். இச்சாசக்தி, தீவிரமான கற்பனை, சுய பிரேரணை, மற்றும் பந்தத்துடன் கூடிய பிராணாயாமப் பயிற்சியினால் பிராணன் பலவந்தமாக உள்ளே நிறுத்தப்படும் பொழுது அவ்விதம் நிறுத்தப்பட்ட பிராணன் மேல் நோக்கி எழ ஆரம்பிக்கிறது. பிறகு இத்தகைய

பிரத்தியேக உணர்வுடன் யோகி பூமியை விட்டு மேலே எழுகிறான்.

பல அம்சங்களின் ஒன்றிணைப்பால் மேலெழுதல் நிகழ்கிறது. இதில் முக்கிய அம்சம் சரீரம் மிகமிக லேசாக ஆவதுதான். இது பிராணன் சூஷும்னையினுள் புகுந்து அங்கு தங்கும் பொழுது ஏற்படுகிறது. யோகியினால் இந்த எடையின்மை உண்மையிலேயே உணரப்படுகிறது. பறவையின் இறகைப் போல அவன் உணருகிறான். அந்த எடையின்மை தான் அவன் பூமியிலிருந்து மேலே எழக் காரணமாகிறது. இரண்டாவதாக பிராணயாமத்தின் இந்த நிலையில் குண்டலினி தூண்டப்படுகிறது. குண்டலியின் மேல் நோக்கிய பயணம் உடலையும் மேல் நோக்கி எழச் செய்கிறது. உடலும் மிக லேசாவாவதால் இது சாத்தியமாகிறது. மூலாதார சக்கரத்தில் குண்டலினியிலிருந்து உருவாகும் சக்திவாய்ந்த கதிர் மூன்றாவது அம்சமாகும். குண்டலினியின் எழுச்சியால் ஏற்படும் இந்த சக்திவாய்ந்த கதிர்கள் பிராணசக்தியால் தூண்டப்பட்டு நாலாபுறமும் பரவுகின்றன. கீழ் நோக்கிய நேரடி கதிர்வீச்சு பூமியைத் தாக்கி யோகியின் சரீரத்தை மேலே எழுப்புகிறது. இந்தக் கதிர்கள் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் சாதகனின் அனுபவத்திற்கு உள்ளாகின்றன. ஒரு ராக்கெட் கிளம்புகையில் அதனது உந்துசக்தி அதை முன்நோக்கித் தள்ளுவதுபோல் இது அமைகிறது. இந்தக் கதிர்கள் உடலை எடையற்றதாக இந்த நிலையில் ஆக்குகின்றன. உடலின் எடையற்ற தன்மை, குண்டலினியின் மேல் நோக்கிய உந்துதல், மற்றும் அதன் கதிர்களின் செயல் அனைத்தும் சேர்ந்து புவியீர்ப்பு விசைக்கு எதிராக செயல்படுகின்றன. இந்த நிலையில் உடல் கிட்டத்தட்ட எடையற்றதாக ஆக்கப்படும். உண்மை நிலையை அடையும் விதத்தில் கதிர்கள் செயல்படுகின்றன. உடலின் எடையற்றநிலை, குண்டலினியின் மேல் நோக்கிய உந்துதல் மற்றும்

கதிர்களின் தள்ளுவிசை அனைத்தும் சேர்ந்து புவிஈர்ப்பு விசையை எதிர்ப்பதில் பலனளிக்கின்றன.

வாயு ஸித்தியை அடைவதற்கு ஒருவன் பிராணாயாமத்தின் முழு நேரப் பயிற்சியாளனாக இருத்தல் வேண்டும். அனுலோம விலோம பிராணாயாமத்தை அவன் ஒவ்வொரு தடவையும் 40 தடவை வீதம் தவறாமல் தினமும் மும்முறை பயில வேண்டும். இவ்விதம் பல மாதங்கள் அல்லது வருடங்கள் செய்ய வேண்டும். இது நாடிகளை சுத்தம் செய்து ஸுஷும்னை அல்லது மத்தியப் பாதை வழியாக பிராணன் சஞ்சரிக்க உதவி செய்யும். பிறகு பஸ்திரிகா மற்றும் பந்தங்களைப் பயிலுவதால் பிராணன் ஸுஷும்னைக்குச் செல்லுகிறது. பிறகு மன ஒருமைப்பாடு மற்றும் பந்தங்களைப் பயில்வதால் பிராணன் ஸுஷும்னையில் சஞ்சரிக்கிறது.

இந்தப் பயிற்சியின் போது ஒருவன் வெறும் பால், பழங்கள் அல்லது பால் கஞ்சியை மட்டுமே உண்ண வேண்டும். அதிக நடை, யாத்திரை செல்லல், எந்தவிதத்திலாவது அதிகமாக உழைத்தல், அதிக உறக்கம், ராஜஸதாமஸ உணவுகளை உட்கொள்ளல், சூரிய ஒளியில் நிற்றல், தீக்கருகில் அமர்தல், குளிர்ந்த நீரில் குளித்தல், பூரண உபவாசம் ஆகியவற்றை தவிர்க்க வேண்டும். கண்டிப்பான பிரம்மச்சரியம் கடைப்பிடிக்கப்பட வேண்டும்.

வாயு ஸித்தியை சாதகர் அடைகையில் அவர் பிரத்யாஹார நிலையை அடைகிறார்.

சாதகனுக்கு அருகில் வழிகாட்டி இல்லாவிட்டாலும் நடைமுறை வழிகாட்டியிடமிருந்து அறிவுரைகள் எப்பொழுதும் தேவைப்படுகின்றன. வழிகாட்டி இல்லாவிட்டாலோ அல்லது தனது குருவுடன் ஒருவன் தொடர்பு கொள்ள முடியாவிட்டாலோ, ஒருவன் மார்க்கத்திலுள்ள தடைகளை நீக்க வேண்டியும், நல்லறிவுக்காகவும் குரு அல்லது இறைவனிடம் பிரார்த்திக்க வேண்டும்.

யோக சாஸ்திரம் மற்றும் குருவிடம் நம்பிக்கை மிகவும் அவசியம். இல்லாவிடில் தான் எதிர்பார்த்த விளைவுகள் கிட்டாத பொழுது ஒருவன் யோகப் பயிற்சியே ஏமாற்றுவேலை என்று கூற முற்படுவான்.

யோகத்தில் வெற்றிக்கு பொறுமையும் விடாமுயற்சியும் மிகவும் தேவைப்படுகின்றன. ஒருவன் தூய வாழ்க்கை வாழ்ந்து தன் செயல்கள் அனைத்தையும் இறைவனுக்கு அர்ப்பணிக்க வேண்டும்.

## 56. காய ஸம்பத்து

ஹடயோகப் பயிற்சியினால் யோகி பூரண உடலைப் பெறுகிறான் - ரூபலாவண்ய பல வஜ்ர ஸம்ஹரை காய ஸம்பத். உடலின் பூரணத்துவம் என்பது அலகு, கருணை, பலம் மற்றும் வஜ்ரம் போன்ற கடினத் தன்மையும் உடையதாகும். அதிக உஷ்ணம் மற்றும் குளிர்ச்சியையும் தாங்கிக் கொள்ளுதல், தண்ணீர் மற்றும் உணவு இன்றி இருப்பது போன்ற ஆற்றல்கள் காய ஸம்பத்தில் அடங்குகின்றன.

ஹடயோகியின் உடல் உறுதியாயும் பூரணமாயும் இருப்பது போல அவனது மனமும் உறுதியாகவும் ஒரு நிலைப்படவும் உள்ளது. தாரணை, தியானத்தைப் பயிலுவதால் அவன் யோகத்தின் மிக உயர்ந்த நிலையை அடைந்து யோக சமாதியின் மூலம் அழியாத் தன்மையை அடைகிறான். உயர்ந்த யோக நிலையை அடைந்த சாதகனிடம் சகலவித சித்துக்களும் திகழ்கின்றன.

## 57. சில அற்புத அனுபவங்கள் பற்றிய விளக்கம்

### கேள்விகள்

1. ராஞ்சியில் 70 வயதான ஒரு ஆங்கில மூதாட்டி இருந்தாள். சன்யாசிகளின் பெயரின் இறுதியில் 'புரி' என்று முடியும் பிரிவைச் சேர்ந்த அம்மூதாட்டி சன்யாசமும் ஏற்றிருந்தார். அவரது பெயர் . . . அந்த அம்மையார் இங்கிலாந்தில் இருக்கையில் சில காட்சிகளைக் கண்டிருந்தார். இரண்டாவது உலகப் போரின் இறுதியில் இங்கிலாந்து ஆபத்துக்குள்ளாகும் என்று அரைகுறையாக அவர் கண்ட கனவின் காரணமாக அவர் பாரதம் வந்திருந்தார். இங்கே வந்தபின் அவர் சன்யாசம் வாங்கிக்கொண்டார்.

அந்த அம்மையாருடன் மற்றொரு நபரும் தங்கிக் கொண்டிருந்தார். அந்த நபரும் ஒரு ஆங்கிலேயர். அவருக்கும் அடிக்கடி ஸமாதி நிலை ஆகும். அவர் அமரும் பொழுது, கேள்விகள் கேட்கப்பட்டால் அவர் மிகுந்த தத்துவம் மற்றும் ஆன்மீக மயமான பதில்களைத் தருவார். அவர் பதில் கூறும்பொழுது அதை அந்த சன்யாசி அம்மையார் அப்படியே எழுதிக்கொள்வார். அந்த பதில்கள் சுருக்கமாக இருந்ததால் அந்த அம்மையாரே அவற்றிற்கான விளக்கமும் குறிப்புகளும் எழுதினார். மொத்தமாக எல்லாம் கேள்வி பதிலாக சுமார் 80 பக்கத்தில் அமைந்தன. "சகோதரர்கள்" அவர் மூலம் பேசுவதாக அந்த அம்மையார் கூறுகிறார். அந்த உயர் மனோ நிலையில் அவர் சொல்வது அனைத்தும் சுருக்கமான உபநிஷத கருத்துக்களாக இருந்தன.

2. சுமார் ஒன்றரை மாதத்திற்கு முன்பு நான் பம்பாயில் இருந்தேன். அங்கே ஸ்ரீ . . . . . என்றொரு நபர் இருந்தார். அங்கே என்னுடைய ஒரு நண்பர் கேட்டுக்

கொண்டதற்கிணங்க நான் ஒரு சிறு துண்டுக் காகிதத்தில் மூன்று கேள்விகளை எழுதி அதைச் சுருட்டி மற்றொரு காகிதத்தின் மீது வைத்தேன். அவர் எங்களுக்கு முன்னர் அமர்ந்திருந்தார். அவர் நான் எழுதிய அந்த காகிதத்தைத் தொடவேயில்லை. சுமார் 10 அல்லது 15 நிமிடங்களுக்குள், அவர் மற்றொரு காகிதத்தில் நான் எழுதிய அந்த மூன்று கேள்விகள் அப்படியே எழுதி மற்றும் அவற்றிற்கான பதில்களையும் எழுதினார். இதுபோல எனது நண்பர் எழுதிய மற்றொரு கேள்வித் தொகுப்பிற்கும் அவர் எழுதினார்.

3. நவீன கல்வி அறிவு இல்லாத கிராமத்து இளைஞர் ஒருவர் இருந்தார். அவரிடம் கேள்விகள் கேட்கப்பட்ட பொழுது அவர் தன் பார்வையை ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிறுத்தி சிந்தனையற்ற மனத்துடன் இருப்பது போலத் தோன்றுவார். சிறிது நேரத்தில் அவற்றிற்கான பதில்களை நேரில் காண்பது போல சொல்லுவார். கேள்விகள் தெளிவாக இல்லாவிட்டாலும் கூட நமது மனத்தில் இருந்ததுபோலவே அவை சரியாகப் பொருந்தும்.

இந்த நிகழ்ச்சிகளைக் குறித்து உங்களது விளக்கத்தை எதிர்பார்க்கிறேன்.

## பதில்கள்

ஆன்மீக சாதனை மற்றும் யோகாவில் ஈடுபடும் யோகிகள் மற்றும் பக்தர்களுக்கு இத்தகைய நிகழ்ச்சிகள் புதிது அல்ல. கடந்த காலத்திலும் இப்பொழுதும் எல்லா நாடுகளிலும் பல்வேறு ஜனங்களால் இத்தகைய நிகழ்ச்சிகள் பார்க்கப்பட்டிருக்கின்றன. ஆனால் ஆன்மீகப் பயிற்சிகளில் ஈடுபடும் எல்லோருக்கும் இது பொதுவானதல்ல.

இவை சித்துவேலைகள். ஆன்மீக முன்னேற்றத்துடன் இவை தொடர்புடையவை அல்ல. இந்த நிகழ்ச்சிகள்

இருந்தால் அந்த நபர்கள் ஆன்மீக முன்னேற்றம் அடைந்தவர்கள் என்பது பொருளல்ல. ஆனால் உள் ஆன்மீக முன்னேற்றம் இருக்குமானால் இத்தகைய சக்திகள் தாமாக வந்தமையும். ஆன்மீக முன்னேற்றம் உள்ள ஒருவர் இத்தகைய சித்து வேலைகளைச் செய்து காட்டுவதை எதுவும் தடுக்க முடியாது. ஆனால் பல ஆன்மீகவாதிகள் குறிப்பிட்ட சில காரணங்களுக்காக இந்த சித்துக்களை வெளியில் காண்பிப்பதில்லை.

1. நான் இதுவரை சொன்னதிலிருந்து அந்த சன்யாசினி மற்றும் அவரது நண்பரைக் குறித்து நீங்கள் ஒரு முடிவிற்கு வந்திருப்பீர்கள் என்று எண்ணுகிறேன். இந்த வயதான சுவாமி அவரது பூர்வஜன்மத்தில் யோகியாக இருந்திருக்கலாம். எனவே அவற்றின் பதிவுகளுடன் சிறு குழந்தைப் பிராயத்திலிருந்தே இவற்றை உணர்ந்திருக்கலாம். ஆவிகளுடன் தொடர்பு ஆன்ம ஞானமாகாது. மேலான சூக்ஷ்மலோகத்திலிருந்து எழும் எண்ணவடிவங்கள் மிகவும் சூக்ஷ்மமானதாகவும், தத்துவ மயமானவையாகவும் இருக்கலாம். இத்தகைய சித்து நிகழ்ச்சிகள் மூலம் வரும் பதில்களும் குறிப்புகளும் முழுக்கவும் பயனற்றவை என்று சொல்லமுடியாது. அவற்றில் ஜனங்களுக்கும் சாதகர்களுக்கும் தேவையான பல விஷயங்கள் இருக்கலாம். சில சமயங்களில் ஆழ்நிலையில் உள்ள நபரின் அடிமனத்திலிருந்தே இத்தகைய வாக்கியங்கள் வரலாம். அவை பதிந்த சம்ஸ்காரங்களாக முன்பு பெறப்பட்ட அறிவாக இருக்கலாம்.

2. பம்பாயில் அண்மையில் உங்களால் பார்க்கப்பட்ட சம்பவம் வெறும் எண்ண மாற்றம் அல்லது எண்ணம் அறிதலேயாகும். அது வெறும் தொலை உணர்வேயாகும். இது சாதாரணமானது.

3. அந்தக் கிராம இளைஞனைப் பொறுத்தமட்டில் நீங்கள் சொன்னதைப் பார்க்கும் பொழுது அது மந்திர சித்தி அல்லது ஏதோ தேவதை உபாசனை போலத் தெரிகிறது.

தென்னிந்தியாவில் மேற்குக் கரையோரத்தில் இத்தகைய உபாசனை அல்லது சித்து பிரபலமாக காணப்படுகிறது. நீங்கள் குறிப்பிட்ட விஷயத்தில் அந்த நபர் ஒன்று சிறிது ஆன்மீக சக்தி உள்ளவராக இருத்தல் வேண்டும் அல்லது ஏதாவது உபாசனை அல்லது மந்திர சித்தியால் இந்த சித்து வேலையைக் கற்றவராக இருத்தல்வேண்டும். இத்தகைய சந்தர்ப்பங்களில் பதில்கள் அந்த உபாஸ்ய தேவதையால் தூண்டப்பட்டவையாக இருக்கலாம். சில சமயங்களில் அந்த தேவதை குறிப்பிட்ட நபர் மூலமாகப் பேசும். இத்தகைய தகவலுக்கு அந்த நபர் ஆழ்நிலையில் இருக்கவேண்டிய அவசியமில்லை. அந்த நபர் சாதாரண நிலையில் இருக்கும் பொழுதே இது நிகழும். பதிலைத் தூண்ட சிறிது மன ஒருமைப்பாடே போதும். அந்த நபரைச் சுற்றி இருப்பவர்களால் மிகவும் அமைதியுடன் இருத்தல் வேண்டும் அவ்வளவுதான்.

அறியாமையில் உழலும் ஸ்தூல உடலுடன் தொடர்பு கொண்ட உலகியல் மனிதனுக்கும், ஞானத்துடன் கூடிய பூரண ஞானிக்கும் இடையில் உள்ள அனுபவங்களில் பல்வேறு படித்தரங்களுடன் கூடிய வேறுபாடுகள் உள்ளன. தனது இலட்சியத்திலிருந்து இந்த இடைப்பட்ட நிலைகள் அந்த அறியாத சாதகரை சிறிதும் திசைதிருப்பாது. அவற்றின் உண்மையை அறிந்து, அவற்றிற்கு மதிப்புக் கொடுத்து, பணிவுள்ள சாதகன் மிகவும் கவனமாக இருந்து உண்மையை அடைய இடைவிடாது முயல வேண்டும்.

## 58. ஸம்யமம் சித்து சக்திகளுக்கு வழி வகுக்கிறது

தாரணை, தியானம், ஸமாதி இம்மூன்றும் சேர்ந்து ஸம் யமம் ஆகிறது.

யம, நியம, ஆசன, பிராணாயாம, ப்ரத்யாஹாரத்தைக் காட்டிலும் இம்மூன்றும் அந்தர்முகமானவை.

அந்த சம்யமும் நிர்பீஜ ஸமாதிக்குப் புறத்ததாகும்.

ஸம்யமத்தை வெல்லுவதால் அறிவு நிலை அடையப் படுகிறது.

சூரியனில் ஸம்யமத்தைப் பயிலுவதால் உலகங்களைப் பற்றிய ஞானம் வருகிறது.

சந்திரனில் ஸம்யமத்தைப் பயிலுவதால் நட்சத்திர யோகத்தைப் பற்றிய அறிவு வருகிறது.

துருவ நட்சத்திரத்தின் ஸம்யமத்தால் நட்சத்திரங்களின் நகர்தலைப் பற்றிய அறிவு வருகிறது.

யானை போன்ற விலங்குகளின் ஸம்யமத்தால் அவற்றின் பலம் வருகிறது.

உடலின் உருவத்தின் ஸம்யமத்தால் கண்ணிற்கும் ஒளிக்கும் இடையில் உள்ள தொடர்பை துண்டிப்பதால், உற்று உணரும் சக்தியை கட்டுப்படுத்துவதால், உடல் மறைந்துபோகும் சித்து வருகிறது.

பிறரது சங்கேதங்களின் சம்யமத்தால் அவர்களது மனத்தை அறியும் அறிவு வருகிறது.

சிறிய கால அளவின் சம்யமத்தால் விவேக ஞானம் வருகிறது.

செவிக்கும் வெளிக்கும் இடையில் உள்ள தொடர்பின் சம்யமத்தால் தெய்வீக ஒலியைக் கேட்கும் திறம் வருகிறது.

உடலுக்கும் ஆகாயத்திற்கும் இடையில் உள்ள உறவின் சம்யமத்தால் யோகி பஞ்சைப் போல எடையற்ற உடலை அடைந்து வெளியிடை புகும் ஆற்றலைப் பெருகிறான்.

மனத்தின் மூன்று நிலைகளின் சம்யமத்தால் கடந்த காலம் மற்றும் எதிர்கால அறிவு வருகிறது.

மனதின் பதிவுகளை (சம்ஸ்காரங்களை நேரடியாக ஸம்யமிப்பதால் பூர்வ ஜன்ம ஞானம் வருகிறது.

சொரூப அறிவு, அஹங்காரம், பண்புகள், புலன்களின் தன்மை ஆகியவற்றை சம்யமிப்பதால், புலன்களின் மீது வெற்றி கிட்டுகிறது.

உதான வாயுவை வெல்வதால் நீர், மண், முட்கள் போன்றவற்றோடு யோகிக்கு எந்தவித தொடர்பும் இல்லாமல் போகும். அவன் விரும்பிய போது இறக்க முடியும்.

சமான வாயுவை வெல்வதால் பிரகாசம் வருகிறது.

நட்பு போன்ற குணங்களின் ஸம்யமத்தால் அவற்றை பிறருக்கு அளிக்கும் ஆற்றல் வருகிறது.

தூய்மைக்கும் ஆன்மாவிற்கும் இடையில் உள்ள தொடர்பின் சம்யமத்தால் சர்வவல்லமை மற்றும் சர்வக்ஞத்வம் போன்ற ஆற்றல்கள் வருகின்றன.

வார்த்தை, அதன் பொருள், அதைப் பற்றிய அறிவு ஆகியவை ஒன்று போலத் தெரிந்தாலும் அவற்றிற்கிடையே யான வேற்றுமைகளைப் பற்றிய சம்யமத்தால் அனைத்து உயிரினங்களின் ஒலிகளைப் பற்றிய அறிவு வருகிறது.

கர்மம் இரு வகைப்படும்: பலன் அளித்தவை, இனி மெதுவாக பலன் தர இருப்பவை.

இவற்றின் சம்யமத்தால் யோகி தான் மரணமடையும் நேரத்தைப் பற்றிய அறிவை அடைகிறான்.

வயிற்றுப் புறத்தில் உள்ள சக்கரத்தின் சம்யமத்தால் உடலைப்பற்றிய அறிவு வருகிறது. தொண்டைக் குழியில் உள்ள சக்கரத்தின் சமயமத்தால் பசி, தாகத்தை இல்லாதிருக்க முடியும்.

தலையில் உள்ள ஒளியின் சம்யமத்தால் சித்தர்களின் தரிசனம் கிட்டுகிறது.

இதயத்தின் சம்யமத்தால் மனதைப் பற்றிய அறிவு வருகிறது.

கூர்மநாடியின் சம்யமத்தால் உடல் நிலைபெறுகிறது.

இதயத்தில் உள்ள உள் ஒளியின் சம்யமத்தால் சூக்ஷ்ம மானவை, புரியாதவை, தொலைவில் உள்ளவை ஆகியவற்றின் அறிவு வருகிறது.

ஒன்றோடொன்று முற்றிலும் வேறுபட்ட ஸத்வம், புருஷனின் வேற்றுமையின்மையால் அனுபவம் வருகிறது. சுய சம்யமத்தால் புருஷனைப் பற்றிய அறிவு வருகிறது.

அந்த சம்யமத்தால் தொலை ஒலி கேட்டல், மேலாம் ருசி மற்றும் உள் உணர்வின் மூலம் மேலான மணம் ஆகியவை தோன்றுகின்றன.

உள் உணர்வினால் அனைத்து அறிவைப் பற்றிய அறிவு வருகிறது.

பந்தத்தின் காரணத்தை தளர்த்துவது மற்றும் உட்புகுதல் பற்றிய அறிவால் யோகி பிறரது உடலினுள் புகுகிறான்.

ஸ்தூல வடிவம், சூக்ஷ்ம வடிவம், குணங்கள் மற்றும் மூலகங்களைப் பற்றிய சம்யமத்தால் மூலகங்களை வெல்லும் ஆற்றல் வருகிறது.

அதிலிருந்து அணிமா, மகிமா போன்ற எட்டு சித்துக்களும் உடல் மற்றும் அதன் இயக்கங்களின் நல்லியக்கம் வருகிறது.

உடலில் அழகு கருணை, பலம் மற்றும் திண்மை இருந்தால் அது பூரணத்வம் பெற்றதாகிறது.

ஸமாதியை அடைய இந்த சித்துக்கள் இடையூறாகும். ஏனெனில் அவை வெளிச்செல்லும் மனத்துடன் தொடர்புடையவை.

இந்த சித்துக்களையும் விட்டு விடுவதால் பந்தத்தின் விதையும் அழிகிறது. அதனால் கைவல்யம் கிட்டுகிறது.

தேவலோகவாசிகள் அழைக்கையில் யோகி பந்தம் புன்னகை மற்றும் மகிழ்ச்சியை அடையக் கூடாது. ஏனெனில் அது மீண்டும் இன்னாதவையுடன் தொடர்புக்கு வழிகோலும்.

அத்யாயம் எட்டு

# ஆன்மீக முன்னேற்றத்தின் அறிகுறிகள்

## 59. ஆன்மீக முன்னேற்றப் பாடல்

மகிழ்ச்சி, திருப்தி, அமைதி,
வைராக்யம், பற்றின்மை, பயமின்மை,
சமத்வம், உறுதி, சினம் கொள்ளாமை,
அடக்கம், நிலைகுலையாமை, கலங்காமை,
சாந்தி, சந்தோஷம், மௌனம்,
அமைதி, அருள், பூரணத்வம்,
நிஷ்டை, பாவம், மஹாபாவம், ப்ரேமை,
மெய் சிலிர்த்தல், அழுதல், நடுக்கம், ஸ்வரபங்கம்,
அனாஹத ஒலிகள், ஒளிகள், காட்சிகள்,
இன்பம், சந்தோஷம், பேரின்பம்
ரிதம்பர, மதுமதி, ப்ரக்ஞை, ஜோதிகள்,
ஊக்கம், தெளிவு, விவேகம்,
போதம், உள்ளுணர்வு, ஞானம்
இவைதான் குண்டலினி எழுச்சியின் அடையாளங்கள்
இவையே ஆன்மீக முன்னேற்றத்தின் சின்னங்கள்.
இவையே ஆன்மீக அனுபவங்கள்.

## 60. சாதனையில் முன்னேற்றத்தின் முக்கிய அம்சங்கள்

அதிகமதிகம் வைராக்யம், விவேகம்
அதிகமதிகம் மோட்ச நாட்டம்
அமைதி, ஆனந்தம், திருப்தி,
பயமின்மை, கலங்காத மனம்
கண்களில் ஒளி, உடலில் நறுமணம்,
அழகிய தோற்றம், இனிமையான சக்திமிக்க குரல்,
சிறு அளவே மலம், சிறுநீர் வெளியாதல்,

ஸமாதியை அடைய இந்த சித்துக்கள் இடையூறாகும். ஏனெனில் அவை வெளிச்செல்லும் மனத்துடன் தொடர்புடையவை.

இந்த சித்துக்களையும் விட்டு விடுவதால் பந்தத்தின் விதையும் அழிகிறது. அதனால் கைவல்யம் கிட்டுகிறது.

தேவலோகவாசிகள் அழைக்கையில் யோகி பந்தம், புன்னகை மற்றும் மகிழ்ச்சியை அடையக் கூடாது. ஏனெனில் மீண்டும் இன்னாதவையுடன் தொடர்புக்கு அது வழிகோலும்.

அத்யாயம் எட்டு

# ஆன்மீக முன்னேற்றத்தின் அறிகுறிகள்

## 59. ஆன்மீக முன்னேற்றப் பாடல்

மகிழ்ச்சி, திருப்தி, அமைதி,
வைராக்யம், பற்றின்மை, பயமின்மை,
சமத்வம், உறுதி, சினம் கொள்ளாமை,
அடக்கம், நிலைகுலையாமை, கலங்காமை,
சாந்தி, சந்தோஷம், மௌனம்,
அமைதி, அருள், பூரணத்வம்,
நிஷ்டை, பாவம், மஹாபாவம், ப்ரேமை,
மெய் சிலிர்த்தல், அழுதல், நடுக்கம், ஸ்வரபங்கம்,
அனாஹத ஒலிகள், ஒளிகள், காட்சிகள்,
இன்பம், சந்தோஷம், பேரின்பம்
ரிதம்பர, மதுமதி, ப்ரக்ஞை, ஜோதிகள்,
ஊக்கம், தெளிவு, விவேகம்,
போதம், உள்ளுணர்வு, ஞானம்
இவைதான் குண்டலினி எழுச்சியின் அடையாளங்கள்
இவையே ஆன்மீக முன்னேற்றத்தின் சின்னங்கள்.
இவையே ஆன்மீக அனுபவங்கள்.

## 60. சாதனையில் முன்னேற்றத்தின் முக்கிய அம்சங்கள்

அதிகமதிகம் வைராக்யம், விவேகம்
அதிகமதிகம் மோட்ச நாட்டம்
அமைதி, ஆனந்தம், திருப்தி,
பயமின்மை, கலங்காத மனம்
கண்களில் ஒளி, உடலில் நறுமணம்,
அழகிய தோற்றம், இனிமையான சக்திமிக்க குரல்,
சிறு அளவே மலம், சிறுநீர் வெளியாதல்,

அதிசயிக்கத்தக்க ஆரோக்கியம், பலம், திண்மை
நோயின்மை, சோர்வு, சோம்பலின்மை
உடல் கனமின்மை, துருதுருப்பான மனம்
ஆற்றல் மிக்க ஜடராக்னி அல்லது உதாரக்கனல்
நெடுநேரம் தியானம் செய்ய ஆர்வம்
உலகியல் மக்களுடன் பேச விருப்பமின்மை
எங்கும் கடவுளை உணர்தல்
அனைத்துயிரிடத்தும் அன்பு
எல்லா வடிவங்களும் கடவுளே என உணர்தல்
உலகம் கடவுளே என உணர்தல்
எந்த உயிரிடத்தும் வெறுப்பு கொள்ளாதிருத்தல்
தங்களை அவமதித்து ஏசுவோரிடத்தும் வெறுப்பு
கொள்ளாமை
அவமானத்தையும் துன்பத்தையும் தாங்கும் திறன்
ஆபத்துக்களையும் விபத்துக்களையும் சமாளிக்கும் திறன்
இவை சில முதல்நிலை ஆன்மீக அனுபவங்கள் ஆகும்.
இவை நீங்கள் ஆன்மீகப் பாதையில் திடமாக
முன்னேறுகிறீர்கள்.

என்பதற்கான அடையாளங்கள்.
உங்கள் உடலும் மனமும் ஆரோக்கியமாக இருக்கும்.
வெளியேறும் மலங்கள் மிகவும் குறைவாக இருக்கும்.
குரல் இனிமையாக இருக்கும்.
முகம் ஒளிரும், கண்கள் பளிச்சிடும்
நீங்கள் எப்பொழுதும் அமைதியாயும் அடக்கமாகவும்
இருப்பீர்கள்.

நீங்கள் யாண்டும் பயமின்றியும் மகிழ்ச்சியாகவும்
திருப்தியாகவும் இருப்பீர்கள்.
உங்களிடம் விவேகம் வைராக்கியம் நிலவும்
உலகின்பால் உங்களுக்குக் கவர்ச்சி இருக்காது.
முன்னர் உங்களை நிலைகுலையச் செய்தவை இப்பொழுது
அவ்விதம் செய்யமாட்டா.

உங்களிடம் அந்தர் முக விருத்தி அதாவது அகமுகநோக்கு நிலவும்.

உங்கள் மனம் நிலை குலையாமலிருக்கும்.

முன்பு உங்களுக்கு மகிழ்ச்சி அளித்தவை இப்பொழுது

அதற்கு மாறான விளைவுகளை உண்டாக்கும்.

நீங்கள் கூர்த்த ஒருமுகப்பட்ட மனத்தைப் பெற்று விளங்குவீர்கள்.

அதிகம் தியானம் செய்வதற்கான நாட்டம் உங்களிடம் நிலவும்.

ஒளிகள், காட்சிகள், திவ்ய கந்தம், திவ்விய ருசியை நீங்கள் அனுபவிப்பீர்கள்.

எல்லா உருவங்களும் இறைமயமே என்ற

எண்ணம் உங்களிடம் உறுதிபெறும்.

எங்கும் இறைவனை நீங்கள் உணர்வீர்கள்.

இறைவன் அருகில் இருப்பதை நீங்கள் உணர்வீர்கள்.

உங்களது ஆசனம் உறுதி பெறும்.

தன்னலமற்ற தொண்டிற்கு உங்களிடம் ஆர்வம் பிறக்கும்.

## 61. ஏனைய முக்கிய அம்சங்கள்

அமைதி, மகிழ்ச்சி, திருப்தி, வைராக்யம், பயமின்மை, எல்லா நிலைகளிலும் கலங்காத மனமுடைமை போன்றவை நீங்கள் ஆன்மீகப் பாதையில் முன்னேறுகிறீர்கள் என்பதைக் காட்டுகிறது.

ஆன்மீக முன்னேற்றம் என்பது சித்துக்களால் அளக்கப்படுவதில்லை. மாறாக தியானத்தில் நீங்கள் பெறும் ஆனந்தத்தினாலேயே அது அளக்கப்படுகிறது.

உங்கள் ஆன்மீக முன்னேற்றத்தின் உண்மையான அறிகுறிகள் இவைதான்.

அக ஆன்மீக செயல்பாடு மற்றும் புற சாதனை இரண்டிலும் நீங்கள் நாளுக்கு நாள் முன்னேறி வருகிறீர்களா?

உலகப் புலனின்பங்கள் தரும் சுகங்களைக் காட்டிலும் மிகவும் மேலான ஆனந்தத்தை உங்களது ஆன்மீக வாழ்க்கை உங்களுக்குத் தருகிறதா?

சாதகர்கள் அல்லாதவர்கள் தங்கள் தினசரி வாழ்வில் காணாத ஒரு அமைதி, ஆற்றல் உணர்வை நீங்கள் உணர்கிறீர்களா?

உங்களது விவேக சக்தியும் எண்ண ஆற்றலும் படிப்படியாக வளர்கிறதா என்பதை நீங்கள் உணர்கிறீர்களா?

உங்கள் அறிவு, இச்சா சக்தியை தவிர அதற்கு அப்பாற்பட்டதொரு பேரறிவு உங்களை வழிநடத்திச் செல்கிறது என்பதை நீங்கள் உணர்கின்றீர்களா?

எங்கும் நிறைந்த தெய்வீகத்துடன் உங்களுக்குள்ள நெருங்கிய தொடர்பைப் பற்றிய ஒரு புதிய நோக்கு, ஒரு உடைமை உணர்வு, உங்கள் அன்றாட வாழ்வின் நிகழ்ச்சிகளில் அதன் தாக்கம் ஆகியவை உங்களிடம் உள்ளதா? இந்தக் கேள்விகளுக்கான உங்கள் பதில் நேரிடையாக இருந்தால் ஆன்மீக மார்க்கத்தில் நீங்கள் வேகமாகவும் படிப்படியாகவும் முன்னேறுகிறீர்கள் என்பது உறுதி.

அதிகமதிகம் விவேகம், வைராக்கியம், அதிகமதிகம் விடுதலைக்கான நாட்டம், அமைதி, மகிழ்ச்சி, திருப்தி, பயமின்மை, கலங்காத மனம் ஆகியவை நீங்கள் ஆன்மீக மார்க்கத்தில் முன்னேறுகிறீர்கள் என்பதைக் காட்டுகின்றன.

கண்களில் ஒளி, உடலில் நறுமணம், அழகிய தோற்றம், இனிய நல்ல குரல், சிறு அளவில் மலம் மூத்திரம்

வெளியாதல், அற்புதமான ஆற்றல், ஆரோக்கியம், மற்றும் சோம்பல், வியாதி, கலக்கத்திலிருந்து விடுதலை, லேசான உடல் உற்சாகமான மனம் சக்தி வாய்ந்த உதரக்கனல் நெடுநேரம் உட்கார்ந்து தியானம் செய்வதற்கான நாட்டம் ஆகியவை ஆன்மீக முன்னேற்றத்தின் அடையாளங்கள்.

உலகியல் தொடர்பில் வெறுப்பு வரும். அனைத்தும் ஆண்டவனின் சொரூபங்களே என உணர்ந்து அனைத்தின் பாலும் அன்பு உண்டாகும். தங்களைக் கடிந்து துன்புறுத்து வோரிடத்தும் வெறுப்பு இருக்காது.

அல்லல்களையும் ஆபத்துக்களையும் எதிர்க்கும் மனத் திறன் அவமானத்தை சகிக்கும் திறன் ஆகியவை நிலவும்.

## 62. தியான மார்க்கத்தில் முன்னேற அடையாளங்கள்

பிரம்மன், ஆத்மா, புருஷன், சைதன்யம், உணர்வு, கடவுள், அமரத்வம், சுதந்திரம், பூரணம், அமைதி, ஆனந்தம் பந்தமற்றது அனைத்தும் ஒரே பொருளுள்ள பல வார்த்தைகள். நீங்கள் ஆத்மஞானம் அடைந்தால்தான் ஜனனமரணச் சுழல் மற்றும் அதன் தொடர்பான தீமைகளிலிருந்து விடுபடமுடியும். வாழ்வின் இலட்சியம் மோட்சத்தை அடைவதுதான். தன்னலமற்ற தொண்டு, ஜபம் போன்றவற்றால் தூய்மைப்படுத்தப்பட்ட இதயத்துடன் செய்யப்படும் தொடர்ந்த தியானத்தினால் தான் மோட்சத்தை அடைய முடியும்.

மோட்சத்தை அடைய உள்ள ஒரே ராஜபாட்டை தியானம்தான். தியானம் எல்லாத் துன்பங்களையும், தொல்லைகளையும், துயரங்களையும் இல்லாதாக்குகிறது. தியானம் துன்பத்தின் எல்லாக் காரணங்களையும் அகற்றுகிறது. தியானம் ஒருமைக் காட்சியை அளிக்கிறது.

தியானம் ஒருமைப்பாட்டுணர்வை தூண்டுகிறது. அழியாத ஆனந்தம், நிரந்தர அமைதி, குன்றாத மகிழ்ச்சி எனும் சாம்ராஜ்யத்தினுள் சாதகன் மேலே எழும்ப அவனுக்கு உதவியாயிருக்கும். பலூன், பாரசூட் அல்லது விமானம் தியானமே.

மனிதனால் பிரம்மத்தை உணரமுடியும். பலர் நிர்விகல்ப ஆத்மஞானம் அடைந்திருக்கின்றனர். பலர் ஸமாதியை அனுபவித்திருக்கின்றனர். சங்கரர், தத்தாத்ரேயர், மன்சூர், ஷாம்ஸ் டப்ரீஸ், ஏசு, புத்தர் போன்றோர் அபரோக்ஷானுபூதி, விசுவரூபதர்சனம் அல்லது நேருக்கு நேர் உண்மையை தரிசித்தவர்களாவர். ஆனால் அறிந்தவர்கள் அதை பிறருக்கு விளக்க முடியாது. காரணம் அதற்கான சாதனம் இல்லை. எல்லோருக்கும் பொதுவான ஐம்புலன்களுக்கு எட்டும் அறிவையே பிறருக்கு எடுத்துரைக்க முடியாது. சீனியைச் சுவைத்து அறியாத ஒருவனுக்கு அதைப் பற்றி நீங்கள் விளக்க முடியாது. பிறவிக் குருடன் ஒருவனுக்கு நிறத்தைப் பற்றி விளக்கமுடியுமோ? சீடனுக்கு உண்மையை அறியும் விதத்தை, அகமுக ஞானத்தை அடையும் வழியைச் சொல்லத்தான் ஆசிரியருக்கு முடியும்.

நீங்கள் தியானத்தில் முன்னேறி கடவுளை நெருங்குகிறீர்கள் என்பதற்கு இவையே அடையாளங்கள். உலகின்பால் உங்களுக்கு எந்தவித கவர்ச்சியும் இருக்காது. புலன்பொருள்கள் உங்களை தூண்டாது. நீங்கள் ஆசை, பயம், யான், எனது அற்றவர்களாக ஆவீர்கள். உடல் பற்று படிப்படியாக மறையும். 'அவள் என் மனைவி, அவன் என் மகன், இது என் வீடு' என்ற எண்ணங்கள் உங்களிடம் எழமாட்டா. அனைத்தும் ஆண்டவனின் சொரூபம் என நீங்கள் உணர்வீர்கள். ஒவ்வொரு பொருளிலும் நீங்கள் கடவுளைக் காண்பீர்கள்.

உடலும் மனமும் லேசாகும். நீங்கள் எப்பொழுதும் மகிழ்ச்சியாயிருப்பீர்கள். பகவானின் நாமம் உங்கள் உதடுகளில் எப்பொழுதும் இருக்கும். பகவானின் பாதாரவிந்தங்களில் மனம் எப்பொழுதும் லயித்திருக்கும். அது எப்பொழுதும் பகவானின் படத்தையே பார்த்துக் கொண்டிருக்கும். பகவானிடமிருந்து சத்வம், தூய்மை, ஒளி, ஆனந்தம், அறிவு, அன்பு, ஆகியவை உங்களை நோக்கி பாய்ந்து கொண்டிருப்பதாக நீங்கள் உணர்வீர்கள்.

உங்களிடம் உடல் உணர்வு இருக்காது. அப்படியே உடல் உணர்வு இருந்தாலும் அது ஒரு சம்ஸ்காரம் அல்லது மனதின் விருத்தியாகத்தான் இருக்கும். குடிகாரனுக்கு தன் உடல் மீது துணி இருக்கிறதா இல்லையா என்பது பற்றிய பூரணபோதம் இருக்காது. தன் உடலிலிருந்து ஏதோ ஒன்று தொங்குவதாக மட்டுமே அவன் உணர்வான்.

மாற்றுப்பாலர்பால் உங்களுக்கு கவர்ச்சி இருக்காது. செக்ஸ் எண்ணமே உங்களிடம் இருக்காது. பெண்கள் கடவுளின் வடிவங்களாக உங்களுக்குத் தோன்றுவர். பணமும் பொன்னும் வெறும் கற்களாக உங்களுக்குக் காட்சி தரும். அனைத்துயிர்கள் பாலும் உங்களுக்கு ஆழ்ந்த அன்பு நிலவும். காமம், பேராசை, சினம், பொறாமை, கர்வம், மோகம் முதலியவற்றிலிருந்து நீங்கள் முற்றிலும் விடுபடுவீர்கள். உங்களை ஜனங்கள் இகழும்போதும், அடிக்கும் பொழுதும், துன்புறுத்தும் போதும் உங்கள் மனம் அமைதியாயிருக்கும். நீங்கள் கலங்காதிருப்பதன் காரணம் அந்தர்யாமியான பகவானிடமிருந்து உங்களுக்கு அளவற்ற ஆற்றல் வருவதால்தான். இன்ப துன்பம், வெற்றி தோல்வி, புகழ்ச்சி, இகழ்ச்சி, மரியாதை அவமரியாதை எல்லாம் உங்களுக்குச் சமமே.

கனவிலும் நீங்கள் கடவுளுடன் தொடர்பு கொள்ளுகிறீர்கள் எந்த உலகியல் படத்தையும் நீங்கள் பார்க்க மாட்டீர்கள்.

தொடக்கத்தில் நீங்கள் கடவுளுடன் சம்பாஷணை செய்வீர்கள். அவரது பூதஉடலுடன் நீங்கள் அவற்றைக் காண்பீர்கள். உங்களது உணர்வு பிரபஞ்சமயமாகும் பொழுது சம்பாஷணை நின்றுவிடும். நீங்கள் மேலான மொழி அல்லது இதய மொழியை ரசிப்பீர்கள். வைகரி (பேச்சு ஒலி) யிலிருந்து நீங்கள் மத்யமா, பச்யந்தி, பரா எனும் ஒலியின் சூட்சும நிலைகளை நீங்கள் அடைந்து ஒலியற்ற ஓம்கார பிரம்மனில் நீங்கள் லயிப்பீர்கள்.

வைராக்யம், விவேகம், அமைதி, தன்னடக்கம், மனதின் ஒருமைப்பாடு, அஹிம்ஸை, சத்யம், தூய்மை, பொறுமை, சகிப்புத்தன்மை, சினமின்மை, தொண்டுள்ளம், தியாகம், சர்வப்ரேமை அனைத்தும் உங்கள் சுபாவமான குணங்கள் ஆகிவிடும். நீங்கள் ஒரு பிரபஞ்ச நண்பனாகவும், க்ஷேமம் தருபவராகவும் ஆவீர்கள்.

தியான சமயத்தில் உங்களுக்கு நேர உணர்வு இருக்காது. நீங்கள் எந்த ஒலியையும் கேட்கமாட்டீர்கள். சூழ்நிலையைப் பற்றிய உணர்வும் உங்களிடம் இருக்காது. நீங்கள் உங்கள் பெயரையும் பிறருடன் உங்களுக்குள்ள அனைத்து உறவுகளையும் மறந்து விடுவீர்கள். பூரண அமைதியையும் ஆனந்தத்தையும் நீங்கள் படிப்படியாக அனுபவிப்பீர்கள். விரைவில் நீங்கள் ஸமாதியில் லயிப்பீர்கள்.

ஸமாதியை வார்த்தைகளால் விளக்கமுடியாது. அது மனம் வாக்கிற்கு அப்பாற்பட்டது. ஸமாதி அல்லது உணர்வு கடந்த நிலையில் தியானிப்பவர் தனது தனித்தன்மையை இழந்து பரமாத்மனுடன் ஒன்றிவிடுகிறார். அவர் ஆனந்தம், அமைதி மற்றும் அறிவின் சொரூபமாக ஆகிவிடுகிறார். இவ்வளவு

தான் சொல்ல முடியும். தொடர்ந்த தியானத்தினால் நீங்களே இதை உணரவேண்டும்.

திருப்தி, கலங்காதமனம், மகிழ்ச்சி, பொறுமை, சிறு அளவில் மலம் கழிதல், இனிய குரல், தியானம் செய்வதில் ஆர்வம், உறுதி, உலகாயத வெற்றியில் வெறுப்பு, தனிமையான அறையில் தனித்திருத்தலில் நாட்டம், சாது சன்யாசிகளுடன் தொடர்பு, ஏகாக்ரம் போன்றவை நீங்கள் தூய்மையிலும் ஆன்மீகப் பாதையிலும் முன்னேறுகிறீர்கள் என்பதற்கு அடையாளங்களாகும்.

தியானத்தின் பொழுது நீங்கள் மணி, பறை, இடி, சங்கு, வீணை, புல்லாங்குழல், வண்டின் ரீங்காரம் போன்ற பல அனாஹத ஒலிகளை கேட்பீர்கள். இந்த ஒலிகள் ஏதாவதொன்றில் மனம் நிலைநிறுத்தப்படலாம். இதுவும் உங்களை ஸமாதிக்கு இட்டுச் செல்லும். நீங்கள் தியானத்தின் போது பலவகையான நிறங்களையும் ஒளிகளையும் காண்பீர்கள். இது இலட்சியமல்ல. இந்த ஒளிகள், நிறங்களின் உற்பத்திஸ்தானத்தில் மனத்தை நீங்கள் கரைத்துவிட வேண்டும்.

வேதாந்த பாதையில் உள்ள ஒரு மாணவன் இந்த ஒலிகளையும் ஒளிகளையும் ஒதுக்கிவிடுகிறான். அவன் அனைத்து உருவங்களையும் ஒதுக்கித் தள்ளி உபநிஷத் மந்திரத்தில் தியானிக்கிறான். "அங்கே சூரியனோ, சந்திரனோ, நட்சத்திரங்களோ, மின்னலோ பிரகாசிப் பதில்லை. இந்த ஒளி எம்மாத்திரம்? அவன் ஒளிரும் பொழுது அவனால் அனைத்தும் ஒளிர்கின்றன. அவனது ஒளியால் இவை அனைத்தும் ஒளிர்கின்றன". அவன் இது போல தியானிக்கிறான் : " அங்கே காற்று வீசுவதில்லை. அக்னி தகிப்பதில்லை. அங்கே ஒலியோ, ஸ்பர்சமோ, வாசனையோ, நிறமோ மனமோ பிராணனோ அந்த அடிப்படைத் தத்துவத்தில் இருப்பதில்லை." "அசப்த, அஸ்பர்ச, அரூப, அகந்த, அப்ராண, அமன, அதீந்திரிய,

அத்ருச்ய, சிதானந்த ரூப சிவோஹம், சிவோஹம். நான் ஆனந்த சிவம், ஆனந்த சிவம்''.

## 63. ஆன்மீக அனுபவம் பற்றிய ஒரு உதாரணம்

குமாயூன் பகுதியின் கமிஷனர் ஸ்ரீ தாகுர்சிங், ஐ.ஸி.எஸ்., டேராடூன், லான்ட்ஸ்டௌன், நைனிடால் போன்ற ஆறு ஜில்லாக்களின் ஜில்லா மாஜிஸ்டிரேட்டுடன் இங்கே வந்திருந்தார். அவர்கள் வந்தவுடன் அவர்களுக்கு தேனீர் பானம் வழங்கப்பட்டது. அவர்கள் சிலர் கீதாபவன், பரமார்த்த நிகேதன் ஆகிய இடங்களுக்குச் செல்ல விரும்பினார்கள். ஆனால் கமிஷனர் சுவாமிஜியுடன் இருக்க விரும்பினார்.

"சுவாமிஜி! நான் உங்களைப் பார்த்து உங்களுடன் பல ஆன்மீக விஷயங்களைக் குறித்துப் பேசுவதற்காகத்தான் இங்கே வந்திருக்கிறேன். அதனால் தான் நான் அவர்களுடன் செல்லவில்லை" என்று தாகுர்சிங் சொன்னார். பிறகு அவர் சுவாமிஜியுடன் மனிதனது தலையாய கடமை, பல ஆன்மீக விஷயங்கள் குறித்து நீண்ட விவாதம் நடத்தினார். அதன் சாரம் கீழே தரப்படுகிறது.

"சுவாமிஜி! விஞ்ஞானம் எல்லா விஷயங்களிலும் அது எப்படி உருவாகிறது, வளர்கிறது என்பதைப் பற்றிய விளக்கம் தருகிறது. சுவாமிஜி இதைப்போல ஆன்மீக விஷயங்களில் சாதகன் மூன்று மாதங்களுக்குப் பிறகு, ஒரு வருடத்திற்குப் பிறகு படிப்படியாக எவ்விதம் வளர்ச்சி அடைகிறான் என்பதைக் குறிக்க அடையாளங்கள் இருக்கின்றனவா, என்று தாகுர்சிங் கேட்டார்.

"பல்வகை யோகங்கள் பல வித அனுபவங்களைத் தருகின்றன" - சுவாமிஜி பதில் சொன்னார். உதாரணமாக பிராணாயாமம், ஹடயோக கிரியைகள் படிப்படியான

மானசிக அனுபவங்களைத் தருகின்றன. சகல விதமான விண் வெளி ஒளிகள், அனாஹத ஒலிகளைக் கேட்டல் இந்த வகையைச் சாரும். இந்த யோகங்களைத் தந்த முனிவர்கள் திட்டவட்டமான ஆன்மீக அனுபவ நிலைகளைத் தந்துள்ளனர். சக்ரத்திலிருந்து சக்கரத்திற்கு குண்டலினி செல்லும்பொழுது யோகி சில குறிப்பிட்ட திட்டவட்டமான அனுபவங்களைப் பெறுகிறான். அதற்குக் காரணம் ஒவ்வொரு சக்கரமும் குறிப்பிட்ட தத்துவம், அதை வெல்லுவதுடன் தொடர்பு கொண்டுள்ளது. அது குறிப்பிட்ட அனுபவங்களை அளிக்கிறது.

இதைப் போல தாந்திரிக சாதனையிலும் அவர்கள் ஆன்மீக அனுபவம் குறித்த ஒரு திட்டவட்டமான பட்டியலையே தந்துள்ளனர். ஒவ்வொரு சாதனைக்கும் அதற்கென்றே அமைந்த ஒரு சித்து உண்டு. எனவே குறிப்பிட்ட சாதனையில் ஈடுபடும் எல்லா சாதகர்களின் அனுபவமும் ஒன்றேதான்

ஆனால் இவையெல்லாம் மட்டமான கீழ்நிலை அனுபவங்கள். அவை வெறும் உளநிலை அனுபவங்களே யன்றி சாதகனின் ஆன்மீக முன்னேற்றத்தைக் குறிப்பதில்லை. பக்தனது அனுபவங்களான மெய் சிலிர்த்தல், கண்ணீர் உகுத்தல் போன்றவை கூட ஹடயோகம் அனுபவங்கள் போல வகைப்படுத்தாவிடினும், ஆன்மீக முன்னேற்றத்தைக் குறிக்கமாட்டா.

நீங்கள் ஆன்மீக உலகில் புகுகையில் நீங்கள் எல்லையற்ற பரம்பொருளின் சாம்ராஜ்யத்தினுள் புகுகிறீர்கள். யோகங்கள் எண்ணற்றவை. அனுபவங்களும் எண்ணற்றவை. ஒவ்வொருவனுடைய யோகமும் அவனுக்கென்றே அமைந்ததாகும். ஏனெனில் ஒவ்வொருவனும் அவனது ஸம்ஸ்காரங்களையும் வாசனைகளையும் கொணர்ந்திருக் கிறான். எனவே இலட்சியத்தை அடைய அவன் தன்

வழியில் முயலுகிறான். இவை இரண்டும் ஒன்றோடொன்று இணைந்து செயல்பட்டு அவனுக்கு பல்வேறு அனுபவங்களை அளிக்கின்றன. ஏனெனில் அவன் அழியாத அமர ஆத்மனை அணுகுமளவு சாதகன் மிகுந்த மன அமைதியையும் சொல்லொணா இன்பத்தையும் அனுபவிக்கிறான். அவனைச் சுற்றி நடப்பனவற்றால் அவன் எளிதில் பாதிக்கப்படுவதில்லை. இது மட்டுமல்ல. அவனது தொடர்பில் வருபவர்கள் அத்தனை பேருக்கும் அவன் அமைதியையும் ஆனந்தத்தையும் அளிக்கவல்லவனாகிறான். அவன் நல்லவன் ஆகிறான். நல்லதை எங்கும் பரப்புகிறான். ஆன்மீக முன்னேற்றத்தின் மிக முக்கியமான அடையாளம் இதுதான். கடவுள் பூரண நன்மையாவார். எனவே கடவுளை நோக்கி முன்னேறும் சாதகன் நன்மையில் வளர்ச்சி அடைகிறான். அவனது தீய குணங்கள் படிப்படியாக மறைந்து அந்த இடத்தை நல்ல குணங்கள் நிரப்புகின்றன. இந்த மிக முக்கியமான அம்சம் இல்லையெனில் மற்ற எல்லா காட்சிகளும், ஒலிகளும் அர்த்தமற்றவையாகும். அவனது வெறும் சாந்நித்யத்தினாலேயே மிகவும் மேல்நிலையில் உள்ள யோகி ஜனங்களை வெறுப்பும் பொறாமையும் நீங்கிய நல்ல வாழ்க்கை வாழ உற்சாக மூட்டுகிறார். அவனது இதயம் பரந்த அன்பினால் நிரம்புகிறது. எனவே அவன் அனைவருக்கும் தன்னலமின்றி இயல்பாகவே தொண்டு புரிகிறார். இவையெல்லாம் ஆன்மீக முன்னேற்றத்தின் உண்மையான அடையாளங்களாகும்.

ஆனால் இவற்றையெல்லாம் கடந்து நிற்கிறது உச்சநிலை அனுபவம். அதை விவரிக்க முடியாது. அமைதி, ஆனந்தம், இடையூறு அற்ற மன அமைதி - இவை அனைத்தும் முன்னேற்றத்தின் அறிகுறிகள். அவை இலட்சியமாகமாட்டா. இலட்சியம் இறைவனாக ஆவதுதான். நீங்கள் இறைவனுடன் ஒன்றிவிட வேண்டும். ஒருவன் தூய்மை மற்றும் நன்மையில்

நிலைபெற்ற பின் இடையறாத தியானப் பயிற்சியினால் தான் இது அடையப்படுகிறது. கடவுளுடன் ஐக்கியமாகும் யோகியின் உயர்ந்த அனுபவத்தை வார்த்தைகளால் விளக்கமுடியாது.

தனக்கு இயல்பாயிருந்த சில அக ஆற்றல்களைப் பற்றி தாகுர்சிங் சொன்னார். அதற்கு சுவாமிஜி, "அது நல்லது. உங்கள் பூர்வஜன்மத்தில் நீங்கள் யோகத்தைப் பயின்று நல்ல ஆன்மீக முன்னேற்றம் அடைந்திருக்கிறீர்கள் என்பதை அது குறிக்கிறது" என்றார்.

அத்யாயம் ஒன்பது

# ஞானயோகியின் அனுபவங்கள்

## 64. ஞானயோகத்தில் பல்வகை அனுபவங்கள்

ஞானயோக மாணவர் பொருள்களைப் பற்றிய அனைத்து எண்ணங்களையும் இல்லாதாக்குகிறார். அவர் விவேகத்தால் அறியாமை இருளை அகற்றுகிறார். பிறகு அவர் முன் பிரகாசமான ஒளி தோன்றுகிறது.

அவருக்கு ஒருவிதமான நித்திரை ஏற்படுகிறது.

பிறகு அவர் சூன்யத்தை எதிரிடுகிறார் - ஆகாசம்.

பிறகு மோஹம் தோன்றுகிறது. ஞானயோகி இந்த மோகத்தை விசாரத்தின் மூலம் அகற்றுகிறார்.

இருள், ஒளி, நித்திரை, மோகம் முதலான நிலைகளைக் கடந்து முனிவர் கடைசியில் நிர்விகல்ப ஸமாதி நிலையை அடைகிறார். இப்பொழுது அவர் பூரண மோனநிலையை அனுபவிக்கிறார். உண்மையான ஞானத்தை அவர் அடைகிறார். நித்திய ஞானம், எங்கும் நிறைந்த பூரண உணர்வு மயமாக அவர் ஆகிவிடுகிறார்.

அமிருதசாகரத்தில் அவர் மூழ்குகிறார். பார்க்கப்படும் பொருள்கள் இன்றி பார்ப்பவர் மட்டுமே இருக்கும் நித்திய ஆனந்தத்தை அவர் அனுபவிக்கிறார்.

அவரது மனம் ஞான மயமாக ஆகிவிடுகிறது. அது சித் சொரூபமாக - உணர்வு மயமாக ஆகிவிடுகிறது. அலைகளற்ற கடல் போல, பொருள்களைப் பற்றிய காட்சிகள் எதுவுமின்றி சலனமின்றிய சமநிலையை அது அடைகிறது.

பொருள்களிடம் எல்லாப் பற்றுக்களும் நீங்கியவராக முனிவர் எங்கும் நிறைந்த ஞானமயமாக ஆகிறார். அனைத்தையும் கடந்த ஞான நிலையை அவர் அடைகிறார். அந்நிலையில் உண்மை மட்டுமே எஞ்சுகிறது. அவர் ஞானசாகரமாக எங்கும் நிறைந்த பூரண உணர்வாக ஆகிறார்.

ஆத்மானந்த தடாகத்தில் அன்னம் தானே விளையாடு கிறது. முனிவர் தனது ஆத்மா ஆனந்தத்தில் தானே அனுபவிக்கிறார்.

## 65. நால் வகை ஞானியர்

பிரம்மவித், பிரம்மவித் - வர, பிரம்மவித் வரீயான், பிரம்மவித் - வரிஷ்ட என்று ஜீவன்முக்தரிடம் நிலவும் சாத்விக அஹங்காரத்தின் தரத்திற்கேற்ப நான்கு வகை ஞானிகள் உண்டு.

நான்காவது பூமிகாவில் இருக்கும் ஒருவரே பிரம்மவித் (ஸத்வா பத்தி) ஐந்தாவது பூமிகாவான அஸம்சக்தியில் இருப்பவர் பிரம்மவித்வரர். ஆறாவது பூமிகாவில் இருப்பவர் பிரம்மவித் வரீயான் (பதார்த்த பாவனை) ஏழாவது பூமிகாவான துரீயத்தில் இருப்பவர் பிரம்மவித்வரிஷ்டர். பிரம்மவித் வரிஷ்டர் யாண்டும் ஸமாதியில் லயித்திருக்கிறார். அவருக்குப் பலவந்தமா உணவு ஊட்டவேண்டும். அவர் விதேக முக்தர். அவர் லோகசங்ரகம் அல்லது உலக க்ஷேமத்திற்காக எந்த செயலையும் செய்யமாட்டார். ஜடபரதர் கும்பகோணம் மௌனி சுவாமி, மகாராஷ்டிராவைச் சேர்ந்த அகல்கோட் சுவாமி ஆகியோர் பிரம்மவித் வரிஷ்டர்கள். அவர்களுக்கு உடல் உணர்வே இல்லை. வித் அல்லது வர என்பவருக்கு ஸம்ஸ்காரம் அல்லது மன அளவிலான உடல் உணர்வு லேசாக உள்ளது. வித் அல்லது வரர் உலகில்

பணிபுரியலாம். சிலர் அவதூதரைப் போல வேடம் தரித்து உடைகளை தூர எறிந்துவிடுகின்றனர். உண்மையான அவதூதர் முழு நிர்வாணமாயிருப்பார். அவர் யாண்டும் பிரம்மனில் லயித்திருப்பதால் அவர் உடலையே மறந்துவிடுகிறார். சூழ்நிலையையும் மறந்த அவரது உடலிலிருந்து குடிகாரனின் உடலிலிருந்து உடைகள் தாமே கழலுவது போல உடைகள் தாமாகவே கழன்றுவிடுகின்றன. தீர்மானிப்பதில் ஒருவர் மிகவும் கவனமாயிருக்கவேண்டும்.

## 66. ஞானத்தின் ஏழு நிலைகள்

சுபேச்சா, விசாரணை, தனுமானஸி, ஸத்வாபத்தி, அஸம்சக்தி, பதார்த்த பாவனை, துரீயம் என்பவை ஞானத்தின் ஏழு நிலைகளாகும்.

1. *சுபேச்சா*: தான் அறியாமையில் இருப்பதை ஒருவன் உணர்ந்து, ஆன்ம ஞானத்தை அடைய வேண்டும் என்று எப்பொழுது விரும்புகிறானோ அவன் சுபேச்சா நிலையில் இருக்கிறான்.

2. *விசாரணை* : உலகின் உபயோகமற்ற தன்மையை ஒருவன் உணர்ந்து அறியாமையை அழிக்கும் விதம் குறித்து ஆராய்ந்து ஆன்மீக ஞானத்தை அடைவது பற்றி தீர சிந்திப்பானானால் அவன் விசாரணை நிலையில் இருப்பதாகக் கருதப்படுகிறான்.

3. *தனுமானஸி* : உலகப் பொருள்களில் எந்தவிதப் பற்றுதலும் இல்லாமல் மனமானது மெல்லிய நூல்போல, யாண்டும் ஆத்மத்தியானத்தில் திளைத்திருக்கிறதோ அப்பொழுது அவன் தனுமானஸியில் இருக்கிறான்.

4. *ஸத்வாபத்தி* : மனமானது தூய்மை அடைந்து ஸாத்விகமாகி தொடர்ந்த தியானத்தினால் ஆத்மாவில்

லயித்திருக்கையில் அவன் ஸத்வாபத்தியில் இருப்பதாகக் கருதப்படுகிறான்.

5. அசம்சக்தி : ஆத்ம ஞானத்தினால் ஒருவன் எப்பொழுது பொருளியல் உலகிலிருந்து முழுவதுமாக விடுபடுகிறானோ அப்பொழுது அவன் அசம்சக்தியில் உள்ளான்.

6. பதார்த்தபாவனை : உலகப் பொருள்கள் வெறும் ஜடப்பொருள்கள் அல்ல, உண்மையில் அவை பிரம்மமே என்று எப்பொழுது ஒருவன் உணருகின்றானோ அப்பொழுது அவன் பதார்த்தபாவனையில் இருப்பவனாகக் கருதப்படுகிறான்.

7. துரீயம் : ஒருவன் எப்பொழுது உலகின் பல் வகைப்பட்ட வேற்றுமைகளை முழுவதாக இல்லாதாக்கி அகண்ட, ஏகரஸ சச்சிதானந்த பரப்பிரம்மனை உணருகிறானோ அப்பொழுது அவன் துரீயத்தில் இருப்பதாக கருதப்படுகிறான். இந்தத் துரீயநிலை வாழ்வில் முக்தி அல்லது ஜீவன் முக்தி நிலை என்றும் அழைக்கப்படுகிறது.

புலனுலகப் பொருள்களில் உதாசீனம் அல்லது வைராக்யம், ஆத்ம ஞான நூல்களை வாசித்தல், பிரம்ம ஞானிகளுடன் தொடர்பு ஆகியவற்றால் ஆத்மானந்தம் அல்லது மோட்சத்தை அடைவதற்கான நாட்டமே சுபேச்சா அல்லது முதலாவது நிலை எனப்படுகிறது. சாதன சதுஷ்டயத்துடன் கூடிய சாதகன் சுருதிகளையும் 'தத்வமஸி' போன்ற மகாவாக்கியங்களையும் குருவின் பாதத்தில் அமர்ந்து கேட்டு பின் தான் கேட்டவற்றைப் பற்றி தீவிரமாக சிந்திக்கிறான். இதுவே விசாரணை எனப்படும் இரண்டாவது நிலை. இரண்டு நிலைகளின் பயிற்சியால் மனமானது அவன் விரும்பிய மாத்திரத்தில் பிரம்மத்தில்

லயிக்கிறது. மனமானது ஒரு நூலைப் போல மெல்லியதாகிறது. பிரம்மாகார விருத்தி தோற்றுவிக்கப் படுகிறது. இதுதான் தனுமானஸி எனப்படும் மூன்றாவது நிலை. மேலே சொன்ன மூன்று நிலைகளின் பயிற்சியால் எல்லா ஆசைகளும் இல்லாதாக்கப்படுகின்றன. தத்வ ஞானம் வளர்கிறது. மனம் சத்துவத்தால் நிரம்புகிறது. இதுவே நான்காவது படியான ஸத்வாபத்தியாகும். மனமானது படிப்படியாக பிரம்மத்தில் கரைகிறது. அசம்சக்தி எனப்படும் ஐந்தாவது நிலையில் அவனக்கு பொருள்கள் மற்றும் அவற்றின் சம்ஸ்காரங்கள் மற்றும் சங்கல்பங்களுடன் தொடர்பு இல்லாது போகிறது. அதன் பின் பதார்த்த பாவனை எனப்படும் ஆறாவது நிலை வருகிறது. புற மற்றும் அகப் பொருள்கள் அனைத்தினுடைய காட்சியும் இல்லாது போகின்றன. (அபாவ ப்ரதீதி). ஞானிக்கு ஏதாவது பொருள்களின் காட்சி இருக்குமானால் அது மற்றவர்களின் வற்புறுத்தலாலேயேதான் இருக்கும். ஏழாவது நிலை துரீயம் எனப்படுகிறது. ஞானி ஆத்ம ஆனந்தத்தில் மூழ்கியிருக் கிறான். அவனுக்குப் பன்மை உணர்வு அனைத்தும் இல்லாதாகி விடுகிறது. புற அல்லது அக திரிபுடி எதுவும் இல்லை.

முதல் மூன்று பூமிகளில் செயல்படுபவன் முமுட்சு எனப்படுகிறான். நான்காவது பூமிகாவில் செயல்படுபவன் பிரம்மவித் எனப்படுகிறான். ஐந்தாவது பூமிகாவில் செயல்படுபவன் பிரம்மவித்வரன் எனப்படுகிறான். ஆறாவது பூமிகாவில் செயல்படுபவன் பிரம்மவித் வரீயான் என்று அழைக்கப்படுகிறான். ஏழாவது பூமிகாவில் செயல்படுபவன் பிரம்மவித் வரிஷ்டன் எனப்படுகிறான்.

வாமதேவர், ஜடபரதர், அகல்கோட் சுவாமி (மகாராஷ்டிரா) காலம் சென்ற கும்பகோணம் மௌனி சுவாமி ஆகியோர் பிரம்மவித்வரீயான் மற்றும்

பிரம்மவித்வரிஷ்டன் ஆவர். அவர்கள் பூரண அவதூதர்கள். உணவைப் பலவந்தமாக அவர்களது வாய்க்குள் திணிக்க வேண்டியிருந்தது. தங்களது உடல் மற்றும் சூழ்நிலையைப் பற்றிய எந்த உணர்வுமே அவர்களுக்கு இல்லை. ஸ்ரீ சங்கரர் செய்ததைப் போல அவர்களால் உலகிற்கு நன்மை எதுவும் செய்ய முடியவில்லை. நான்காவது, ஐந்தாவது பூமிகாவில் இருக்கும் ஞானியால் தான் உலகக்ஷேமத்திற்காக செயல்பட முடியும். ஸ்ரீ சங்கரர், ராஜா ஜனகர் போன்றோர் இந்த வகையில் அடங்குவர். ஆறாவது ஏழாவது பூமிகாவில் இருக்கும் ஞானியர் உலகத்திற்கு தொண்டு செய்ய விரும்பினால் நான்காவது ஐந்தாவது பூமிகாவிற்கு இறங்கி வரவேண்டும்.

உடல் உணர்வு சிறிதும் அற்ற ஏழாவது பூமிகாவில் உள்ள பூரண ஞானி 14 நாட்களுக்கு மேல் உயிர் வாழ முடியாது. (2 அல்லது 3 நாள் முதல் 14 நாள் வரை). இந்தப் 14 நாட்களுக்குள் அவரது சரீரம் தானே விழுந்துவிடும். மேற்கத்திய உளவியலார் இதை 7 நாட்கள் என்கின்றனர்.

பிரம்மஞானம் நான்காவது பூமிகாவில் தோன்றுகிறது என்பது ஒரு வகை சிந்தனையாளர்களின் கூற்று. மற்றொரு வகையினரின் கருத்துப்படி ஏழாவது பூமிகாவில் தான் பிரம்மஞானம் அடையமுடியும். நான்கு ஐந்து, ஆறாவது நிலைகள் அதற்கான படிகளே ஆகும் என்பதாகும். வாசனைகளின் நீக்கத்தின் தரத்திற்கேற்ப இந்த வெவ்வேறு நிலைகள் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றன.

துரீயத்தில் இரட்டை உணர்வு உள்ளது. ஞானி தன்னை பிரம்மனோடு ஒன்றித்துக் காண்கிறார். ஆனால் ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி அவஸ்தைகளின் சாட்சியாக அவர் இருக்கிறார். துரீயாதீதத்தில் ஸாக்ஷிபாவம் மறைகிறது. தூய நிர்விகல்பத்தில் ஞானி லயித்திருக்கிறார். புற, அக, உலகம் எதுவுமே அவர் காட்சியில் இல்லை.

துரியாதீத நபர்களை சிலர் விதேக முக்தர்கள் என்று அழைக்கிறார்கள். ஞானி தனது பூத உடலை விட்டால்தான் விதேக முக்தி கிட்டும் என சிலர் சொல்கிறார்கள். அது சரியல்ல. ஒருவர் உயிருடன் இருக்கும்பொழுதே விதேகமுக்தியை அடையமுடியும். ஜனகர் விதேஹர் என்று அழைக்கப்பட்டார். (உடல் அற்றவர் விதேகர்). வாமதேவர், ஜடபரதர், தத்தாத்ரேயர் ஆகியோர் அவர்கள் உயிருடன் இருக்கும்பொழுதே விதேக முக்தர்கள் எனப்பட்டார்கள். விதேக முக்தியில் ஞானிக்கு உடல் உணர்வு இல்லை. எனவே அது விதேகமுக்தி எனப்படுகிறது. ஈசுவரனிடத்தும் இரட்டை உணர்வு உள்ளது. பிரபஞ்சபிரளயத்தில் மட்டுமே அவர் தூய நிர்விகல்ப உணர்வைப் பெற்றிருக்கிறார். ஏழாவது நிலைக்கு செல்ல ஞானி தனது உலக க்ஷேம செயல்கள் அனைத்தையும் விட்டுவிட வேண்டும்.

சிறிது தவம், வைராக்யம், திதிக்ஷை, உடல் கட்டுப்பாடு (காஷ்ட மௌனம்) இருக்கும் சிலர் ஏழாவது பூமிகா ஞானிகள் எனத் தவறாகக் கருதப்படுகின்றனர். ஏழாவது பூமிகா ஞானி மிகமிக அரிது. மேலே சொன்ன தபஸ்வி ஒரு ஞானியைப் போலத் தென்படுவார். அது செயல்களின் மாறுபாட்டால் ஏற்படுத்தப்பட்ட ஒரு தோற்றமேயாகும். சில புதிய வழக்கங்களை அவர் பெற்றிருக்கலாம். ஒரே இடத்தில் அவர் அமரலாம். எவரையும் அவர் பார்க்கமாட்டார். திராதக் பயிற்சியினால் ஒரே இடத்தில் குத்திட்ட பார்வையை அவர் பெற்று விளங்கலாம். உணவு உண்ண அவர் விருப்பம் காட்டாமல் இருக்கலாம். சுடுமணலில் அவர் புரள்லாம். பனிக்கட்டியில் அவர் அமரலாம். இவை அனைத்தும் வெறும் பௌதிக திதிக்ஷைப் பயிற்சிகளே. அவற்றிற்கும் ஞானத்திற்கும் சம்பந்தமேயில்லை. ஞானம் என்பது தூய அந்தரங்க அனுபவநிலை. தபஸ்வியும் திதிக்ஷுயும் அகமுக பிரம்மவிசார நிலையைப் பெற்றிருக்கமாட்டார்கள். உங்களது முடிவில் நீங்கள் மிகமிக கவனமாக இருத்தல் வேண்டும்.

நீங்கள் ஒரு தூய மனிதராக இருக்க வேண்டும். ஒரு ஞானியுடன் நீங்கள் வெகுகாலம் வசிக்க வேண்டும். அவரது முந்தைய வாழ்வு, நடத்தை, சாஸ்திர பயிற்சி, தவ வாழ்க்கை, அவரது குரு போன்ற விஷயங்களை நீங்கள் நன்கு தெரிந்து வைத்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஒரு நல்ல முடிவிற்கு உங்களால் வரமுடியும். ஒரு ஷேக்ஸ்பியரை மற்றொரு ஷேக்ஸ்பியரால் தான் புரிந்து கொள்ள முடியும். ஒரு ஞானியை மற்றொரு ஞானியால் தான் புரிந்து கொள்ள முடியும். ஞானியைக் கண்டறிவது மிகவும் கடினம்.

## 67. ஜீவன் முக்தரின் இரட்டை உணர்வு

ஜீவன் முக்தர் என்பவர் விடுதலை பெற்ற முனிவர். அவர் பிறப்பிறப்புச் சக்கரத்திலிருந்து விடுபட்டவர். வாழும் பொழுதே அவர் முக்தி பெற்றவர். ஆணவம், காமம், கோபம், பேராசை, சுயநலம், கர்வம், விருப்பு வெறுப்புக்கள், சோர்வு, ஊக்கம் போன்ற அனைத்திடமிருந்தும் அவர் விடுபட்டவர். பிரம்மனின் பரஞானம் அவருக்கு உண்டு. எல்லா சந்தேகங்களிலிருந்தும் அவர் விடுபட்டவர். அறிய வேண்டியதோ, அடையப்படவேண்டியதோ எதுவும் அவருக்குக் கிடையாது.

ஜீவன்முக்தருக்கு இரட்டை உணர்வு உண்டு. அவர் ஸமாதியில் ஆழ்ந்திருக்கலாம். அல்லது உலக நன்மைக்காக அவர் ஒரு சாதாரண மனிதரைப் போல வேலை செய்யலாம். "நான் ஒரு சாட்சி. செய்பவன் அல்ல (அகர்த்தா). அனுபவிப்பவன் அல்லன் (அபோக்தா)" என்று உள்ளே எண்ணுபவராக, பற்றற்ற பணியாளராக, பிரபஞ்ச சக்தியைப் பூர்த்தி செய்யும் நபராகத் தென்படுவார். உலகம் அவருக்கு ஒரு கானல் நீராகத் தென்படும். ஒரு குழந்தையைப் போல அவர் பொருள்களை அனுபவிப்பார். அவர் சதா பிரம்மனில் லயித்திருப்பதால் அவை அவரைக்

களங்கப்படுத்தமாட்டா. கனவில் காண்பதைப் போல அவர் உலகைக் காண்கிறார்.

சுவர் மீது உட்கார்ந்திருக்கும் நபரைப் போல ஜீவன் முக்தர் தோற்றமளிக்கிறார். ஒரு புறம் உலகத் தோற்றத்தின் கட்டுப்பட்ட நிலை. மறுபுறம் ஆத்மஞானத்தில் மட்டுமே தென்படும் கட்டுப்படாத பூரணபோதம். உலகின் ஒருபுறம் உட்கார்ந்திருக்கும் ஒருவனால் மறுபுறம் நடப்பதைத் தெரிந்து கொள்ளமுடியாது. உலகியல் மனிதனுக்கு பிரம்மஞானம் கிட்டாது. அதுபோல பிரம்மத்தில் லயித்த விதேஹ முக்தனுக்கு இல்லாத உலகம் எப்படித் தென்படும்? இவ்விதம் உலக க்ஷேமத்திற்காக செயல்பட முடியாத நிலையில் விதேஹ முக்தன் இருக்கின்றான்.

இருபுறமும் உணரத்தக்க நிலையில் உள்ள சுவர் மீதிருக்கும் மனிதனைப் போல இரட்டை உணர்வு உள்ள ஜீவன் முக்தன் விசேஷமானதொரு நிலையில் உள்ளான். அவரது பிரம்ம ஞானம் மீட்க முடியாதது. அவரது பேருணர்வு நிலையிலிருந்து அவரை அசைக்க முடியாது இருந்தாலும் உலக காரியத்தில் ஈடுபடுவதற்காக அவர் தமது உணர்வின் ஒரு சிறு பகுதியைத் திருப்புகிறார். இரட்டை உணர்வு பெற்றவர்களில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் ஒரு சிறிய எடுத்துக்காட்டு.

## 68. ஸமாதி ஞானியும் வியவஹார ஞானியும்

ஆத்ம ஒருமை உணர்வு உள்ளவரே ஞானி. எவரிடம் வியவஹார அபேக்ஷை (உலக காரியம் செய்வதற்கான நாட்டம்) இருக்கிறதோ அவர் வ்யவஹார ஞானி. அவர் உலக க்ஷேமச் செயல்களில் ஈடுபடுகிறார். செயல் புரிவதற்கான அவரது இந்த வேட்கை அவரது பிராரப்த பலனாகும். தச்சன் தனது கருவிகளை இயக்குவதுபோல அவர் தனது உடலையும் மனத்தையும் பயன்படுத்துகிறார். அவருக்கும்

திரிபுடி உண்டு. ஆனால் உலகம் அனைத்தையும் அவர் தன்னுள்ளே காண்கிறார். அவர் வெளியில் எதையும் காண்பதில்லை. அவர் தனது ஊனக் கண்களால் அல்லாமல் ஞானக் கண்களால் காண்கிறார். ஒரு ஞானி உலகை எப்படிக் காண்கிறார், எப்படிச் செயல்படுகிறார் என்பதை உலகியல் அறிவுள்ள லோகாயதவாதியால் புரிந்து கொள்ளமுடியாது. ஒரு குச்சியால் தரையில் கிழித்த கோட்டின் பதிவு மாதிரி தண்ணீரில் கிழித்த கோடு இருக்காது அல்லவா! இந்த இரு வகை ஞானியருக்கும் இடையில் உள்ள வேறுபாடும் இத்தகையதுதான். வியவஹார ஞானியிடம் நிர்விகல்ப ஸமாதி அல்லது பிரம்மாகார விருத்தி ஸ்திதியானது ஸமாதி ஞானியினுடையதைப் போல நீடித்தும் ஆழ்ந்தும் இருக்காது. முந்தையதில் அது நீர் மேல் கிழித்த கோடு போன்றது பிந்தையது தரைமேல் கிழித்த கோடு போன்றது. தைலதாரை அல்லது எண்ணெய் ஒழுக்கைப் போல அது தொடர்ச்சியானது.

வியவஹார ஞானிக்கு இது மலம், இது சந்தனம், இவன் முட்டாள், இவன் அறிவாளி, இவன் அதிகாரி, இவன் அனதிகாரி, இது வெற்றி, இது தோல்வி, இவன் யோக்யன், இவன் அயோக்யன் என்ற பாகுபாடு தெரியும். ஆனால் அவரது உணர்ச்சிகளில் எந்தவித பாதிப்பும் இருக்காது. வெற்றியில் மகிழ்ச்சியோ தோல்வியில் வருத்தமோ அவருக்கு இருக்காது. யோக்கியனை அவர் விரும்புவதும், அயோக்கியனை வெறுப்பதும் கிடையாது. இந்தவிதமாக அவர் சமதிருஷ்டியை கொண்டு விளங்குகிறார்.

விரல் துண்டிக்கப்பட்டால் வியவஹார ஞானிக்கு வலி தெரியும். ஆனால் காலே துண்டிக்கப்பட்டால் கூட ஸமாதி ஞானிக்கு ஒரு சிறிதும் வலி தெரியாது. மூல்தானைச் சேர்ந்த ஷாம்ஸ்டப்ரீஸ் மேற் சொன்ன உதாரணத்திற்கு சிறந்ததொரு எடுத்துக் காட்டு ஆவார். அவர் சவுக்கால் அடிக்கப்பட்ட

பொழுது அவர் 'ஸோஹம்' (அவனே நான்) என்ற பொருள் கொண்ட 'அனல்ஹக், அனல்ஹக்' என்று சிரித்துக் கொண்டே சொன்னார்.

வியவஹார ஞானி நாமரூபங்களைக் காண்கிறார். ஸமாதி ஞானி பிரபஞ்சத்திலிருந்து தன்னை உள்ளிழுத்துக் கொண்டு நாமரூபங்களைக் காண்கிறதேயில்லை.

இந்த இருவகை ஞானியரிடமும் அறிவு ஒன்றுதான். ஆனால் வியவஹார ஞானியைக் காட்டிலும் ஸமாதி ஞானி அதிக ஆனந்தத்தை அனுபவிக்கிறார்.

பிரம்மத்தில் யாண்டும் லயித்தவரே ஸமாதி ஞானி. அவர் நாம ரூபங்களைக் காண்பதில்லை. உலகம் அவருக்கு முற்றிலுமாக மறைந்துவிட்டது. மௌனியான அவரால வேலை செய்ய இயலாது. அவர் ஒரு முஸூப். அவர் ஒரு பரமஹம்ஸர். மகாராஷ்டிர அகல் கோட் சுவாமி, 25 வருடங்கள் அத்வைத ஸமாதியில் இருந்த கும்பகோணம் மௌனசுவாமி ஜடபரதர், ஸ்ரீதத்தாத்ரேயர் ஸமாதி ஞானிகள் ஆவர். அவர்கள் அனைவரும் பதார்த்த பாவனையான ஆறாவது, மற்றும் துரீயம் எனும் ஏழாவது ஞான பூமிகளைச் சார்ந்தவர்கள். அகல்கோட் சுவாமி மற்றும் கும்பகோணம் மௌன சுவாமி ஆகியோருக்கு தாங்கள் மலம் கழிக்கும் உணர்வு கூட கிடையாது. அவர்களது சீடர்கள்தான் கழுவிவிட வேண்டியிருந்தது. ஜனகர், ஸ்ரீசங்கரர் வியவஹார ஞானிகள் ஆவர். நான்காவதான ஸத்வாபத்தி மற்றும் ஐந்தாவதான அஸம் ஸக்தி ஞான பூமிகளில் இருந்தால் தான் வேலை செய்ய இயலும்.

பகவத் கீதை போன்ற நூல்களில் தரப்பட்டிருக்கும் ஞானியர் விளக்கம் மிகவும் அபூர்ணமானது, குறைவானது. அவரது நிலையை வார்த்தைகளால் விளக்க முடியாது. வரம்புக்கு உட்பட்ட மனதால் அவரது நிலையை கற்பனை

கூட செய்துபார்க்க முடியாது. அவர் தமது உயர்நிலையில் யாண்டும் ஒளிர்கிறார்.

ஒரு துளி ரத்தத்தை மைக்ராஸ்கோப்பின் அடியில் வைத்து நீங்கள் பரிசோதிக்கையில் திடுக்கிட்டுப் போவீர்கள். பல லட்சக்கணக்கான சிவப்பு ரத்த அணுக்கள், வெள்ளை அணுக்கள், லிகோஸைட்டுகள், லிம்பொசைட்டுகள், உட்கருக்கள், போன்றவற்றைக் காண்கிறீர்கள்.

இதைப் போல திவ்விய சக்ஷு எனப்படும் சக்திவாயந்த லென்ஸைக் கொண்ட ஞானி படைப்பின் முழுவிளக்கத்தையும் உள்ளபடி காண்கிறார். அவர் ஒரு மனிதனின் சூக்ஷ்ம சரீரம், ஸம்ஸ்காரங்களுடன் கூடிய காரண சரீரம், பிராண ஒளிவட்டம், மன ஒளிவட்டம், காந்த ஒளிவட்டம் ஆகியவற்றைக் காண்கிறார். ஸமாதி ஞானியின் வாயில், உணவை ஊட்ட வேண்டியுள்ளது. ஸமாதி ஞானி பிரம்மவித்வரீயான் அல்லது பிரம்மவித்வரிஷ்டராவார். வ்யஹார ஞானி பிரம்மவித் அல்லது பிரம்மவித்வரன் ஆவார்.

நீங்கள் ஒரு மூடிய அறைக்குள் இருக்கையில், ஒரு சிறிய கதவுத் துவாரம் வழியாக வெளியே பார்க்கையில், உங்களது பார்வை மிகமிக எல்லைக்குட்பட்டதாயிருக்கும். நீங்கள் சில மரங்கள், ஒரு சில நபர்கள் வானத்தின் ஒரு பகுதி ஆகியவற்றைக் காண்பீர்கள். ஆனால் நீங்கள் வெளியே வந்துவிட்டால் பரந்து விரிந்த காட்சியைக் காண்கிறீர்கள். அதுபோல நீங்கள் உங்கள் பௌதிகக் கண்களுடன் பார்க்கையில் பார்வை மிகவும் சுருங்கியதாயுள்ளது. ஞானி பிரபஞ்ச கண்மூலம், ஆத்ம கண்மூலம் உலகம் முழுவதையும் தன்னுள்ளேயே காண்கிறார்.

## 69. துறவியின் அனுபவம்

நான் யாண்டும் சுதந்திரன். இருப்பது நான் மட்டுமே. நான் மாசற்றவன், வெளியற்றவன், காலமற்றவன். எனக்குள் உலகம் கானல் நீர் போலக் காட்சி தருகிறது.

நான் எல்லையற்றவன், அழிவற்றவன், சுயம் ஜோதி, தன்னில் தானாயிருப்பவன். எனக்கு இன்பதுன்பம், சுகதுக்கம், மகிழ்ச்சி - துன்பம் எதுவுமே தெரியாது.

நான் ஆதியற்றவன். நான் அந்தமற்றவன். நான் அழிவற்றவன். நான் பிறப்பற்றவன். நான் மரணமற்றவன்.

நான் பிறந்ததேயில்லை. யாண்டும் நான் சுதந்திரன். நான் பூரணன். நான் தூயவன். நான் சுதந்திரன்.

நான் அமைதியானவன். நான் தூய அறிவு சொரூபம். நான் நன்மை தீமை, புண்ணிய பாபத்திற்கு அப்பாற் பட்டவன்.

நான் ஒருவன் நான் எங்கும் போவதில்லை, எங்கிருந்தும் வருவதில்லை. நான் என்னிலேயே இருக்கிறேன். நான் பிரபஞ்சம் முழுவதிலும் வியாபித்துள்ளேன். நான் அனைத்திலும் ஊடுருவியுள்ளேன்.

நான் முழுமுதற்பொருள். நான் இரண்டற்றவன். நான் தூய ஞானம். நான் தூய உணர்வு.

நான் எல்லையற்ற உணர்வு சாகரம். மனமாகிய காற்றே உலகங்களாகிய அலைகளை உண்டாக்குகிறது.

நான் எங்கும் நிறைந்த ஆத்மன். நான் அனைத்துயிர்களின் ஆத்மா. நானே அனைத்தினுடைய ஆதாரம்.

நான் பூரண ஞானமாகிய அமிருதம். நான் மனம், புத்தி, புலன்களுக்கு அப்பாற்பட்டவன்.

நான் பற்று அற்றவன் (அஸங்க). நான் அகர்த்தா (செய்பவன் அல்லன்). நான் அனுபவிப்பவன் அல்லன் (அபோக்தா). நான் மௌன சாட்சி.

தன்மை முன்னிலையிலிருந்து விடுபட்டவன் நான். நான் சச்சிதானந்தப்பரப்பிரம்மன்.

மாசற்ற ஒரே உண்மை நான்.

யாண்டும் நிலையான, அமைதியான, அசையாத, கலங்காத உண்மை நான்.

அழியாத அமிருதம் நான். அமரத் தன்மையை அளிக்கும் அறிவு நான். யாண்டும் ஆனந்தமான சிவம் நான்.

நான் களங்கமற்ற நிர்வாணம். நான் உணர்வின் நான்காவது நிலையாகிய துரீயம் நான். நான் இருப்பவன்.

நான் பூரணசுதந்திரம். நான் மேலான அமைதி நான் மேலான மோன சொரூபம்.

கால தேசம் அற்றவன் நான். நான் எல்லையற்றவன். பூரணன். முதலில் நான் ஆசைகளை விட்டேன். பிறகு பற்றுதலைத் துறந்தேன். இப்பொழுது நான் மேலான அமைதியில் லயிக்கிறேன்.

நான் அதிகம் பழகுவதில்லை. நான் அசைவதில்லை. நான் தியானிக்கிறேன். இப்பொழுது நான் நிரந்தர அமைதியை அனுபவிக்கிறேன்.

"நான் எங்கும் நிறைந்த அழியாத ஆத்மன்" இதை அறிந்து நான் பூரண அமைதியில் லயிக்கிறேன்.

நான் செயலையும், செய்ய வின்மையையும் துறந்து விட்டேன். நான் இப்பொழுது எந்த நிலையிலும் சந்தோஷமாக இருக்கிறேன். எனவே நான் பூரண அமைதியில் லயிக்கிறேன்.

புலன்பொருள்களே திருடர்கள். இந்த திருடர்களை நான் அழித்துவிட்டேன். நான் முற்றிலும் பாதுகாப்பாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறேன். நான் இப்பொழுது தூய அமைதியை அனுபவிக்கிறேன்.

## உலகம் ஒரு கனவு

***பிரபஞ்சத்தின் பொய்த்தன்மையை ஞானி எவ்வாறு தீர்மானிக்கிறார்?***

ஜாக்கிரத நிலையிலும் கனவு நிலையிலும் பொருள்கள் பார்ப்போனிடமிருந்து வேறுபட்டு 'பார்க்கப்படுகின்றன', 'பார்க்கப்படுதல்' என்பது இரண்டு அனுபவங்களுக்கும் பொதுவானது. நனவிலும் கனவிலும் பொருள் பார்ப்போன் உறவு உள்ளது. இரண்டிற்குமிடையில் உள்ள ஒற்றுமை இது தான். "பொருளாக ஏதோ ஒன்று பார்க்கப்படுகிறது" என்பதானது "ஏதோ ஒன்று ஆன்மாவிலிருந்து வேறுபட்டது" என்று பொருள்படுகிறது. அனாத்மாவின் அனுபவம் மாயையானது. ஏனெனில் அனாத்மா உண்மையானால், ஆத்மா உண்மை அல்ல என்றாய்விடும். அனாத்மாவின் மாய அனுபவம் நனவு மற்றும் கனவு நிலைகளுக்குப் பொதுவானது. நனவு நிலையில் மனம் புலன்கள் மூலம் அனுபவிக்கிறது. கனவில் மனம் மட்டுமே அனுபவிக்கிறது. இரண்டு நிலைகளிலும் அகத்திலோ புறத்திலோ அனுபவிப்பது மனமே.

நனவைக் கடந்தது கனவு. கனவைக் கடந்தது துரீயம். எனவே கனவும் நனவும் ஒன்றுக்கொன்று முரணானது. நனவு கனவிலிருந்தும், கனவு நனவிலிருந்தும் முரண்படுகிறது. ஒன்று இருக்கையில் மற்றது இல்லை. இரண்டில் ஒன்று தொடர்ந்து இருப்பதில்லை. இது இரண்டினுடையவும் உண்மை இன்மையை நிரூபிக்கிறது.

இரட்டை உண்மை அல்ல. ஏனெனில் இரட்டை சாஸ்வதத்தின் எதிரிடை. இரட்டை இன்றி பார்ப்பது இல்லை. எனவே நனவிலோ கனவிலோ எதுபார்க்கப் பட்டாலும் அது உண்மையாகாது. நனவு இல்லாதபோது கனவு உண்மை. கனவு இல்லாதபோது நனவு உண்மை. எனவே இரண்டுமே உண்மையற்ற அனுபவங்கள். அவற்றின் இருப்பிற்காக அவை ஒன்றை ஒன்று சார்ந்திருப்பவையாகும். மற்றதுடன் தொடர்புபடுத்தாமல் ஒருவன் நனவில் இருக்கிறானா அல்லது கனவில் இருக்கிறானா என்று சொல்ல முடியாது. நனவிலும் கனவிலும் ஆசைகளே அனைத்து அனுபவங்களின் நாயகர்கள். நனவு என்பது ஆசைகளின் பௌதிக செயல்பாடு. கனவு என்பது ஆசைகளின் மானசிக செயல்பாடு. நனவில் புலன்கள் ஆசைகளால் அசைக்கப் படுகின்றன. கனவில் மனம் புலன்களால் அசைக்கப் படுகிறது. இவ்விரு நிலைகளுமே ஓடும் ஓடைகளைப் போன்றவை. யாண்டும் அவை ஒரு நிலையில் இருப்பதில்லை. எது எப்பொழுதும் இருக்குமோ அதுவே உண்மை. நனவும் கனவும் ஆதியும் அந்தமும் உடையவை. பார்க்கப்படுபொருள்கள் அனைத்திற்கும் மாற்றம் தவிர்க்க முடியாததாகும். மாற்றம் என்பது துவக்கத்திலும் முடிவிலும் இல்லாததைக் குறிக்கிறது. எது ஆரம்பத்திலும் முடிவிலும் இல்லையோ அது இடையிலும் இல்லை. எனவே கனவைப் போல நனவும் உண்மையல்ல.

## பொய்மைக்கான காரணங்கள்

கனவிற்குக் காரணம் விழிப்புநிலை என்பதால் விழிப்பு நிலை மெய்யானது என்று சிலர் கூறலாம். ஆனால் விழிப்பு நிலைக்குக் காரணம் கனவாகாது. ஆனால் இதற்கு ஆதரவு இல்லாமலில்லை. விழிப்பு நிலை காரணம் என்றால் அது உண்மையானதாக இருத்தல் வேண்டும். அது

உண்மையாயின் அது எப்பொழுதும் இருத்தல்வேண்டும். விழிப்பு நிலையே உண்மையல்ல. ஏனெனில் அது எப்பொழுதும் இருப்பதில்லை. காரணமே மெய்யில்லையெனில் அது எவ்விதம் மெய்யான விளைவை உண்டாக்க முடியும்? இவை இரண்டுமே மெய்யில்லாத நிலைகள். விழிப்பு நிலையில் வயிறு நிறைய உண்ணும் ஒருவன் கனவு நிலையில் பசியோடிருப்பதாகவும், அதுபோல மாறியும் உணரலாம். பொருள்கள் ஒரு குறிப்பிட்ட நிலைமையில் உண்மைபோல தோன்றுகின்றன. அவை எப்பொழுதும் மெய்யாயிருப்பதில்லை. எப்பொழுதும் எது மெய்யாக இருப்பதில்லையோ, அது வெறும் தோற்றமே, மெய் அல்ல.

பொருளைப் பொருள் என்று அழைப்பதற்குக் காரணம், அதைப் பார்க்க ஒருவன் இருக்கிறான் என்பதால்தான், இதுபோல தன்மையைத் தன்மை என்பதற்குக் காரணம், பார்ப்பதற்கு ஒரு படர்க்கை இருப்பதால் தான் இரண்டில் எதுவும் தனித்திருக்க முடியாது. எனவே இரண்டுமே மெய்யானவை அல்ல. தன்மையும் படர்க்கையும் காரண காரியமாகத் தோன்றுகின்றன. ஒன்றோடொன்று தொடர்பு படுத்துவதனாலேயே மனமானது பொருள்களைக் காண்கிறது. காரணம் மாறாமல் இருக்கும் நேரமாற்றம் இருக்க முடியாது. காரியமின்றி காரணம் இருக்கமுடியாது. சிறிது நேரத்திற்கு மாறாமல் காரணத்தால் இருக்க முடியுமானால், அது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஏன் மாறவேண்டும் என்ற கேள்வியும் கூடவே எழுகிறது. ஒன்று காரணம் தொடர்ந்ததாக இருத்தல் வேண்டும். அல்லது காரணமே இருந்திருக்க வேண்டியதில்லை. காரணம் தொடர்ந்திருக்குமானால், காரணமும் காரியமும் ஒன்றிவிடுகின்றன. இரண்டு வேறு வேறு அல்ல. ஆனால் ஞானி காரண காரிய நியதியைக் கடந்து விடுகிறார். காரண காரிய சங்கிலியை ஆத்மஞானம் உடைக்கிறது.

அதன் விளைவாக வியவஹார உலகம் பொய்யாகத் தோன்றுகிறது.

## 70. உணர்ந்த ஞானியின் இலக்கணங்கள்

### ஒரு கதை

நன்கு படித்த ஒருவர் இன்று அலுவலகத்தில் சுவாமிஜியைப் தரிசிக்க வந்திருந்தார். அவர் சுவாமிஜியிடம் கேட்ட சில கேள்விகளுக்கு சுவாமிஜி உடனே பதில் சொன்னார். "சுவாமிஜி! நான் நிர்விகல்ப ஸமாதியைப் பற்றி கொஞ்சம் அறிந்து கொள்ள விரும்புகிறேன். நிர்விகல்ப ஸமாதி நிலையை அடைந்த ஒருவர் வெளிப்படையாக தான் அந்த நிலையை அடைந்துவிட்ட தாக சொல்லமாட்டார் என்று மறை நூல்கள் தெரிவிக் கின்றன. அப்படியானால் குறிப்பிட்ட ஒரு நபர் உயர் ஞானத்தைப் பெற்றுவிட்டார் என்று எப்படி நாம் தெரிந்து கொள்வது?", என்று அவர் கேட்டார். "அவரது செயல்கள், நடத்தை, பேச்சு, சமதிருஷ்டி, அமைதி, ஆனந்தம், பூரண அடக்கம், எல்லா நிலைமைகளிலும் சமமான மனநிலை, பரந்த அன்பு, ஸ்திதப்பிரக்ஞை (நிலைத்த ஞானம்) முதலியவற்றால் அறியலாம்", என்றார் சுவாமிஜி. "தான் நிர்விகல்ப ஸமாதி நிலையை அடைந்துவிட்டதை அவர் எப்படி அறிவார்?", இது கேள்வி கேட்டவரின் அடுத்த கேள்வி. "உபநிடத முனிவர்களின் அனுபவங்களுடன் அவரது அனுபவங்கள் இணைந்துபோகுமானால், பூரண அமைதியையும் ஆனந்தத்தையும் அவர் அனுபவிப் பாரானால், எத்தகைய மோசமான நிலைமையிலும் அவர் நிலைகுலையாத மனநிலையைப் பெற்று விளங்குவாரானால், அவரது சந்தேகங்கள் நீங்கியிருக்குமானால், வேற்றுமையில் நிலவும் ஒற்றுமையை அவர் காண்பாரானால் அனைத் துயிரிலும் இலங்கும் ஆன்மசொருபமே அவர், அகில

உலகமும் அவரது சரீரமே என்பதை அவர் உணர்வாரானால், ராகம், த்வேஷம், ஆணவம், சினம், கர்வம், காமம், பற்று முதலிய அனைத்திலிருந்தும் அவர் விடுபட்டிருப்பாரானால் அவரை ஞானம் அடைந்தவராகக் கருதலாம்".ஏழாவது நிலையான துரீயத்தைக் கடந்த துரீயாதீதரே விதேஹ முக்தர். அடுத்தவர்கள் அவருக்கு உணவை ஊட்ட வேண்டும். அவரால் தானாக உணவை எடுத்து உண்ணமுடியாது. ஜடபரதர் காலம் சென்ற கும்பகோணம் மௌனி சுவாமி, காலம் சென்ற மகாராஷ்டிரா அகல்கோட் சுவாமி விதேக முக்தர்கள். ஜீவன் முக்தர் நான்காவது நிலையான ஸத்வாபத்தியிலோ, ஐந்தாவது நிலையான அஸம் சக்தியிலோ, ஆறாவது நிலையான பதார்த்த பாவனையிலோ இருக்கிறார். உடலைப் பற்றிய லேசான உணர்வு ஸம்ஸ்காரம் அல்லது மன அளவில் அவரிடம் உள்ளது. அவரால் உணவைத் தன்னால் சாப்பிட முடியும். பிறர் அவருக்கு உணவை ஊட்ட வேண்டிய தேவையில்லை தூங்கும் ஒருவனுக்கு எத்தகைய உடல் உணர்வு இருக்குமோ அதைப்போன்ற உணர்வுதான் அவருக்கு இருக்கும். அவர் தூங்குகையில் அவரது உடலின் மீது சில ஈக்கள் அமருமானால் அவர் அதை உணராமலேயே விரட்டி விடுவார். ஜீவன் முக்தரது உடல் உணர்வு இத்தகையது. தமது பிராரப்தம் மற்றும் பூர்வ சம்ஸ்காரங்களின் தூண்டுதலினாலேயே அவர் தமது உடல் தேவைகளை இயந்திர ரீதியில் கவனிக்கிறார். விதேக முக்தர் நிலையை அடைந்த பிறகு விதேக முக்தர் அந்த இருபத்தொரு நாட்களுக்குள் தமது உடலை உகுத்து விடுவார்.

அத்யாயம் பத்து

# முக்தி நிலை

## 71. மோட்ச நிலையைப் பற்றி விரிவான விளக்கம்

### ஸத்யோ முக்தி

துக்கத்தை நிரந்தரமாக நீக்குதல், நிரந்தரமான இன்பத்தை அடைதல் என்ற பொதுவான இலட்சியத்தை நோக்கியே எல்லா முயற்சிகளும் அமைந்துள்ளன. ஆனந்தம் பூரணத்தில் மட்டுமே உள்ளது. துக்கம் அபூர்ணத்தில் உள்ளது. அபூர்ணத்தில்ஆனந்தமோ, பூர்ணத்தில் துக்கமோ கிடையாது. எனவே அபூர்ண வாழ்க்கையின் மேலான இலட்சியம் பூரண வாழ்க்கையை அடைவதேயாகும். ஞானம், தியானம் இரண்டினுடைய குறிக்கோளே பூரணத்தை உணர்வதுதான். ஜீவன் அடையவேண்டிய மிக மேலான தூயநிலை மோட்சமே. முக்தி என்பது உண்மையை உணர்வதே; முன்பு இல்லாத ஒன்றை அடைவது அல்ல; அதிக மகிழ்ச்சி உள்ள மற்றொரு உலகத்திற்குப் போவது அல்ல. அது நிரந்தர வாழ்வின் அறிவு, தூய சொரூபத்தின் அடிப்படைத் தன்மையை அறிதல். நாம் யாண்டும் சுதந்திரர்கள் என்பதை அறிந்து அடையும் சுதந்திரம் அது. அறிவு சுதந்திரத்தின் காரணம் மட்டுமல்ல, அதுவே சுதந்திரம்தான். மோட்சமே ஞானம். அது ஞானத்தின் விளைவு அல்ல. ஞானமே இருப்பு. எனவே அது மோட்சத்திலிருந்து வேறுபட்டது அல்ல. சித்தும் ஸத்தும் ஒன்றே. தன் நிலையில் இருப்பது தான் மோட்சம். தன்னை உணர்வதே, தானாய் இருப்பதே, அனைத்துமாய் இருப்பதே அது.

"மரணத்திற்குப் பிறகு ஜீவபோதம் இருக்காது" என்றார் யாக்ஞவல்க்யர். இருப்பது உணர்வு ஒன்றே என்பதால் மிக

உலகமும் அவரது சரீரமே என்பதை அவர் உணர்வாரானால், ராகம், த்வேஷம், ஆணவம், சினம், கர்வம், காமம், பற்று முதலிய அனைத்திலிருந்தும் அவர் விடுபட்டிருப்பாரானால் அவரை ஞானம் அடைந்தவராகக் கருதலாம்".ஏழாவது நிலையான துரீயத்தைக் கடந்த துரீயாதீதரே விதேஹ முக்தர். அடுத்தவர்கள் அவருக்கு உணவை ஊட்ட வேண்டும். அவரால் தானாக உணவை எடுத்து உண்ணமுடியாது. ஜடபரதர் காலம் சென்ற கும்பகோணம் மௌனி சுவாமி, காலம் சென்ற மகாராஷ்டிரா அகல்கோட் சுவாமி விதேக முக்தர்கள். ஜீவன் முக்தர் நான்காவது நிலையான ஸத்வாபத்தியிலோ, ஐந்தாவது நிலையான அஸம் சக்தியிலோ, ஆறாவது நிலையான பதார்த்த பாவனையிலோ இருக்கிறார். உடலைப் பற்றிய லேசான உணர்வு ஸம்ஸ்காரம் அல்லது மன அளவில் அவரிடம் உள்ளது. அவரால் உணவைத் தன்னால் சாப்பிட முடியும். பிறர் அவருக்கு உணவை ஊட்ட வேண்டிய தேவையில்லை. தூங்கும் ஒருவனுக்கு எத்தகைய உடல் உணர்வு இருக்குமோ அதைப்போன்ற உணர்வுதான் அவருக்கு இருக்கும். அவர் தூங்குகையில் அவரது உடலின் மீது சில ஈக்கள் அமருமானால் அவர் அதை உணராமலேயே விரட்டி விடுவார். ஜீவன் முக்தரது உடல் உணர்வு இத்தகையது. தமது பிராரப்தம் மற்றும் பூர்வ சம்ஸ்காரங்களின் தூண்டுதலினாலேயே அவர் தமது உடல் தேவைகளை இயந்திர ரீதியில் கவனிக்கிறார். அந்த நிலையை அடைந்த பிறகு விதேக முக்தர் ஏழு முதல் இருபத்தொரு நாட்களுக்குள் தமது உடலை உகுத்து விடுவார்.

அத்யாயம் பத்து

# முக்தி நிலை

## 71. மோட்ச நிலையைப் பற்றி விரிவான விளக்கம்

### ஸத்யோ முக்தி

துக்கத்தை நிரந்தரமாக நீக்குதல், நிரந்தரமான இன்பத்தை அடைதல் என்ற பொதுவான இலட்சியத்தை நோக்கியே எல்லா முயற்சிகளும் அமைந்துள்ளன. ஆனந்தம் பூரணத்தில் மட்டுமே உள்ளது. துக்கம் அபூர்ணத்தில் உள்ளது. அபூர்ணத்தில்ஆனந்தமோ, பூர்ணத்தில் துக்கமோ கிடையாது. எனவே அபூர்ண வாழ்க்கையின் மேலான இலட்சியம் பூரண வாழ்க்கையை அடைவதேயாகும். ஞானம், தியானம் இரண்டினுடைய குறிக்கோளே பூரணத்தை உணர்வதுதான். ஜீவன் அடையவேண்டிய மிக மேலான தூயநிலை மோட்சமே. முக்தி என்பது உண்மையை உணர்வதே; முன்பு இல்லாத ஒன்றை அடைவது அல்ல; அதிக மகிழ்ச்சி உள்ள மற்றொரு உலகத்திற்குப் போவது அல்ல. அது நிரந்தர வாழ்வின் அறிவு, தூய சொரூபத்தின் அடிப்படைத் தன்மையை அறிதல். நாம் யாண்டும் சுதந்திரர்கள் என்பதை அறிந்து அடையும் சுதந்திரம் அது. அறிவு சுதந்திரத்தின் காரணம் மட்டுமல்ல, அதுவே சுதந்திரம்தான். மோட்சமே ஞானம். அது ஞானத்தின் விளைவு அல்ல. ஞானமே இருப்பு. எனவே அது மோட்சத்திலிருந்து வேறுபட்டது அல்ல. சித்தும் ஸத்தும் ஒன்றே. தன் நிலையில் இருப்பது தான் மோட்சம். தன்னை உணர்வதே, தானாய் இருப்பதே, அனைத்துமாய் இருப்பதே அது.

"மரணத்திற்குப் பிறகு ஜீவபோதம் இருக்காது" என்றார் யாக்ஞவல்க்யர். இருப்பது உணர்வு ஒன்றே என்பதால் மிக

உயர்ந்த நிலையில் அறியப்பட வேண்டிய உணர்வு என்ற ஒன்று கிடையாது. பூரண வாழ்வின் முழுத்தன்மையே அது. அதுவே உள்ளது, வேறு எதுவுமல்ல, அது பார்க்கிறது, எதையுமல்ல; அது கேட்கிறது, ஆனால் வேறு எதையுமல்ல. அது அறிகிறது, ஆனால் வேறு எதையுமல்ல. அது இல்லாத வேறு எந்த இடத்திற்கும் போவது கிடையாது. அதனிடம் இல்லாத எதையும் அது பெறுவது கிடையாது," என்பது உண்மை விளக்கமாகும். அது ஈசுவரனைப் பற்றிய சுயபோதமே தவிர பிரம்மத்தினுடையது அல்ல. (பிரு. 20 - 14, 10). பிரம்மன் அறிவது இல்லை, ஏனெனில் அதுவே அறிவு. அது அனுபவிப்பதில்லை ஏனெனில் அதுவே அனுபவம். அது 'இருப்பதில்லை', ஏனெனில் அதுவே இருப்பு. அது பொருள் அல்ல, எந்த ஒரு பொருளுடனும் அதற்குத் தொடர்பு கிடையாது. 'அது எதையும் உண்பதில்லை, அதை எவரும் உண்பதில்லை'. சுகதுக்கம் எதுவும் தொடமுடியாதது, அது மேகங்களற்ற வானத்தில் சூரியன் பிரகாசிப்பது போன்றது. ஆத்ம ஞானத்தை உணர்வது. அது தனது யதாஸ்தானத்தை முழுமையாகப் பெறுவது. 'அது ஞான நீரினால் மரணத்தீயை அணைப்பது," - (பிரு. உப. III - 2.10). அது நிரந்தர வாழ்வு என்பதைக் காட்டிலும் உணர்வுமயமான மரணமிலாத் தன்மையாகும். ஈசுவரன் கூட நிரந்தரம் அல்ல. உண்மை உணர்வில் எந்தவித மாற்றமும் ஏற்படுவதில்லை, ஆனால் அது எல்லா மாற்றம் போல தெரிகிறது. 'பூரணத்திலிருந்து பூரணத்தை எடுத்த பிறகும் எஞ்சுவது பூரணமே'. ஆளுமை முழுக்கவும் இல்லாதானாலும், உண்மையான இருப்பில் எந்தவித மாற்றமும் இல்லை. அது மிக எளிய முறையில் அறிவதாகும். ஆனால் எளிதில் எவருக்கும் புரியாதது, மர்மமானது. பிரபஞ்சத்தின் ஒரே பிரச்சினையும் அதுதான். இருப்பினும் அறிவோனுக்கு உள்ள ஒரே உண்மையும் அதுதான். பூரணப் பொருளில் ஒன்றும் நிகழ்வதில்லை என்பது தான் புரியாத புதிராக ஒருவனை அதிசயித்திலாழ்த்துகிறது. வார்த்தைகள் வெறுமனே அதைச்

சுற்றிச் சுழல்கின்றன.'ஸத் சித்' என்று எளிதாக சொல்லப்படுவது, எளிதில் புரிந்து கொள்ளக் கூடியதுதான், உண்மையில் புரிதற்கரிய புதிராகும். தெரிந்து கொள்ளப்படாதது, இதுவரை அறியாதது, எவராலும் உணரப்படாதது, மிகப் பெரும் நேரிடை உண்மையுமாகும். பரம்பொருள் உண்மையில் எதனுடனும் ஒப்பிட முடியாதது, மனத்திற்கும், பகுத்தறிவிற்கும் அப்பாற்பட்டது. எதெல்லாம் பேசப்படுகிறதோ, எண்ணப்படுகிறதோ அதெல்லாம் உண்மையாகாது. பிரபஞ்ச எண்ணுவோனுக்கும் பிரபஞ்ச எண்ணத்திற்கும் இடையேயான சேர்க்கைதான் உண்மை. இந்த எண்ணத்திற்கான எண்ணப்படுபொருள் எதுவும் கிடையாது. ஏனெனில் எண்ணுவதே எண்ணத்தின் எண்ணப்படும் பொருளாகும், எண்ணம் தன்னையே எண்ணுகிறது. எல்லாப் பொருள்களுமே உண்மையில் பிரபஞ்ச எண்ணத்தின் வழிமுறைகளே தவிர, உண்மையாகமாட்டா. எண்ணமும் அதன் பொருளும், அறிவும் அறியப்படுபொருளும், பார்ப்பதும் பார்க்கப் படுவதும், தொடர்பும் தொடர்பு கொள்ளப்படும் பொருளும், மனமும் பிரபஞ்சமும் பிரபஞ்ச சாரத்துடன் ஒன்றியவையே. எண்ணத்துடன் ஒன்றிய எண்ணுவோன், மற்றும் எண்ணப்படுபொருளுடன் தொடர்புகொண்ட எண்ணம் - இவ்விரண்டின் தொடர்பை உணர்வு பூர்வமாகக் கடப்பதுவே முக்தியாகும். பிரபஞ்ச அறிவோனைத் தவிர்த்த மெய்மை எதுவும் பிரபஞ்சத்திற்குக் கிடையாது. எண்ணுவோன்-எண்ணத்திற்கிடையேயான ஆதி வேறுபாடுதான் எண்ணத்திற்கும் எண்ணப்படு பொருளுக்கும் இடையேயான துணை வேறுபாட்டை விட பெரியது. இந்த மயக்கத்திற்கும் அதுவே காரணம். எண்ணுபவன் இருப்பதால்தான் எண்ணம் உள்ளது. எண்ணம் இருப்பதால்தான் எண்ணப்படுபொருளும் உள்ளது. எண்ணுபவனின் பொருளே எண்ணம்; எண்ணத்தின் பொருளே எண்ணப்படும் வஸ்துவாகும். இரட்டை உணர்வாகிய ஆணவமும், பன்மை உணர்வாகிய உலகமும்

தன்மை படர்க்கையிலிருந்து வேறுபட்டது என்று தவறான கருத்திலிருந்து தோன்றியவையாகும். சம்சாரம் என்பது அறிவோன் - அறிவு - அறியப்படுபொருளின் தொடர் பேயாகும். எண்ணுவோன் - எண்ணம், எண்ணம் - எண்ணப்படுபொருள் ஆகியவற்றிற்கிடையேயான வேறு பாடு ஈசுவரனின் பிரபஞ்ச உணர்வில் இல்லாத ஒன்றாகும். ஜீவாத்மன் தனிப்பட்ட முறையில் பன்மையான பிரபஞ்சம் மற்றும் அதன் தனித்துவத்தை ஈசுவரன் மீது ஆரோபிப்பதனால் உண்டாகும் ஒரு வேற்றுமையாகும். தொடர்புகள் எல்லாம் ஜீவனுக்கு மட்டுமே பொருந்தும், பரம் பொருளுக்குப் பொருந்தாது. இந்த வேறுபாடுகள் மகாத்மாக்களும் பொருந்தும், தனி உணர்வுக்கு உட்பட்ட பிரம்மலோகத்தை அடைந்த ஆன்மாக்களுக்கும் இது பொருந்தும். பிரம்மன் எல்லா வேற்றுமைகள் மற்றும் உறவுகளுக்கும் அப்பாற்பட்டது. பிரம்மஞானம் என்பது எண்ணுதல் மற்றும் உறக்கம் அல்ல. இது எண்ணமற்ற 'நேதி' - இது அல்ல என்ற மறுப்புகளால் உறுதிப்படுத்தக் கூடியது, விளக்கமுடியாதது, சிந்தனைக்கு அப்பாற்பட்டது, ஒன்றுமில்லாதது, எல்லாமாக ஆனது. உண்மையின் ஒரே விளக்கம் இதுதான்-" எது எதுவுமில்லையோ, எது ஆனால் ஒன்றுமில்லையோ, எது எல்லாமானதோ, அதைத் தவிர வேறு எதையும் அறியாதது!". அதுவே பிரம்மன்!எனவே பந்தம், முக்தி என்பதெல்லாம் உண்மையை மறத்தலும், அறிவதுமேயாகும். இருப்பில் மாற்றம் அல்ல. பூரணத்து வத்தை உணர்வதுவே ஒருவனது தனித்துவத்தை முழுவதும் கடப்பதாகும். ஜீவன் இல்லாதாகும் பொழுது, பிரபஞ்ச நாடகம் விளக்கப்படுகிறது. ஈசுவரனும் பிரபஞ்சமும் பிரம்மத்தில் லயிக்கின்றன.

மோட்சம் என்பது உணர்வின் திரட்டோ அல்லது சுய உணர்வோ அல்ல. அது யாண்டும் உள்ள, மாறாத பிரபஞ்சத்தின் ஜீவனும் ஒழுங்குப்பாடுமாகும். கொள்கை அளவில் உள்ள அமரத்துவத்தையும் அது தாண்டியதாகும்.

பூரணத்தின் பேரொளி எல்லா விவகார இருப்பு மற்றும் உலகிற்கும் ஒரு முற்றுப் புள்ளி வைக்கிறது. உலகம் நினைவில் கூட இருப்பதில்லை. ஜடம், உயிரற்றது, உணர்வற்றது அல்லது குருட்டு சக்தி என்ற ஒன்று கிடையாது. அனைத்துமே அசைவற்ற மனமற்ற பரமசக்தி, அறிவு, ஆனந்தம். இருப்பின் பல தளங்கள் கிடையாது. உணர்வின் பல படித்தரங்கள் மற்றும் உண்மையின் பல தரங்கள் கிடையாது. இது பூரண சுதந்திரம் மற்றும் நித்திய வாழ்வின் பரமானந்தப் பெருநிலையாகும். இது வெறும் சித்தாந்தம்அல்ல, உண்மையில் இருப்பு ஆகும். அது உபாதிகளை இல்லாதாக்கும் திகிலூட்டும் பெருநிலையாகும், வெறும் தனிப்பட்ட வாழ்வின் தொடர்ச்சி அல்ல. மேலான சக்திவாய்ந்த வெறுமையின் எளிய இருப்பில் எண்ணமானது பூரணமாகக் கரைவதாகும். காலதேசம் அற்ற, மகிழ்ச்சிக்கும் துக்கத்திற்கும் அப்பாற்பட்ட, விவரிக்கமுடியாத அறிவுக்கும் அறியாமைக்கும் அப்பாற்பட்ட, வாழ்விற்கும் மரணத்திற்கும் அப்பாற்பட்ட, அனைத்திற்கும் அப்பாலுக்கும் அப்பாலான பெருநிலை அது. அதுவே பேருண்மை, பூரண உணர்வு, மாபெரும் சக்தி, பேரானந்தம் உண்மை, அறிவு, ஆற்றல், ஆனந்தம், மற்றும் அமரத்துவம் என்பவை எல்லாம் அதன் நிழல்களே. காணாதது, கடந்தது, எண்ண முடியாதது, புரிந்து கொள்ள முடியாதது, விவரிக்க முடியாதது, அழியாதது, மகத்தானது, ஆழ்ந்தது, பெரியது - அதுவே பூரணப் பொருள். அதன் முன்னிலையில் எண்ணற்ற சூரியர்களின் ஒளி என்பது வெறும் இருளே. அது இருப்பின் எல்லைகளைக் கடந்தது, இருப்பின் எண்ணங்களையே இல்லாதாக்குகிறது. மனத்தையும் ஆணவத்தையும் விழுங்கும், தனித்துவத்தின் உணர்வை அடியோடு துடைத்துத் தள்ளும் மாபெரும் உணர்வு அது. பிரபஞ்சதத்தின் இருதயத்தைப் பிளக்கும் இடி அது. அனைத்து வியவஹார உண்மையையும் ஒருமைப்படுத்தும் மின்னல் அது. குமிழி வெடித்து

கடலாகிறது. ஆறு கடலுடன் கலக்கிறது. ஜீவாத்மா பரமாத்மனுடன் ஒன்றிக்கிறது.

பரம்பொருளின் மகிமை மற்ற எல்லா மகிமைகளைக் காட்டிலும் மிகவும் சிறந்தது. அது உண்மை மற்றும் மகிமையின் மகுடம் ஆகும்.

எதுவுமே அப்பாற்பட்டதல்ல. அது உருவமல்ல, பொருளல்ல, இருப்பல்ல. பூரணத்துவம், சாரம், அரசு, ஞானம், சமத்வம், சமமின்மை, அசைவது, அசையாதது, ஒன்று, அல்லது இரண்டு, உண்மை, பொய் இது, அல்லது அது, தெரிந்தது அல்லது தெரியாதது. எதுவுமே அற்ற ஒரு அனுபவத்துடன் ஆன்மா அதில் ஒடுங்குகிறது. அது பெயரற்றது, அதற்கு எந்த விளக்கமும் கிடையாது. இருப்பது எதுவோ அதுவே அது. அன்பு, கருணை, உலகம், ஆன்மா, கடவுள், சுதந்திரம், ஒளி எதுவுமே அது அல்ல, ஏனெனில் இவை அனைத்தும் ஒப்புமைக் கருத்துக்களே. அது சச்சிதானந்தம் அல்ல. இங்கே நாம் அனுபவிக்கும் அனுபவத்திலிருந்து 'மாறுபட்ட' ஒன்றே அது. சச்சிதானந்தம் என்பது வெறும் ஒரு அறிவு பூர்வமான கருத்தே, தர்க்கபூர்வமான உயர்வே ஆகும். மெய்ப்பொருள் சச்சிதானந்தத்தையும் கடந்தது. அது அதுவே. பூரண உலகின் பரந்த வானத்தில் ஒளிரும் நித்திய சூரியனே அது. அது பிரபஞ்ச உணர்வையும் கடந்தது. அது சாரம் கடந்ததன் சாரம், நித்தியமும் பூரணமும் ஒன்றையொன்று தழுவி அதன் அனுபவ மையத்தை உருவாக்குகின்றன. பூமி, வானம், பாதாளம் அனைத்தையும் துடைத்துத் தள்ளும் மகாசமுத்திரம் அது. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் அனைத்தும் அதில் கறைகின்றன. பிரம்மா, விஷ்ணு, சிவன் அதில் மறைகின்றனர். அது உயிரின் உயிர், ஞானத்தின் ஞானம், மகிழ்ச்சியின் மகிழ்ச்சி, ஆற்றலின் ஆற்றல், மெய்யின்மெய், சாரத்தின் சாரம். ஜனன மின்மையும்,

மரணமின்மையும் அதில் குமிழிகள் போல் மிதக்கின்றன. அது அனைத்தினுடைய மேலான மரணம், அதே வேளையில் உண்மையான வாழ்வின் மிக மேலான சிகரமுமாகும். பிரபஞ்சத்தின் அனைத்து இன்பங்களும் அந்தப் பரம்பொருளின் ஒரு துகளே. பிறப்பிறப்பிற்கு அது ஒரு முற்றுப் புள்ளி வைக்கிறது.

இந்த மிக உயர்ந்த பூரண அனுபவத்தை மிக நேர்த்தியாக விளக்குவதில் பெரு முயற்சி எடுத்துக் கொண்டுள்ளன.

"ஆத்மனை அறிபவன் அனைத்துத் துன்பங்களையும் கடக்கிறான்".

**"பிரம்மத்தை அறிபவன் பிரம்மமாகவே ஆகிறான்".**
**"பிரம்மஞானி மிகமேலான நிலையை அடைகிறான்",**
**"பிரம்மத்தில் நிலை பெறுபவன் அமரத்வத்தை அடைகிறான்".**

"அவன் திரும்புவதில்லை, திரும்புவதில்லை" அவனை அறிவதனால் மட்டுமே ஒருவன் மரணத்திற்கு அப்பாற்பட்ட அந்த நிலையை அடையமுடியும். பரம்பொருளை அறிவதனால் ஒருவன் இன்ப துன்பம் கடந்த நிலையை அடைகிறான். மற்ற எதையும் காணாது அவனை மட்டும் காண்பவர்களாலேயே நிரந்தர அமைதியை அடையமுடியும். எவருடைய ஆசைகள் அனைத்தும் பூர்த்தியாய்விட்டனவோ, எவன் பூரணத்துவத்தை அடைந்துவிட்டானோ, அந்த ஆசைகள் அனைத்தும் இங்கேயே கரைந்துவிடுகின்றன. முக்தி அடைந்தவன் ஒருமுகமாக, மும்முகமாக, ஐமுகமாக, எழுமுகமாக, ஒன்பது முகமாக, பதினொரு முகமாக, நூற்றுப் பதினொரு முகமாக, இருபதாயிரம் முகமாக விரிவடைகிறான். அவன் இருளின் மறுகரைக்குப் போகிறான். அந்த நிலை எப்பொழுதும் ஒளிமயமானது, அங்கு எப்பொழுதுமே பகல் தான். காலம், வயது, மரணம்,

துன்பம், புண்ணியம், பாபம் எதுவுமே அங்கே போகாது. பிரம்மானந்த நிலையின் தன்மை அச்சமின்மையாகும். அவனைக் கண்டு தேவர்களும் அஞ்சுகின்றனர். இந்திரனும் பிரகஸ்பதியும் கூட அவனைத் தடுக்க முடியாது. அவன் தன்னைவென்ற மாமன்னன் ஆகிறான். அனைத்திலும் மேலானதும், ஆழ்ந்ததுமான அதைக் கண்டதும் இதய முடிச்சு அறுந்து போகிறது, அனைத்து சந்தேகங்களும் இல்லாதாகின்றன. எல்லாச் செயல்களும் அழிகின்றன. அவனது சூட்சும அம்சங்கள் நீங்குவதில்லை, அவை இங்கேயே ஒன்று திரள்கின்றன. அவனே அனைத்தையும் ஆக்குவோன்; அனைத்தையும் உண்டாக்குவோன்; அவனே பிரபஞ்சம். இதுவே மேலான பொக்கிஷம். முக்தாத்மாக்கள் ஸர்வத்தினுள் புகுகின்றனர்; அவர்கள் பிரம்மத்தினுள் புகுகின்றனர். உலகியலிலிருந்து அவர்கள் விடுதலை பெறுகின்றனர். மேலான அழியாததுடன் தனித்துவத்தின் முழு அமைப்பும் ஒன்றிணைகின்றன. நாம ரூபத்தை இழந்து நதிகள் சமுத்திரத்தை சேருவது போல, நாமரூபத்தை விட்ட ஞானியர் மேலான தெய்வாம்சத்துடன் இணைகின்றனர். இதுவே அமரத்துவம்.

இதுவே ஸத்யோ முக்தி. அவித்தை, காமம் மற்றும் கர்மத்தால் உண்டான ஆளுமைத் தன்மையின் அறிவால் கிட்டும் பூரணத்தின் அனுபவம். காமத்தின் குழந்தையே கர்மம். பிரம்மத்தை அறிவதால் மட்டுமே தூண்டப்படும் அவித்தையைக் கடந்தாலன்றி காமத்தை பூர்த்தி செய்ய இயலாது. பிரம்மம் விவரிக்கமுடியாத பூரணத்துவம். ஒன்றை அறிந்து மற்றொன்றை அடைவது எங்ஙனம்? ஞானமும் அடையப்படுவதும் ஒன்றே. வேறுபாடற்றது பரப்பிரம்மமே அனைத்தும்.

இரண்டற்ற ஆத்மஞானத்தால் கால தேசம் கடந்த பிரம்மனை அறிவதுவே ஸத்யோ முக்தியாகும். இது வெகு

சிலருக்கே சாத்தியப்படும். ஏனெனில் தங்களது உணர்வில் ஏதாவது பொருள் இன்றி பலராலும் தியானிக்க இயலாது. விரைவான திடீர் ஞானமே ஸத்யோமுக்தி என்பதாம். அது ஈசுவரன், ஜீவன் மற்றும் ஜகத்தின் ஒப்புமைக் கருத்துக் களுக்கு அது முடிவு கட்டுகிறது. இதில் பல தரப்பட்ட அனுபவங்களோ அல்லது, முக்தி பெற்ற பின் ஈசுவர லோகமான பிரம்ம லோகத்தில் இருப்பதுவோ கிடையாது. உடனே அது பிரம்மமாக ஆவதுவேயாகும்.

## கிரம முக்தி

கிரம முக்தி அல்லது ஆன்மாவின் படிப்படியான முக்தி நிலைகளைப் பற்றிய விவரங்கள் உபநிஷதங்களில் காணப்படுகின்றன. பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூன்றையும் கடந்த பரமேஸ்வரன் அல்லது ஸகுண பிரம்மத்தை ஆன்மா அடைகிறது. பிரபஞ்சத்தின் இந்த மேலான ஈசுவரனுக்கு உத்தம்புருஷன் அல்லது புருஷோத்தமன் என்ற பெயர் உண்டு. பிரபஞ்சத்தின் தோற்றம், இருப்பு மற்றும் மறைவிற்கு காரணமான பரப் பிரம்மன் அது. ஞானத்தின் மூலம் இந்தப் புருஷோத்தமனை அடையும் ஒருவன் திரும்பவும் இந்த பூத உடலில் புகுவதில்லை. அதற்கும் மேலான பூரண மெய்ப் பொருளை நோக்கி முன்னேறுகிறான் என்று உபநிஷதங்கள் கூறுகின்றன. பிரம்மலோகத்தில் உள்ள முனிவர்கள் மரணத்தைக் கடக்கின்றனர் என்று முண்டக உபநிஷதம் கூறுகிறது. ஸகுண பிரம்மலோகத்தை அடைபவர்கள் உண்மையின் அடிப்படையில் அமையும் அவர்களது விருப்பங்கள் மற்றும் ஸங்கல்பங்களின் விளைவாக (ஸத்ய காமங்கள் மற்றும் ஸத்யஸங்கல்பங்கள்) பிரபஞ்சத்தின் இறுதி வரை அங்கே இருப்பார்கள். அவர்கள் பரமேஸ்வரனுடன் ஐக்கியமாகி இருப்பதால் அவர்கள் விரும்புவது அனைத்தும் உடனுக்குடன் அங்கே

தோன்றுகின்றன. விஸ்வேஸ்வரனின் ஆனந்தத்திற்கிணையாக அவர்கள் இன்புறுகின்றனர். அவர்களது ஆசைகள் உலகத்தாரது இச்சைகளைப் போன்றவை அல்ல. ஏனெனில் உலகத்தவரது ஆசைகள் மற்றவர்களது ஆசைகளுக்கு முரண்பட்டு சுயநலத்தின் காரணமாக எழுபவையாகும். ஆனால் முந்தையவர்களது ஆசைகள் சர்வேசுவரனது சட்டதிட்டத்துக்கு உட்பட்டு பூரணப் பொருளின் விருப்பத்திற்கு உட்பட்டு உதிப்பவையாகும். உண்மையில் ஜீவன்முக்தரின் விருப்பம் என்பது பொதுக் கருத்தில் விருப்பமே அல்ல. ஏனெனில் அது காமம், இருள் கலந்த அவித்தையின் விளைவு அல்ல; ஆனால் உண்மை மற்றும் அறிவின் ஒளியுடன் கூடிய மாயையின் விளைவு; ஒரு முக்தாத்மாவின் விருப்பம் மற்றவரின் விருப்பத்திற்கு எதிராக இருக்கமுடியாது. ஏனெனில் அவை அனைத்தும் ஒரே கடவுளுடன் உடன் உறைபவை. ஆனால் ஒரு மனிதருடைய ஆசைகள் மற்றவர்களுடைய ஆசைகளுக்கு எதிரானவை ஆகும். அவை ஆணவத்தில் பிறந்தவை, அறியாமை இருளில் மூழ்கியவை. ஜீவன் முக்தர்கள் தங்களது ஆன்மீகத் தன்மையின் அடிப்படையில் உயர் மட்டத்தில் எண்ணுகின்றனர், செயல்படுகின்றனர். அவர்கள் மனம் மற்றும் புலன் பொறிகள் மூலம் கீழான தன்மையுடன் செயல்படுவதில்லை. அவர்கள் பரந்த பிரபஞ்ச வாழ்வில் சுவாசிக்கின்றனர். லோக நாயகனின் மகிழ்ச்சியில் பங்கு கொள்பவர்களாக வாழ்கின்றனர். அனைத்தையும் உணரும் தன்மையும், பிரபஞ்ச சாரத்தின் உள் உணர்வை அனுபவிக்கும் உணர்வும் அவர்களிடம் காணப்படுகின்றன. அவர்களது அனுபவம் பொருள்களைச் சார்ந்தது. ஏனெனில் அவர்கள் பரம்பொருளுடன் ஐக்கியமானவர்கள் அல்லர். ஆனால் உலகில் உள்ள எந்தப் பொருளுடனும் அவர்கள் ஒன்றி நிற்பதால் அவர்களுக்குப் பிரபஞ்சத்தைப் பற்றிய விரிவான அறிவு உண்டு. ஆனால் இது கடவுள் அல்லது

ஈசுவரனின் பிரபஞ்ச உணர்விலிருந்து வேறுபட்டது. ஆனால் இது கடவுளின் இருப்பிற்கு மாறுபட்டது அல்ல. கடவுள் வேலை செய்வது போல அவர்கள் வேலை செய்கின்றனர். கடவுள் இருப்பதுபோல அவர்கள் இருக்கின்றனர். கடவுள் விரும்புவது போல அவர்களும் விரும்புகின்றனர். ஆனால் இவை எல்லாம் தானாகவே நிகழ்கின்றன. இவை எல்லாம் பூரணப் பொருளின் லீலா ரூபங்கள். அவர்களுக்கு எதுவுமே தேவையில்லை. அவர்கள் தங்களில் தாங்களே திருப்தியுடன் இருக்கின்றனர். தங்களுக்கு அன்னியமான எதையும் அவர்கள் விரும்பு வதில்லை. அவர்கள் தங்களுக்கென்றே விரும்புகின்றனர். பிரபஞ்சப் பொருள்களை அவர்கள் அனுபவிக்கும் பொழுதும் கூட இரண்டிற்கும் உள்ள ஒற்றுமையை அவர்கள் உணருகின்றனர். ஒரே மையத்தைக் கொண்ட சம அளவு நீளம் கொண்ட ஆரங்களுடன் கூடிய பல வட்டங்களுக்கு இணையானவர்கள் அவர்கள். ஆனால் பூரணப் பொருளாம் பெரிய வட்டத்தினுள் அடங்கியவர்கள். இவர்களது வேறுபாடுகள் பரம்பொருளுக்கு ஊறு விளைவிப்பது அல்ல, ஏனெனில் அவர்கள் அதற்கு மிகவும் அருகில் உள்ளவர்கள்.

இந்த ஆத்மாக்கள் கடவுளின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரத் தொழிலைத் தவிர மற்ற எல்லா ஆற்றல்களையும் பெற்று விளங்குகின்றனர். கடவுளுக்கும் ஜீவன் முக்தர்களுக்கும் இடையில் உள்ள ஒற்றுமையைக் காட்டிலும் வேற்றுமையை உணர்ந்தால்தான் இந்த வாக்கியத்தின் உட்பொருளை உணரமுடியும். முக்தி என்பது கடவுளின் உயர் ஞானமானால், கடவுளின் உலகில் வாழ்வதானால், கடவுளின் உருவத்துடன் அவருக்கருகில் வசிப்பதானால், அதே வேளையில் கடவுளிடமிருந்து வேறுபடுவாரானால், அது முக்தியைக் காட்டிலும் கீழானதாகவே இருக்கும். ஏனெனில் கடவுள் மக்களைப் போன்ற சம்சாரி அல்ல. ஆனால் அவர் பூரணப்பொருள். அவருடன் ஏதாவது

தொடர்பு கொள்வதென்றால் அவரை அறியவேண்டும். அவரை அறிவது என்பது அவருடன் ஒன்றுவது ஆகும். அவருடன் ஒன்றி இருப்பது என்பது இரண்டாவதைக் காணாது இருப்பதாகும். கிரம முக்தி மார்க்கத்தில் பிரம்மலோகத்தில் உள்ள இந்த ஆத்மாக்கள் பெற்றிருக்கும் இறை அல்லது ஈசுவர ஞானம் என்பது இறை உணர்விற்கு சமமாகக் கருதப்படும் ஒன்றாகுமே தவிர, அதுவாகவே யாகிவிடாது. எனவே இந்த ஆத்மாக்கள் சர்வக்ஞத்வம், மற்றும் சர்வவல்லமை பொருந்தியவர்கள் அல்லர். ஆனால் அவர்களது வட்டங்களுக்குள் அனுபவிப்பதற்கான முழு சுதந்திரம் அவர்களுக்கு உண்டு. எல்லா ஆத்மாக்களும் ஈசுவரனுடன் ஒன்றியவர்கள் எனில் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார ஆற்றல்களுடன் கூடிய முக்தாத்மாக்களுக்கிடையே எந்தவிதமான பேதமும் ஏற்பட வழியில்லை. கடவுளைப் போலவே ஆற்றலும் அறிவும் இருந்துவிட்டால் பூரணப் பொருளான கடவுளுக்கு அன்னியம் என்ற பேச்சே எழாது. ஆனால் தங்களது தனித்துவத்தை இழந்து ஒன்றானாலன்றி இருவருக்கிடையே ஒரே அறிவு எழவாய்ப்பில்லையா கையால், இந்த ஆத்மாக்களிடையே அனுபவ வேறுபாடு இருக்கும் என்று நம்மால் ஊகிக்க முடிகிறது. இந்த முக்தாத்மாக்கள் பிரபஞ்சத்தின் முடிவில் தான் பூரண அனுபவத்தைப் பெறுகின்றனர் என்று சொல்லப்படுவதால், சுய உணர்வுள்ளவராக ஈசுவரன் இருக்கின்றவரை அவர்கள் பூரணத்துவத்தை உணர முடியாது. இதன் உட்பொருள் யாதெனில் அவர்கள் ஈசுவரனுடன் ஒன்றியவர்கள் அல்லர், தனித்த அனுபவம் உள்ளவர்கள் என்பதாகும். இல்லையெனில் பிரபஞ்சத்தின் இறுதிவரை அவர்கள் தங்களது தனித்துவத்தைப் பெற்றிருப்பதில் எந்தவித அர்த்தமும் இல்லை. நேரிடையான முறையில் கடவுளைத் தியானிப்பவர்கள் அனைவருமே பூரணப் பொருளில் லயித்திருக்கிறார்கள், தேசகாலப் பிரபஞ்சத்தின் முடிவில்

அவர்களது நிஜ சொரூபமான பிரபஞ்சத்தில் பூரணப் பொருளிலிருந்து சிறிதும் வேறுபடாத நிலையில் ஐக்கியமாகிவிடுகிறார்கள். இந்த விடுதலையடைந்த முக்தாத்மாக்கள் தங்களது தனித்துவத்தை இழந்துவிடாமல் பூரணப் பொருளின் உலகில் வாழ்கிறார்கள். அதாவது அவர்கள் பூரணப் பொருளை நேரடியாக அனுபவிக்காமல் உணர்வுப் பிரபஞ்சத்தின் வாயிலாக மறைமுகமாக அனுபவிக்கிறார்கள். இது ஆழ்ந்த உறக்கத்தில் ஒருவன் தனது உடல் உணர்வை மறந்து உணரமுடியாத ஆத்மாவின் சக்தியில் தன்னை இழப்பதற்கு நிகராகும். ஆனால் இரண்டு அனுபவங்களுக்குமிடையில் உள்ள வேறுபாடு இதுதான். கடவுளைப் பொறுத்தமட்டில் திரும்பவும் பிரபஞ்ச உணர்விற்கு வருவதோ, சுவப்ன, விழிப்பு நிலைக்கு வருவதோ கிடையாது. ஆனால் உலகாயத நபரின் விஷயத்தில் பலவந்தமாக மீண்டும் உடல் உணர்விற்கு வருதல் நிகழ்கிறது. மீண்டும் சுவப்ன, விழிப்பு நிலைகள் உண்டு. ஆத்மபோதம் கிடையாது. ஜீவனிடத்தில் அவித்தையின் காரணமாக காமமும் கர்மமும் உண்டு. ஆனால் கடவுளிடம் இருப்பதோ வித்யை அதாவது பிரபஞ்ச உணர்வு, ஆத்மபோதம் மட்டுமே. எனவே பன்மை உணர்வை உண்டாக்கும் காமமும் கர்மமும் கிடையாது. அறியாமை இருளினால்தான் ஜீவனிடம் காமமும் செயலும்உண்டாகின்றன. ஆனால் அறிவொளியாம் வித்தையில் அவை இல்லை. பூரணப் பொருள் அல்லது ஈசுவரனின் உலகில் உள்ள ஆத்மாக்கள் அதை சுத்த ஸத்வ அறிவு உலகமாக அனுபவிக்கிறார்கள். ஏனெனில் அவர்களும் அதே சுத்த ஸத்துவத்தால் ஆனவர்கள். ஆன்மா சூரிய மார்க்கமாக இறைவனை அடைவதாக கூறப்படுகிறது (முண்டக உபநிஷதம் 12-11). எப்படி ஆனாலும் முக்தாத்மாக்களின் பல்வேறு நாயகத் தன்மையாம் கற்பனைக் கருத்துக்கு இடமில்லை. அதாவது பல்வேறு

பூரணப் பொருள்கள் என்ற கருத்துக்கு இடமில்லை. ஜீவபோதம் இருக்கையில் ஸர்வக்ஞத்வம், சர்வ வல்லமை இருக்கமுடியாது. மாறாக அவை இருக்கையில் ஜீவபோதம் இருக்காது. 'ஜீவன் முக்தர்கள் உடல் உணர்வு இன்றி சிரித்து, மகிழ்ந்து, சுகபோகங்கள் மற்றும் பெண்களுடன் இன்புறுவர்' (சாந்தோக்ய உபநிஷதம் 8-12-3) என்ற உபநிடத வாக்கியத்திற்கு நாம் பொருள் கொள்ள வேண்டுமென்றால், இந்த நிலை உணர்வுள்ள பூரணப் பொருளின் நிலையாக இருக்காது, அல்லது புரியாத பல சித்துக்களைச் செய்துகாட்டும் ஜீவன் முக்தனின் நிலையாக இது இருக்கும் அல்லது தனது உடல் உணர்வு இல்லாவிடினும், உணர்வுடன் தொடர்பு அற்ற தூய அஹங்காரத்தால் தூண்டப்பட்டுச் செயல்படும் ஜீவன்முக்தனின் நிலையாக இருக்கும். இன்னொரு விதத்தில் சொல்லப் போனால் அறிவுக்கு பாதகம் செய்யாத அவனது பிராரப்த கர்மத்தின் எஞ்சிய பகுதியே இதுவாகும். ஜீவன் முக்தி நிலை உடலுடன் எந்தவிதத் தொடர்பும் இல்லாதது அது ஒரு உணர்வு நிலை. எனவே பிரம்மலோகத்தில் கூட பூத உடல் உகுத்த பின்னரும் அதை அனுபவிக்கலாம். இந்தப் பூவுலகில் உள்ள ஜீவன்முக்தர் அவரது உடல் இங்கே இருந்தாலும் கூட உணர்வைப் பொறுத்தமட்டில் பிரம்ம லோகத்தில் உள்ளார். இங்கே ஜீவன்முக்தி அடையாதவர்கள், இந்தப் பௌதிக உடலில் பிராணன் செயல்படுவது நின்றவுடன் சத்யோமுக்திக்கு தயாராயில்லாதவர்கள் பூத உடல் மரித்தபின் இதைக் கிரமமுக்தி மூலம் அடைகிறார்கள். விதேஹமுக்தர் என்பவர் பிரம்மலோகத்தில் உள்ள ஒருவர் அல்லர், ஆனால் பூரணப் பொருளில் லயித்தவர் என்பதை இது காட்டுகிறது. அல்லது இரண்டு வகை விதேஹ முக்தர்களை அறிவது நமக்கு அவசியமாகிறது. ஒரு வகையினர் தங்களது பிராரப்த கர்மம் பூர்த்தியாகி பிரம்மலோகம் அல்லது அதற்குக் கீழான அமானுஷ்ய

அனுபவத்துடன் தனித்துவத்தைப் பெற்று விளங்குபவர்கள். மறு வகையினர் பிரம்மத்தில் லயமானவர்கள். பிரம்மலோகத்தில் ஆன்மா இவ்வுலக பூரண ஜீவன் முக்தனைப் போல உள்ளது. அதனது செயல்கள் யாவும் தூய பிராரப்தத்தின் தூண்டுதல்களே அன்றி, அஹங்காரத்தினின்று உதித்தது அன்று. பிரம்மலோகத்தில் உள்ள முக்தாத்மாக்களின் ஸத்ய காமங்கள் மற்றும் ஸத்ய ஸங்கல்பங்கள் ஆத்ம ஞானம் அடைவதற்கு முன் அவர்கள் செய்த செயல்களின் சுய வெளிப்பாடேயாகும். பிரம்ம லோகத்தில் உள்ள ஆத்மாக்களின் செயல்கள் உணர்வுடன் கூடியவை என்று நாம் கருதுவோமேயானால் தங்களைப் பற்றிய உணர்வு இல்லாத பூரண ஜீவன்முக்தர்களைப் போல அவர்கள் பக்குவமடைந்தவர்கள் அல்லர் என்றா கிறது. ஜீவன்முக்தரின் பிராரப்தம் அவருடைய உணர்வுடன் அனுபவிக்கப்படுவதில்லை; அது பூரண உணர்வைச் சார்ந்ததுமல்ல; இவர்களது உடல் அசைவுகளைப் பார்க்கும் ஏனைய அறியாமையில் மூழ்கிய ஜீவாத்மாக்களின் எண்ண மேயாகும்.

பிரஜாபதியின் இருப்பிடம் மற்றும் தர்பாரில் ஜீவன் புகுவது பற்றிய ஒரு விளக்கம் வருகிறது (சா. உப. 8 - 14). இறையுணர்வில் ஜீவன் அனுபவிக்கும் இன்பம் மிக அழகாக விளக்கப்படுகிறது. பிரம்மஞானி பிரம்ம உணர்வோடு தான் விரும்பும் அனைத்தையும் அனுபவிக் கிறார் என்று தைத்திரீய உபநிஷதம் (II-I) கூறுகிறது. படிப்படியான முக்தியைப் பற்றியும் பல்வேறு படித்தரங்களைப் பற்றியுமான நமது குழப்பத்தை உபநிடதங் களின் வெளிப்படையான விளக்கம் அதிகரிக்கிறது. மிக உயர்ந்த நிலை என நாம் கருதத் தயங்கும் விஷயத்தைப் பற்றிக் கூட உபநிடதங்கள் விளக்குவதில் மகிழ்ச்சி அடை கின்றன. பல சமயங்களில் உபநிஷதங்கள் பூரணநிலை அனுபவத்தைப் பற்றி உவமான உவமேயத்துடன் விளக்கம்

தருகின்றனவா அல்லது கிரம முக்தி மார்க்கத்தில் பிரம்மலோகத்தில் உள்ள ஒருவரின் நிலையைப் பற்றி உண்மையான விளக்கம் தருகின்றனவா என்பதை ஒருவனால் அறிந்து கொள்ள முடிவதில்லை. பூரண உணர்வுடன் தொடர்புடைய ஆனந்தானுபவத்தை பரம்பொருளுடையதாகவே ஒருவன் கருதவேண்டும். ஏனெனில் பூரணப் பொருளுக்கே உரித்தான முழு அனுபவத்தை பிரம்மலோகத்தில் ஒருவன் பெறமுடியாது.

"கடவுளை அறிந்தால் எல்லா பந்தங்களும் அறுகின்றன; துன்பங்கள் மாய்கின்றன;பிறப்பு இறப்பு இல்லாதாகிறது; தனித்துவம் (உடல் தன்மை) இல்லாதாகி பிரபஞ்சத்வம் மறைகிறது. ஒருவன் பூரணனாகிறான். எல்லா விருப்பங்களும் பூர்த்தியாகின்றன "(ஸ்வே. உப. 1 - 2) இதில்தான் முக்திக்கான முக்கிய அம்சம் உள்ளது. எல்லா விருப்பங்களும் பூர்த்தியான நிலைமையில், ஆசையும் ஆனந்தமும் அங்கே நிலவமுடியும் என்பதை நம்மால் புரிந்து கொள்ளமுடியாது தான்."அது ஒரு லீலை. பகவானின் திருவிளையாடல்" என்று சொன்னால் அது அந்த அதிசயத்திற்கான விளக்கம் ஆகாது. ஆனால் மிக குறைவான அளவில் உள்ள ஆசை அது எவ்வளவு பரந்ததாக இருந்தாலும் பரம்பொருளுக்குக் கீழானது தான். முக்தாத்மா அனுபவிக்கும் பல அனுபவங்களைப் பற்றிய விளக்கமானது விராட், ஹிரண்யகர்பன், ஈசுவரன் என்ற மூன்று நிலைகளைப் பற்றிய விளக்கத்தினுள் அடங்கும். உபநிடதங்கள் 'பிரம்மன்' என்று இவற்றில் ஏதாவது ஒன்றைப் பற்றிக் குறிப்பிடுவதுதான் மெய் உணர்வைப் பற்றிய அவை கூறும் விளக்கத்தைப் பற்றி நம்மால் சரிவரப் புரிந்து கொள்ள முடிவதில்லை. முக்கிய நிலைகள் நான்கு எனத் தெரிகிறது. 1) பிரபஞ்ச படர்க்கைப் பன்னிலை உணர்வு 2) பிரபஞ்ச தன்மை பன்னிலை உணர்வு 3) பிரபஞ்ச தன்னுணர்வு 4) பரபோதம் இந்த

நான்கு நிலைகளைப் பற்றி மாண்டூக்ய உபநிஷதம் விளக்குகிறது. ஆனால் இவற்றில் முதல் மூன்று நிலைகள் ஒன்றை ஒன்று சார்ந்தவை. ஏனெனில் ஒருவன் தனித்த அனுபவஸ்தனாக இருந்தால்தான் அவற்றை அனுபவிக்க முடியும். தனித்தன்மை இல்லாது இம்மூன்றையும் நாம் கருதமுடியாது. "எல்லை கடந்த பரப்பிரம்மனை உணர முடியாத மந்த புத்திக்காரர்கள் மீது இரக்கம் கொண்டு சகுண பிரம்மனைப் பற்றிய விளக்கம் தரப்படுகிறது. ஸகுண பிரம்மத்தின் மீது தியானத்தால் மனமானது கட்டுப்படுத்தப்படுகையில், உபாதிகளற்ற அந்த ஒன்று தன்னைத் தானே வெளிப்படுத்திக் கொள்கிறது", என்று பிற்கால வேதாந்தி ஒருவர் கூறினார்.

## 72. நான்கு வகை முக்தி

ஒரு மாநிலத்தில் குடிமகன் இருப்பதைப் போல விஷ்ணுலோகத்தில் பக்தன் இருக்கிறான். இது ஸாலோக்ய முக்தி. அரசன் ஒருவனுடன் அவனது பணியாள் இருப்பதுபோல ஸாமீப்ய முக்தியில் பக்தன் இறைவனுக்கு அருகில் இருக்கிறான். அரசனது சகோதரன் அரசனைப் போல ரூபதோற்றம் தருவதைப் போல ஸாரூப்ய முக்தியில் பக்தன் பகவானைப் போலவே தோற்றத்தைப் பெறுகிறான். தண்ணீரில் உப்பு கரைவதைப் போல ஸாயுஜ்ய முக்தியில் பக்தன் பகவானுடன் ஐக்கியமாகிவிடுகிறான். பக்தி யோகத்தில் இதுவே மிக உயர்ந்த நிலை.

## 73. ஜீவன் முக்திக்கும் விதேஹ முக்திக்குமிடையில் உள்ள வேறுபாடு : ஒரு உரையாடல்

"சுவாமிஜி! ஜீவன் முக்திக்கும் விதேக முக்திக்கும் இடையில் உள்ள வேறுபாடு என்ன? உடல் இருக்கும்

வரையில் விதேகமுக்தி எப்படிக் கிட்டும்?- அன்பர் ஒருவர் சுவாமிஜியிடம் கேட்டார்.

"ஜீவன் முக்தியே விதேக முக்திதான். ஆனால் கொஞ்சம் வேறுபாடு. ஜீவன் முக்தனிடம் மனதின் சொரூபநாசம் உண்டு. அவனிடம் ரஜஸும் தமஸும் இல்லாதாகி, மனதின் சாத்விக தன்மை எஞ்சுகிறது. சாத்விக மனதினால் தான் ஜீவன் முக்தர் உலக கைங்கர்யம் செய்கிறார். விதேகமுக்தரிடம் மனதின் அரூபநாசம் (உருவமற்ற மனதின் நாசம்) உண்டு. அவரிடம் சத்வமும் கூடக் கிடையாது. எனவே அவரால் லோகசங்கரகம் எதுவும் செய்ய முடியாது", என்றார் சுவாமிஜி.

அத்யாயம் பதினொன்று

# சில தென்னிந்திய யோகிகளின் அனுபவங்கள்

## 74. நாயன்மார்கள், சித்தர்களின் யோக அனுபவங்கள்

நமது பரந்த தேசத்தின் தென்பகுதி கவிதையும் பக்தியும் நிறைந்ததாகும். அந்தப் பிரதேசத்தில் உள்ள மலைப்பகுதிகள், குளிர்ந்த இனிமையான சோலைகள், மடங்கள், மடாலயங்கள், குளங்கள் மற்றும் நதிக்கரைகளில் அமைந்துள்ள ஆலயங்கள், விண்ணை முட்டும் கோபுரங்கள் ஆகியவை எல்லாம் கவிஞர்களையும் ஞானிகளையும் பரவசப்படுத்தியுள்ளது.

புராண காலத்திற்குப் பின் வட இந்தியாவில் புத்தமதம் தழைத்திருந்தது போல, தென்னிந்தியாவில் பழந்தமிழர்களிடையே ஜைனமதம் மேலோங்கியிருந்தது. பழந்தமிழ் இலக்கியத்தை ஜைனர்கள் செழுமைப்படுத்தினர். தவிர அவர்கள் தென்னிந்தியாவில் ராஜ்ய பாரத்திலும், பக்தி மார்க்கத்திலும் செல்வாக்கு பெற்றிருந்தனர். தென்னிந்தியர்களுக்கு அவர்கள் அளித்த சைவ உணவு பரிசு என்றென்றும் நன்றியுடன் பாராட்டக் கூடியதாகும். ஐந்தாம் நூற்றாண்டு வரை ஜைனரின் மேலாதிக்கத்தில் தமிழர்கள் வாழ்வின் துக்கமயமான போக்கின் தாக்கத்தில் இருந்தனர். மன அமைதிக்காக துறவு, உலகத்தை வெறுத்தல், கடும் தவம் ஆகியவற்றில் நாட்டம் செலுத்தினர்.

இந்த ஒரு சூழ்நிலையில் தான் தென்னிந்தியாவில் ஆங்காங்கு தோன்றிய அறுபத்து மூன்று நாயன்மார்கள் தங்கள் வாழ்க்கை முறையினால் முக்தி அடைவதற்காக வாழ்க்கையில் ஒரு புதிய மார்க்கத்தைக் காட்டினர். அவர்கள்

அந்தணர்கள், க்ஷத்திரியர்கள், விவசாயி, வேடர்கள் என்ற சமுதாயத்தின் பல தரப்பிலிருந்து தோன்றினர். அவர்களில் பெண் துறவியரும் இருந்தனர். அவர்களது பரந்துவிரிந்த சமரசமான கருத்துக்கள் சமுதாயத்தின் அனைத்துத் தரப்பினருடைய வரவேற்பையும் பெற்றது. அவர்களுக்கு தங்கமும் செங்கல்லும் ஒன்றாகத் தெரிந்தன. அவர்கள் முக்தியைப் பற்றி சிறிதும் கவலைப்படவில்லை. ஆனால் மக்கள் சமுதாயம் முக்தி அடைய வேண்டும் என்று அவர்கள் பெரிதும் விரும்பினர். குடும்பத்திலிருந்தோ சமூகத்திலிருந்தோ எங்கும் வெளியே செல்லத் தேவையில்லை, பற்றற்ற முறையில் கடமைகளைச் செய்தாலே போதும் என்று அவர்கள் தங்களது வாழ்வின் மூலமாகவே உலகோருக்கு உணர்த்தினர். சிவத் தொண்டு - இறைவனை நீங்கள் எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் சரிதான் - அவர்கள் சிவன் என்று அழைத்தனர் - ஏதாவது ஒரு விதத்தில் சிவபெருமானுக்குத் தொண்டு செய்வது ஒன்றே அவர்களுக்கு முக்கியமாகத் தோன்றியது. உதாரணமாக ஒருவர் தண்ணீரில் நின்று கொண்டு மஹாருத்திரத்தை ஜபித்தார், மற்றொருவர் தான் உண்பதற்கு முன் அதிதிக்கு தவறாது உணவு கொடுப்பார், மற்றொருவர் திருக்கோவிலுக்கு செல்லும் வழியைச் சுத்தம் செய்வார். இவ்விதம் பல்வேறு விதங்களில் அவர்கள் சிவனுக்குத் தொண்டு செய்தனர். அறுபத்து மூன்று நாயன்மார்களும், ஒன்பது வகை துறவியரும் அவர்கள் பின்பற்றிய வழியின் அடிப்படையில் நான்கு வகையினராகப் பிரிகின்றனர் : உடல் தொண்டு சரியை, சடங்கு - கிரியை, இறைவனுடன் ஐக்கியம் - யோகம், ஆத்ம விசாரம்- ஞானம் அல்லது போதம். இந்நான்கு மார்க்கங்கள் முறையே தாஸமார்க்கம், புத்ரமார்க்கம், சக மார்க்கம் மற்றும் சன்மார்க்கம் எனப்பட்டன. அவர்களது வாழ்க்கை உணர்ச்சியூட்டுவது. அவர்களில் சிலர் இறைவனைப் புகழ்ந்து பாடியிருக்கின்றனர்.

தியானத்தில் அவர்கள் பெற்ற அனுபவம் அற்புதமானது. ஆன்மீக சாதகர்களுக்கு மிகவும் உதவிகரமானது என்பதால், கீழ்க்காணும் சில பாராக்களில் இது தொடர்பான சில விவரங்கள் தரப்படுகின்றன.

தென்னிந்தியாவில் பாடப்பட்ட பல பக்திப் பாடல்களுள் அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் என்ற நால்வர் பாடிய தேவாரம் இறையருளைப் பெற விரும்பும் பக்தர்களால் பெரிதும் போற்றிப் புகழப்படுகிறது. அவர்களால் பாடப்பட்ட இலட்சத்திற்கும் மேலான பாடல்களுள் சிலவே நமக்குக் கிட்டியுள்ளன. அவர்களது வாழ்வின் சிக்கலான சமயங்களில் அவர்கள் தரிசித்த ஆலயங்களில் அவர்களால் பாடப்பட்ட பாடல்கள் இவையாகும். சிவனின் வடிவாகிய குருவருளால் ஆணவம், கர்மம், மாயை என்ற மூன்றிலிருந்தும் விடுபடுவதற்கான சைவ சித்தாந்த தத்துவத்தை இந்தப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

அப்பர் அவரது பூர்வாசிரமத்தில் மருள்நீக்கியார் என்று அழைக்கப்பட்டார். சைவப் பெற்றோருக்கு பிறந்தபோதிலும், அவர் ஜைனர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டார். அவர் தமது புலமையாலும் திறமையாலும் 'தர்மஸேனன்' என்று அழைக்கப்பட்ட ஜைனத் துறவி நிலைக்கு உயர்ந்தார். சிவபெருமானின் அருளால் அவருக்கு தீராத வயிற்று வலி ஏற்பட்டது. அவரது சகோதரியின் அறிவுரைப்படி அவர் சிவபெருமானை சரண்புகுந்து, அதிசயிக்கத்தக்க விதத்தில் குணம் அடைந்தார். கலிங்க மன்னனான ஒரு ஜைனன் இத்தகைய ஒரு பக்தரின் தொண்டினை இழக்கத் தயாராயில்லை. எனவே அவரை மீண்டும் ஜைன மதத்திற்கு சேர்க்க வேண்டி அம் மன்னன் அவரை சுண்ணாம்புக் காளவாயிலுக்குள் தள்ளினான். சிவபெருமானிடம் அதிக பக்தி பூண்ட அப்பர் பெருமான் அந்தச் சோதனையிலிருந்து

வெகு எளிதாக மீண்டார். சுண்ணாம்புக் காளவாயிலிருந்து அவர் வெளியேறிய பின் அங்கு தமக்கு ஏற்பட்ட அனுபவத்தை கீழ்க்காணும் பாடல் மூலம் தெரிவிக்கிறார்.

*மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசுதென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே*
*ஈசன் எந்தை இணையடி நீழலே.*

"குற்றமற்ற வீணை ஒலி, மாலை சந்திரன், தென்றற் காற்று, இளவேனில், வண்டுகள் மொய்க்கும் தடாகம் போல குளிர்ச்சியுடன் இறைவனது பாதங்களில் பக்திவைத்த எனக்கு அந்த இடம் இருந்தது".அந்தத் துறவி பேரானந்தத்தில் திளைத்திருந்ததால் சுற்றுப்புறத்தைப் பற்றிய எந்த உணர்வும் அவருக்கு இல்லை. அவர் உணர்வு கடந்த நிலையில் இருந்ததால், பிறகு தமது ஆன்மீக அனுபவத்தை மீண்டும் நினைவு கூர்ந்தார். அது கருத்துக்கும் கண்ணுக்கும் இனியதாயிருந்தது. தம்து கருத்துக்களை அவர் அழகிய முறையில் தொகுத்துத் தந்துள்ளார். வீணை பிரபஞ்சத்தின் தோற்றமான ஒலியைக் குறிக்கிறது. சந்திரன் ஞானத்தைக் குறிக்கிறது. பிறகு பிரபஞ்சத்தில் முதல் அசைவை உண்டாக்கியதென்றல், அதன் பின் உஷ்ணத்தையும் ஒளி, நிறம் போன்றவற்றைத் தரும் சூரியன், பிறகு பிரபஞ்ச உயிரோட்டத்தைக் குறிக்கும் அருவி அனைத்தும் குறிப்பிடப்படுகின்றன. இங்கே நான்கே வரிகளில் பிரபஞ்சத்தின் இயக்கம் பற்றிய வர்ணனை குறிப்பிடப்படுகிறது. இறைவனுடன் யோகி லயித்திருந்ததால் இதை அவரால் செய்ய முடிந்தது.

சுந்தரமூர்த்தி நாயனார் திருமழப்பாடி என்ற ஒரு ஸ்தலத்திற்கு விஜயம் செய்தார். யாண்டும் இறைவனிடம் லயித்திருந்த அவர் இல்லறத்தாராக வாழ்ந்தாலும், "உன்னையன்றி இறைவா! நான் யாரைத் தாயென அடைக்கலம் புகுவேன்?", என்று பாடுகிறார்.

'பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளர்க் கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே?

"பொன்னிற மேனியை உடையவனே! இடையில் புலித்தோலை அணிந்து கொன்றைப் பூவை சூடியவனே! ஒளிரும் சடையுடன் திருமழபாடியில் உறைபவனே!தாயான உன்னையன்றி நான் வேறு எவரை நினைப்பேன். முதல் இரண்டு வரிகளில் கவிஞர் அழகும் ஆற்றலும் உடைய எம்பெருமானின் புகழைப் பாடுகிறார். மூன்றாவது வரியில் அவர் இறைவன் நித்தியப் பொருளாயிருந்தும் தனது படைப்பு முழுவதிலும் எவ்விதம் வியாபித்திருக்கிறார் என்பதையும், கடைசி வரியில் இறைவனிடம் தமக்குள்ள ஆழ்ந்த பக்தியையும் வெளிப்படுத்துகிறார்.

அப்பர் சோதனைக் காலத்தில் இறைவனுடன் தமது ஐக்கியத்தை வெளிப்படுத்தினார் எனில் சுந்தரர் யாண்டும் இறைவனை நினையும் தமது சுபாவத்தை வெளிப் படுத்துகிறார்.

பனையூர் என்ற ஊருக்கு ஞானசம்பந்தர் எழுந்தருளினார். பனையூரில் இருந்த சோலையில் இருந்த தேன் நிறைந்த பூக்கள், அத்தேனை உண்ண வரும் வண்டுகள் ஆகியவற்றைக் கண்டு பக்தி வசப்பட்டார். இறைவனைப் புகழ்ந்து பாடுகிறார்.

"என் ஒன்றி நினைத்தவர் தம் பால்
உண்ணின்று மகிழ்ந்தவன் ஊராம்
கண்ணின்றெழு சோலையில் வண்டு
பண்ணின்றொலி செய்பனையூரே"

"ஒருமனதுடன் பக்தியுடன் தியானிப்பவர் மனதில் இருக்கும் இறைவன் உறையும் பனையூர் இது. தேன் உள்ள பூக்களில் மொய்க்கும் வண்டுகள் பண்ணுடன் இசைக்கும்

இடம் இது".தியானம் சமாதியில் லயிக்கும் பொழுது ஏற்படும் பேரானந்தத்தை யோகி இப்பாடலில் குறிப்பிடுகிறார். யோக ரகசியத்தை முனிவர் இப்பாடலில் வெளிப்படுத்துகிறார். பூக்களில் இருக்கும் தேனைக் கண்டு கொண்ட வண்டுகள் மகிழ்ச்சியால் பண்ணுடன் இசையை எழுப்புகின்றன.

மேலே சொன்ன மூன்று பாடல்களிலும் இழையோடும் அடிப்படைக் கருத்து கவிஞர்கள் யாண்டும் இறையுணர்வில் திளைத்திருந்தனர் என்பது தான்.

தென்னிந்திய பக்தர்கள் அனைவரிலும் இறையனு பவத்தை மிகத் தெளிவாக எடுத்துரைத்தவர்கள் மாணிக்கவாசகரைப் போல வேறு எவரும் இலர். அவரது நூல்திருவாசகம். புனிதமொழி என்பது இதன் பொருள். அவர் பதினெட்டு சித்தர்களிலோ அறுபத்து மூன்று நாயன்மார்களிலோ அவர் சேர்க்கப்படவில்லை. தென்னிந்தியாவில் அறந்தாங்கி ரயில் நிலையத்திற்கு ஒன்பது மைல் தொலைவில் திருப்பெருந்துறை என்னும் இடத்தில் சிவபெருமான் குருவாய் வந்து அவரை ஆட்கொண்டார். இதற்கு ஆவுடையார் கோவில் என்ற பெயரும் உண்டு. எம்பெருமானை நேருக்கு நேர் சந்தித்த பெருமை இவருக்கு உண்டு. இந்த நிகழ்ச்சி தன் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது என்று மணிவாசகர் தமது திருவாசகத்தில் ஆங்காங்கு குறிப்பிடுகிறார்.

இதோ அவர் பாடுகிறார்.

முத்தி நெறியறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்தி நெறியறிவித்துப் பழவினைகள் பாறுவண்ணஞ்
சித்த மலமறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவாறு ஆர்பெறுவாரச்சோவே

"முக்தி நெறி இன்னதென்று அறியாத மூர்க்கர்களோடு அலைந்து திரிந்த எனக்குப் பக்தி நெறி இன்னது என அறிவித்து, முந்தைய வினைகளை இல்லாதாக்கி, மனத்திலுள்ள மாசுகளை எல்லாம் அகற்றி என்னையே சிவமாக்கி ஆட்கொண்டருளிய அந்த ஆனந்தக் கூத்தனின் அருளை என்னன்பேன்!"இந்த வரிகளில் கவி சிற்றறிவின் வரம்புகளைக் குறிப்பிடுகிறார். அது நம்மை முக்திக்கு அருகில் அழைத்துச் செல்லாது. இப்பாடலில் வரும் 'மூர்க்கர்' என்ற வார்த்தை 'முட்டாள்கள்' என்று பொருள்படாது 'ஆன்மீகத்தை வெறுக்கும் அறிவிலிகளை' அது குறிக்கிறது. இறைவனுடன் தொடர்பு ஏற்பட்ட பின் தான், ஞானம் ஒன்றே முன் வினைப் பயனை ஒழிக்கவல்லது என்பதை அவர் உணர்ந்தார். அவரது மனம் மாசற்றதாக ஆகியது. பிறருக்குக் கிட்டாத இறைநிலையாம் பெருநிலை அவருக்குக் கிட்டியது. இத்தகைய குறிப்பு மணிவாசகப் பெருமானுக்கு மட்டுமே உரித்தானது.

எனவே தேவையானது வெறும் கல்வியறிவு அல்ல. இறைவனது நாமத்தைக் கேட்டமாத்திரத்திலேயே அனலில் பட்ட மெழுகாய் உருகும் பக்தி நிலை வேண்டும். கீழ்க்காணும் பாடலில் அவர் இதைத் தான் வேண்டுகிறார்.

உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்
வேண்டேன்
கற்றாரை யான் வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தா நின் குறை கழற்கே
கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே.

'எனக்கு உற்றார் வேண்டாம், பெயரோ புகழோ வேண்டாம், கற்றவர் தொடர்பு கூட வேண்டாம், இங்கு நான் தெரிந்து கொள்ள வேண்டுவது எதுவும் இல்லை. கன்றுக்குட்டி தாய்ப்பசுவை நாடிக் கத்துவது போல உனக்காகக் கசிந்துருகும் மனப் பக்குவம் மட்டுமே வேண்டும்.

இந்த வரிகளில் இறைவனுடன் இரண்டறக் கலப்பதால் ஏற்படும் இன்ப நிலைக்குத் தன்னை உயர்த்த வேண்டி பகவானிடம் அவர் வேண்டுகிறார். திருப்பெருந்துறையில் இறைவன் அவருக்கு ஏற்கனவே இந்த மார்க்கத்தைப் புகட்டியிருக்கிறார். கன்றுக்குட்டியின் பால் பசுவிற்கு உள்ள பாசத்தைப் போன்ற பக்தி இருந்தால்தான் இதுகிட்டும். அந்தப் பேரின்பத்தை ஒருமுறை அனுபவித்ததன் காரணமாக அதை மீண்டும் மீண்டும் அவர் வேண்டுவது இயல்புதானே!இறைவனுடன் அவர் ஒன்றிய பெருநிலையை விவரிக்கும் ஒரு பாடல் இதோ!

"மெய்தா னரும்பி விதிர்விதிர்த்துன் விரை யார் கழற்கென்
கைதான் தலை வைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி சயசய
போற்றியென்னும்
கைதான் நெகிழவிடே னுடையாய் என்னைக் கண்டு
கொள்ளே".

"மெய் சிலிர்க்கிறது, உடல் நடுங்குகிறது. கைகள் மேலே கூப்புகின்றன. கண்களில் கண்ணீர் மல்குகிறது. நான் அழுது புலம்புகின்றேன். உள்ளத்திலே பொய் தவிர்ந்து,'தேவா! போற்றி போற்றி!' என்று உன்னை உளமார அழைக்கின்றேன். என்னைக் காத்தருள மாட்டாயா! "இந்த வரிகள் மணிவாசகருக்கே உரித்தானவையாகும். 'கைதான் தலைமேல் வைத்து'என்ற வார்த்தைகளில், இறைவனது பாதங்களைத் தவிர தமக்கு வேறு கதியேயில்லை என்பதைக் குறிப்பிடுகிறார். 'பொய் தான் தவிர்ந்து' என்ற வார்த்தைகளில் பௌதிக, சூக்ஷ்ம மற்ற உலகங்கள் யாவும், அதுபோல கர்ம பலன்களும் தாண்டப்பட வேண்டும் என்பதை உணர்த்துகிறார். பொருளை அருள் வெல்லுவது மற்றும் இறைவனின் சர்வவியாபகத்துவம் ஆகியவற்றை இறுதி இரண்டு வரிகள் உணர்த்துகின்றன.

பதினெட்டு சித்தர்கள் மக்களுக்கு எளிதில் புரியும் வகையில் மிக உயர்ந்த தத்துவங்களை விளக்கியிருக்கின்றனர். புரிதற்கு அரிய உண்மைகளை மிக எளிய வார்த்தைகளால் விளக்கும் ஆற்றல் அவர்களுக்கு உண்டு. ஜாதி மற்றும் இனவேறுபாடுகளையெல்லாம் கடந்து சில சமயங்களில் அவர்களது பாடல்கள் அனாசாரமாக இருப்பது போலவும் தோன்றும். தென்னிந்தியாவில் தெருக்களில் பிச்சை கேட்டுத் திரியும் பிச்சைக்காரர்களின் வாயினில் தாங்கள் பாடுவதற்கு என்ன பொருள் என்பது தெரியாமலேயே இந்தப் பாடல்கள் தாண்டவமாடும்.

இதோ அத்தகைய சித்தர்கள் ஒருவரான சிவவாக்கியர் என்பவரது ஒரு பாடல். உலகத்தவர் முன்னிலையில் தாம் ஏன் பேசா மௌனியாக இருக்கிறார் என்பதை அவர் விளக்குகிறார்.

> "செய்ய தெங்கிலே யிளநீர் சேர்ந்த காரணங்கள் போல
> ஐயன் வந்து என்னுள்ளம் புகுந்து கோயில் கொண்டனன்
> ஐயன் வந்து என்னுள்ளம் புகுந்து கோயில் கொண்டபின்
> வையகத்தினில் மாந்தர் முன்னம் வாய் திறப்பதில்லையே".

"இளந் தேங்காயினுள் அமிருதமான இளநீர் நிரம்பி இருப்பதைப் போல, என் உள்ளத்தினுள் எம் பெருமான் புகுந்து அதைத் தனது ஆலயமாகக் கொண்டனன். இதை நான் அறிந்து கொண்டபின் உலக மக்களுக்கு முன் எதுவும் பேசுவதில்லை". இளந் தேங்காயினுள் உரிய காலத்தில் இளநீர் பெருகுவது போல, சாதகன் பக்குவமடையும் பொழுது, தன் இதய கமலத்தில் இறைவன் உறைவதை கண்டு கொள்கிறார். அதன் பின் தனது பிரம்மானந்த அனுபவத்தை உலகியலாருடன் பேசுவதில்லை. ஏனெனில் அவரது நிலை புரியாத அம்மக்கள் அவரை எள்ளி நகையாடுவர். கண்டவர் விண்டிலர். விண்டவர் கண்டிலர்.

உலகை நன்கு உணர்ந்த பட்டினத்தார் இறையனுபவத்தைத் தாம் ஒருமுறை பெற்ற விவரத்தை தெரிவித்து அதை மேலும் அடைய வேண்டும் என்ற தமது விருப்பத்தையும் கீழ்க்காணும் பாடலில் தெரிவிக்கிறார்.

"நீறார்த்த மேனி யுரோமஞ் சிலிர்த்துள நெக்கு நெக்கு
சேறாக் கசிந்தே உன் சேரடிக்கே
மாறாத் தியான முற்றானந்த மேற்கொண்டு மார்பிற் கண்ணீர்
ஆறாய்ப் பெருக்கி கிடப்பதென்றோ கயிலாயத் தானே?"

"கயிலை மலையானே! அந்நிலை என்று வருமோ! சாம்பலால் பூசிய உடல் சிலிர்க்க வேண்டும். உன் அடிக் கமலங்களை நாடி என் இதயம் பொடிப் பொடியாக மிருதுவான களிமண்ணாக வேண்டும். இடையறாத் தியானம் பேரானந்தமாக வேண்டும். உனக்காக நான் பெருக்கும் கண்ணீர் காட்டாற்று வெள்ளமாகப் பாயவேண்டும்". இந்த எளிய பாடலுக்கு விளக்கமே தேவையில்லை. மன அடக்கத்தின் பெருமையைப் பற்றிப் பேசும் கீழ்க்காணும் பாடலுக்கு ஆசிரியர் எவரென்பது தெரியவில்லை. அகஸ்திய முனிவர் என்றும் சொல்லப்படுகிறது.

"மனமது செம்மையானால் மந்திரஞ் செபிக்க வேண்டாம்
மனமது செம்மையானால் வாயுவை யுயர்த்த வேண்டாம்
மனமது செம்மையானால் வாசியை நிறுத்த வேண்டாம்
மனமது செம்மையானால் மந்திரம் செம்மையாமே."

'மனத்தை அடக்கிவிட்டால் மந்திரத்தை ஜெபிக்க வேண்டியதில்லை. மனத்தை அடக்கிவிட்டால் பிராணாயாமம் செய்ய வேண்டாம். மனத்தை அடக்கி விட்டால் சுபாவங்களை அடக்க வேண்டாம். மனத்தை அடக்கிவிட்டால் மந்திரம் சக்தி பெற்று விளங்கும்". ஸ்ரீ சுவாமி சிவானந்த மகராஜ் தமது இரு பிரசித்தி பெற்ற

நூல்களான, "மனம் -அதன் மர்மங்களும் கட்டுப்பாடும்', 'மன ஒருமைப்பாடும் தியானமும்' ஆகியவற்றில் மன அடக்கத்தைப் பற்றிய பல அரிய கருத்துக்களைத் தெரிவிக்கிறார்.

'மனத்தை வென்றவனே உலகை வென்றவன்' என்பது ஒரு பிரபல ஹிந்தி பொன் மொழி.

'மோட்சம்' என்பது உலக காரியங்களிலிருந்து ஒதுங்குவது அல்ல. அது பற்று அற்று மாசற்ற மனத்துடன் எப்பொழுதும் போல தனது கடமைகளைச் செய்வதாகும். இதுவே பகவத்கீதையின் மையக் கருத்து கடவுளை நீங்கள் உலகில், உலகத்தின் மூலமே உணர வேண்டும். யோக வாசிஷ்டத்தின் மையக் கருத்தும் இதுவே.

'விருப்பு வெறுப்பு இன்றி, புலப் பொருள்களில் திரியும் மனமானது அடக்கப்பட்டு அமைதியை அடைகிறது'. ('மனம் - அதன் மர்ம்ங்களும் கட்டுப்பாடும்' நூலிலிருந்து)

பதினெண் சித்தர்களின் பாடல்கள் பெரியதொரு ஆன்மீகப் பொக்கிஷமாகும். இன்னும் அவை சரியாக அனுபவிக்கப்படவில்லை, ஆராயப்படவில்லை. உலகோர் அவற்றின் முழுப் பயனையும் இன்னும் பெறவில்லை. ஆனால் இந்தப் பணியை தகுதியுள்ளவர்கள் தான் மேற்கொள்ள வேண்டும்.

யோக கவிதைகளைப் புரிந்துகொள்வது எளிதல்ல. அதை இயற்றியவருடைய அந்தரங்கத்தை உணர்ந்து கொள்ள வேண்டும். கவிதை என்பது அதன் கவித்திறத்தால் படிப்போருக்கு இன்பத்தை அளிக்க வேண்டும். தங்கள் அனுபவத்தைமட்டும் விளக்காமல், யோகிகள் நல்லதொரு செய்தியையும் உலகோருக்கு அளிக்கின்றனர்.

(ஸ்ரீ பி.எஸ். வரதராஜ ஐயர்)

# 75. திருமூலர்

திருமூலரின் தோற்றம், அவர் ஏன் கயிலையை விட்டு தமிழ்நாட்டிற்கு வந்து தங்கினார், ஒப்பற்ற திருமந்திரத்தை அவரை எழுதத் தூண்டிய சமூக சக்திகள் யாவை- இவையெல்லாம் காலப் போக்கில் மறைந்து போயின. இம் மாமுனிவருடைய இயற்பெயர் கூட நமக்குத் தெரியாது. அவர் ஆட்டிடையனான பின் பெற்ற பெயரே திருமூலர் என்பதாகும். சரித்திரச் சான்று எதுவும் இல்லை. எனவே அவரது சரித்திரத்தைக் கூறும் மற்றொரு பெரும் காப்பியமான பெரிய புராணத்தை நாம் நாட வேண்டியுள்ளது.

'திருமூலர் . கயிலையிலிருந்து தமது நண்பரான அகஸ்தியரைக் காண வந்தார்' என்று முனிவர் கூறுகிறார். பல தலங்களில் தமது வழிபாடுகளை முடித்துக் கொண்டு அவர் காவேரிக் கரையில் இருந்த சாத்தனூர் என்ற கிராமத்தை அடைந்தார். அங்கே பசுக்கூட்டம் ஒன்று கண்ணீர் வடித்து நின்றதைக் கண்டார். காரணம் அவற்றின் மேய்ப்பாளன் அருகில் இறந்து கிடந்தான். திடீரென்று மரணமடைந்த தங்கள் தலைவனின் உடலைச் சுற்றி பசுக்கள் கண்ணீர் விட்டுக் கதறிய வண்ணம் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன. அவனை அவை மோந்து பார்த்து உயிர் போனது அறிந்து கண்ணீர் பெருக்கின.

அந்தக் காட்சியைக் கண்ட முனிவரின் உள்ளம் உருகியது. அந்தப் பசுக்களின் துன்பத்தைப் போக்க அவர் திருவுளம் கொண்டார். அஷ்டமா சித்திகளில் தேர்ச்சி பெற்ற அவர் கூடுவிட்டுக் கூடு பாயும் கலையையும் அறிந்திருந்தார். அவர் தமது உடலைப் பத்திரமாக ஒரு இடத்தில் ஒளித்து வைத்துவிட்டு அந்த இடையனின் உடலுக்குள் புகுந்தார். இடையன் மீண்டும் உயிர்பெற்று துள்ளி எழுந்தான். தங்கள்

தலைவனை மீண்டும் உயிருடன் கண்ட பசுக்கள் மட்டில்லா மகிழ்ச்சிஅடைந்தன.

மூலன் என்ற பெயருடைய அந்த இடையனின் உடலுள் புகுந்த அவர் மாடுகளை மேய்த்துக் கொண்டு மாலையில் கிராமத்திற்குத் திரும்பி வந்தார். ஆனால் மூலனின் வீட்டிற்குள் போகாமல் அவர் வெளியிலேயே நின்றுகொண்டிருந்தார். மூலனின் வரவை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்த அவனது மனைவி அவர் தெருவிலேயே நிற்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தாள். அவரை அவள் உள்ளே அழைக்க கரம் பற்றி இழுத்தாள். ஆனால் அவரோ அப்பால் அகன்று தம்மைத் தொடக் கூடாது என்றார். அவருடன் எவருக்கு எவ்விதத் தொடர்பும் இல்லை என்று மறுத்த அவர் அருகில் இருந்த ஒரு மடத்தினுள் நுழைந்து தியானத்தில் ஆழ்ந்துபோனார்.

மூலனின் மனைவியை எளிதில் திருப்திப்படுத்த முடியவில்லை. தன் கணவன் இறந்துவிட்டான், அவனது உடலில் யாரோ ஒரு மகான் புகுந்துள்ளார் என்பது அந்தப் பாமரப் பெண்ணுக்கு எப்படித் தெரியும்? தன் கணவனின் செயல் பற்றி அவள் தனது உறவினரிடம் புகார் செய்து, அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று கத்தினாள். அந்த ஊர்ப் பெரியவர்கள் சிலர் அவரைப் பார்த்து, இடையன் சமாதியில் ஆழ்ந்திருக்கிறான் என எண்ணினர். எனவே அவனை அப்பொழுது தொந்தரவு செய்ய வேண்டாம் என்றும் அவளைக் கேட்டுக் கொண்டனர்.

தியானம் கலைந்த முனிவர் மறுநாள் காலையில் தமது உடலைத் தேடிச் சென்றார். ஆனால் அதை அங்கே காணவில்லை! தமது எஞ்சிய வாழ்க்கையை இடையனது உடலிலேயே கழிக்க வேண்டும் என்பது தான் இறைவனது திருவுளம் போலும் என அவர் மனம் தேறினார்.

அது முதல் திருமூலர் என்று அழைக்கப்பட்ட அவர் சாத்தனூரை விடுத்து திருவாவடுதுறையை அடைந்து அங்கே ஒரு போதிமரத்தடியில் அமர்ந்து சமாதி நிலையில் ஆழ்ந்தார். வருடத்திற் கொருமுறை அவர் கண்விழித்தார். அவ்வமயம் தமது ஆன்மீக அனுபவங்களைத் தொகுத்து அவர் ஒரு பாடல் இயற்றினார். திருமந்திரத்தில் உள்ள 3000 பாடல்கள் இவ்விதம் ஆண்டுக்கொரு பாடலாக 3000 ஆண்டுகளில் இயற்றப்பட்டன.

பெரிய புராணத்தில் வரும் திருமூலரின் இந்தச் சரித்திரம் அந்தக் காலத்தில் இருந்த சமூக நிலையை விளக்கிக் காட்டுகிறது. திருமூலர் ஏன் தமிழ்நாட்டிற்கு வர தீர்மானித்தார்? சமுதாயத்தின் கீழ்மட்டத்தில் இருந்த ஒரு இடையனின் உடலுள் புகுந்து சைவ சித்தாந்தக் கருத்துக்களை எடுத்துச் சொல்லும் வாய்ப்பு அவருக்கு ஏன் கிட்டியது? மற்ற தத்துவங்கள் இருக்கையில் ஏன் சைவ சித்தாந்தம் மட்டும் அவரது பிரசாரத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டது? அவரது சில பாடல்களை ஆராய்ந்தால் நமக்கு இந்தக் கேள்விகளுக்கான பதில்கள் கிட்டும்? குறிப்பாக போலி துறவியரை அவர் கடுமையாக சாடும் பகுதி குறிப்பிடத்தக்கது.

குறிப்பாக உலகம் போற்றிய உயர்மட்ட ஆரம்ப கால இந்திய தத்துவ சிந்தனை இடைக்காலத்தில் பின்னேற்றத்திற் குள்ளானது. உண்மையான கல்வியும் ஒழுக்கமும் சமூக தீய பழக்கங்கள் எனும் நடைமுறைகளால் மறைக்கப்பட்டன. வேத ஆகமங்களின் உண்மைத் தத்துவம் சடங்குகள் பழக்க வழக்கங்களால் மூழ்கடிக்கப்பட்டன. சைவ சித்தாந்தத்தின் இருப்பிடமான தமிழ்நாடு சமயத்தையும் தத்துவத்தையும் சுயநலத்திற்காகப் பயன்படுத்தும் சிலர் கையில் சிக்கித் தவித்தது. இந்தச் சூழ்நிலையில் தமது ஆன்மீக அனுபவத்தால் தாம் உணர்ந்த வேதாகம அடிப்படையில் நிலைமையைச் சீர்திருத்தும் பொறுப்பு திருமூலருக்கு வாய்த்தது.

தாம் அனுபவித்த தெய்வீகப் பேரானந்தத்தை உலகோருடன் பகிர்ந்து கொள்ள திருமூலர் விரும்பினார். இந்த இன்பப் பங்கீடு, இந்த அறியாமை மற்றும் பந்தத்திலிருந்து விமோசனமானது சைவ சித்தாந்தத்தின் சில அடிப்படைக் கொள்கைகளைப் புரிந்து கொண்டாலன்றி ஒருவனுக்கு வாய்க்காது.

பசு (ஜீவன்)வின் விமோசனம் ஜாதியைப் பொறுத்து அல்லது என்பது திருமூலரின் கருத்து. குருட்டு சித்தாங்களில் உழலாமல் சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்தால் மட்டுமே ஆன்மாவிற்கு முக்தி கிட்டும். மெய் ஞானத்திற்கான வாயிலை சைவ சித்தாந்தம் திறக்கிறது.

இடையன் உருவில் திருமூலர் உபதேசித்த திருமந்திரம் ஒருவனது உயர் அல்லது கீழ் குலத்தைப் பொறுத்து அமையாது. ஆன்மா சிவானந்தத்தை அனுபவிக்க முடியும் என்பதை வலியுறுத்துகிறது. வேத ஆகமங்களின் அடிப்படை அம்சங்களை மூடி மறைத்த சமூக சூழ்நிலைகள் சைவ சித்தாந்தத்தின் உண்மை நிலையை உருக்குலைத்த சமயத்தில் அதற்குப் புத்துயிரூட்டுவதற்காக திருமூலர் தமிழ்நாட்டிற்கு வர நேரிட்டது. வேதங்களை ஞான மரமாகக் கருதினால் ஆகமங்களை அவற்றின் கிளைகளாகவும் இலைகளாகவும் பழங்களாகவும் கருதலாம். வேதங்கள் ஆத்மனை பிரம்மமாகக் குறிப்பிடுகின்றன. ஆகமங்கள் பரம்பொருளுடன் ஜீவன் ஐக்கியமாகும் மார்க்கத்தைக் குறிப்பிடுகின்றன.

## 76. திருநாவுக்கரசர்

சைவ சமய குரவர் நால்வருள் திருநாவுக்கரசர் ஒருவர். தென்னிந்தியாவில் சிவ வழிபாட்டைப் பரப்பியவர்களான சைவ சமயத் தூண்களான இவர்கள் புத்தமதம், ஜைனமதம் ஆகியவற்றின் மேலாதிக்கத்தினால் வேத மதம்

க்ஷீணமடைந்திருந்த சமயத்தில் பெருந்தொண்டு புரிந்தவர்களாவர். ஞான சம்பந்தரின் சமகாலத்தவரான இவருக்கு அப்பர் என்ற வேறு பெயரும் உண்டு. தமது சிறுவயதில் இவர் தம் பெற்றோரை இழந்தார். திலகவதியார் என்ற ஒரே ஒரு தமக்கையார் அவருக்கு உண்டு. அந்த அம்மையாரும் பெரிய சிவபக்தை, துறவி, ஒரு சண்டையில் தமது கணவனை இழந்தவர் அவர். திருநாவுக்கரசர் பெரிய அறிஞர். மருள் நீக்கியார் என்று தமது பெற்றோரால் பெயரிடப்பட்ட அவர் தமது தமக்கையாரான திலகவதியாருக்குப் பெரும் துக்கம் விளைவிக்கும் வகையில் ஜைன மதத்தைத் தழுவினார். அந்த அம்மையார் தமது சகோதரர் மீண்டும் சைவ மதத்திற்குத் திரும்ப வேண்டும் என்று இரவும் பகலும் சிவபெருமானிடம் பிரார்த்தனை செய்தார். அவரது சகோதரருக்கு எளிதில் தீராத வயிற்று வலி ஒன்று உண்டாக்கப்பட்டு அதனால் அவர் மீண்டும் சைவ சமயத்திற்கு மீண்டும் வர வாய்ப்பு அளிக்கப்படும் என்று அவருக்கு உறுதி அளிக்கப்பட்டது. இதற்கிடையில் மருள் நீக்கியார் ஜைன மதத் தலைவராக ஆக்கப்பட்டு, ஜைன சமயப் பிரச்சாரத்திற்காக ஈடுபடுத்தப்பட்டார். அவர் சைவ சமயத்திற்குத் திரும்புவதற்கான நேரமும் வந்தது. மருள் நீக்கியாருக்கு கொடும் வயிற்றுவலி உண்டானது. அவரது சமண சமய சகோதரர்கள் அவரது வயிற்று வலியைத் தீர்க்க எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டனர். ஆனால் ஒன்றும் பலனளிக்கவில்லை. கடைசியில் அவர் வேறு வழி எதுவும் இன்றி தமது தமக்கை யாரிடமே அடைக்கலம் புகுந்தார். அந்த அம்மையார் அவரை வீரட்டானேசுவரரின் ஆலயத்திற்கு அழைத்துச் சென்று அவரது நோயைத் தீர்க்க வேண்டி பெருமானிடம் வேண்டி நின்றார்.

'தலைப்பிரட்டையைப் போலத் துவண்டு துன்புற்றாலும், தலையில் மகுடம் தரித்துள்ளான்! என்பார் ஷேக்ஸ்பியர். தாங்கமுடியாத வயிற்று வலியால் அப்பர் துன்புற்றதே

அவரது வாழ்வின் திருப்புமுனையாக அமைந்தது வீரட்டானேஸ்வரரை அவர் கீழ்க்கண்ட உள்ளமுருக்கும் பாடலின் வாயிலாக வேண்டுகிறார்.

*கூற்றாயினவாறு விலக்ககிலீர்*
*கொடுமைபல செய்தநான் அறியேன்*
*ஏற்றாய்! அடிக்கே இரவும் பகலும்*
*பிரியாது வணங்குவன் எப்பொழுதும்*
*தோற்றாது என் வயிற்றின் அகம்படியே*
*குடரோடு துடக்கி முடக்கி இட*
*ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடிய*
*வீரட்டானத்து உறை அம்மானே*

"வீரட்டானேசுவரப் பெருமானே! இந்தக் கொடிய வியாதியிலிருந்து என்னை விடுவிப்பீராக. நான் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்தறியேன். நீர் என்னை உம்பால் ஏற்றுள்ளீர், நாம் உம்மை இரவும் பகலும் பணிந்தேற்று வேன். என்னைப் பெரிதும் வாட்டி வதைக்கும் இவ்வலியை என்னால் இனியும் பொறுத்துக் கொள்ள முடியாது".

நாவுக்கரசரின் இந்த சரணாகதி வேறு வழி எதுவும் இல்லாததால் ஏற்பட்டது என்பது இவ்வரிகள் உணர்த்து கின்றன. அவர் பெரும் புலவர் என்பதால் மணிவாச கருடையதைக் காட்டிலும் இவருடைய பாடல்கள் மிகவும் உயர்ந்த நயத்துடன் பொலிகின்றன. தங்கள்பால் அவரை இழுக்க முயன்ற சமணர்கள் தங்கள் முயற்சியில் தோல்வி அடைந்து, அரசனிடம் சென்று அவர் தமது தமக்கையாரிடம் திரும்பப் போக வேண்டும் என்பதற்காகவே வயிற்று வலியை உண்டாக்கிக் கொண்டார் என்றும் அதற்காக அரசன் அவரைத் தண்டிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள். அதற்கு நாவுக்கரசர் கொடுத்த பதில் முக்கியத்துவம் வாய்ந்தது ஆகும்.

*நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்*
*நரகத்தில் இடர்படோம் நடலையில்லோம்*

*ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்*
*இன்பமே எந்நாளும் துன்பமில்லை*
*தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான*
*சங்கரனற் சங்க வெண்குழையோர் காதிற்*
*கோமாற்கே நமென்று மீளா வாளாய்க்*
*கொய்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே*

"யார் அரசனுக்கும் அடிபணிவதில்லையோ, யார் பெண்ணையும் பொன்னையும் கண்டு மயங்குவதில்லையோ அவர்தான் ஆன்மீக வாதியாக இருக்கமுடியும். பலவீனர் களால் ஆத்மாவை அறிய முடியாது. நான் எவருக்கும் அடிமையில்லை. நான் எமனுக்கும் அஞ்சேன். நான் துன்பத்தை அறியேன். நரகத்தில் இடர்ப்படமாட்டேன். நான் எவருக்கும் தலை வணங்கேன். ஒரு காதில் குழை அணிந்த அந்தச் சங்கரனுக்கே நாம் அடிமை வேறு எவருக்குமல்லர்".

இவ்விதம் சொல்லி அவர் போக மறுக்கிறார். ஆனால் அரசனின் சேவகர்கள் அவரைக் கட்டி இழுத்து அரசன் முன் கொண்டு நிறுத்தினர். சமணர்களால் மதி கெடுக்கப் பட்ட மன்னர் அப்பரை சுண்ணாம்புக் காளவாயிலில் வைத்து நீற்றுமாறு உத்தரவிடுகிறான். அப்பரின் கடவுள் நம்பிக்கை அந்தக் கொதிக்கும் சுண்ணாம்புக் காளவாசலை குளிர்ச்சி பொருந்திய ஒரு அறையாக மாற்றியது. அவர் அங்கு தான் பெற்ற அனுபவத்தை கீழ்க்காணும் பாடலில் விளக்குகிறார்.

*மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசுதென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசுவண்டறை பொய்கையும் போன்றதே*
*ஈசன் எந்தை இணையடி நீழலே"*

"இறைவனின் இணையடி நிழல் எனக்கு குற்றமற்ற வீணையின் நாதத்தைப் போலவும், மாலைச் சந்திரனின் தண்ணொளி போலவும், தென்றலைப் போலவும், வண்டுகள் சூழ்ந்து ரீங்காரம் செய்யும் பொய்கையைப் போலவும் உள்ளது".

விறகில் தீயினன்பாலில் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன் நிற்குமே"

"பேரொளி பொருந்திய ஜோதி சொரூபனாகிய இறைவன் விறகினில் தீயைப் போலவும், நல்ல பாலில் மறைந்துள்ள நெய்போலவும், மறைந்து நிற்கின்றான். உறவாகிய கோலை நட்டு அன்பெனும் கயிற்றால் நன்கு கடைந்தால் அவர் உங்களுக்குத் தோன்றுவார்".

அப்பர் பக்தியும் ஞானமும் ஒருங்கே பொருந்தியவர். தாயுமானவருக்கு அறிவு இறைவனை உணர்வதற்கு தடைசெய்யும் ஒரு சுவராகும்.

"கல்லாதாரே நல்லோர்" என்றார் தாயுமானவர்.

ஆனால் அப்பருக்கோ ஞானம் அவரைக் கடவுள்பால் இட்டுச் சென்றது. அவரது நம்பிக்கை அறிவில் பிறந்த உறுதியில் பிறந்தது. காளவாசலில் குளுகுளுவென்று அமர்ந்திருந்த அப்பரைக் கண்டு வெகுண்ட சமணர்கள் அவரை யானையை விட்டுக் கொல்லுமாறு அரசனைத் தூண்டினர். ஆனால் 'கெடுவான் கேடு நினைப்பான்' என்பதற்கிணங்க யானை அப்பரைக் கண்டு வணங்கி நின்றது. ஆனால் அந்த யானை அவரைக் கொல்ல முயன்ற சமணர்கள் மீதே வெகுண்டு பாய்ந்து அவர்களைக் கொன்றது.

"சுன்னவெண் சந்தனச் சாந்துஞ் சுடர் திங்கட் சூளாமணியும்
வண்ணஅரிவை உடையும் வளரும் பவள நிறமும்
அண்ணலரன் முரணேறு மகலம் வளாய வரவும்
திண்ணன் கெடிலப் புனலும் முடையா ரொருவர் தமர் நாம்
அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை",

அவர் சிவனை கண்ணாரக் கண்டு அம்மூர்த்தியில் லயித்தவராய் தமது இஷ்ட தெய்வத்தை வருணிக்கிறார்.

"வெள்ளைச் சுண்ணாம்பு போன்ற சந்தனத்தை தம்மீது கொண்டவரும், பிறைச் சந்திரனை தலையில் அணிந்தவரும், பவளம் போன்ற மேனியை புலித்தோலால் மூடியவரும், பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தாண்டவமாடிய பெரிய அரவத்தால் கருத்தை அலங்கரிக்கப்பட்டவரும், சிரசில் கங்கையைக் கொண்டவருமாகிய சிவபெருமானுக்கு உரியவன் நான். எனக்கு எவரிடமும் பயமில்லை, என்னை எவரும் அச்சுறுத்த முடியாது".

மலைகளையே அசைக்கவல்ல ஆற்றல் படைத்தது அப்பரின் நம்பிக்கை. சிவனை அவர் நேசித்தார். இதுவே அவரது நம்பிக்கையின் ஆதாரம்.

இதுவும் சமணர்களை அசைக்கவில்லை அவர்கள் அப்பரை ஒழிக்கத் தலைப்பட்டனர். பெரிய கல்லுடன் அவரைக் கட்டி கடலினுள் தள்ள முயன்றனர். இந்த கடைசி சோதனை இறைவனிடம் அவருக்கு இருந்த நம்பிக்கையை வெளிப்படுத்தியது. "எதுவரினும் வருக; நான் யாண்டும் சிவனையே பாடுவேன்" என்று சொல்லி சைவர்களுக்கு மிகவும் உகந்த நமசிவாய மந்திரத்தின் பெருமையை பாடுகிறார்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே

"அவனே பெம்மான்! அவனது நாமமே எனக்குத் துணை! அவன் ஒளி பொருந்தியவன். கல்லுடன் பிணைத்து கடலினுள் தள்ளினாலும் நல்துணையாவது நமச்சிவாயம் தான்".

அவர் கல்லுடன் மிதக்கிறார். மிதந்து மிதந்து அலைகள் அவரை திருப்பாதிரிப்புலியூருக்குக் கொண்டு செல்கின்றன. இறைவனது கருணையைக் கண்டு நெக்குருகி அவர் பாடுகிறார்.

"ஈன்றாளுமா யெனக் கெந்தையுமா யுடன் தோன்றினராய்
மூன்றாயுலகம் படைத்து கந்தான் மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் திருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே".

"திருப்பாதிரிப் புலியூரில் உறையும் பெருமானே எனது தோன்றாத் துணை. மூவுலகையும் படைத்து ரட்சிக்கும் பெம்மான் என் உளத்தே உளான். அவனே என் அன்னை. என் தந்தை. எனது உற்றமும் சுற்றமும் எல்லாம் அவனே!

அதன் பின் வேறுபல தலங்களுக்குச் சென்று திருத்துங்கானைமாடம் என்ற ஊரை அடைந்து, தான் சமணராக இருந்த பாவத்தைக் கழுவ வேண்டி தன் உடலில் நந்தி மற்றும் திரிசூலக் குறியீடுகளை இடுமாறு அந்த ஊர்ப் பெருமானிடம் வேண்டுகிறார்.

பொன்னார் திருவடிக்கு ஒன்று உண்டு விண்ணப்பம் போற்றி
செய்யும்
என்னாவி காப்பதற்கு இச்சைஉண்டேல் இருங்கூற்று அகல
மின்னாரு மூவிலைச் சூலம் என்மேற்பொறி மேவுகொண்டால்
துன்னார் கடந்தையுட் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே

"உன் பொன்னடியில் நான் செய்யும் விண்ணப்பம் ஒன்று உண்டு, இறைவா! நான் உயிர் வாழ வேண்டு மானால் நீர் என் உடல் மீது திரிசூலத்தைப் பதியும்".

படிப்படியாக அப்பரது பார்வை மலருகிறது. வெறும் விக்கிரகங்களில் மட்டும் சிவபெருமானைக் காண்பதை விடுத்து அவர் இந்தப் பிரபஞ்சத்தின் ஆதி காரணனாக அவரைப் பார்க்கிறார். சிதம்பரத்தில் அவர் சிவனை அனைத்துமாகக் காண்கிறார்.

அரியானை அந்தணர்தம் சிந்தையானை
அருமறையின் அகத்தானை அணுவையார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனை பாலைத்
திகழொளியைத் தேவர் கடங்கோனை மற்றைக்

*கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்*
*கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற*
*பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்*
*பேசாத நாளெல்லாம் பிறவாநாளே.*

"அவரே விஷ்ணு, பிரம்மா, தீ, காற்று, நீர், மலை, அனைத்தும் புலியூர்ப் பெருமானே! அவனைப் பற்றிப் பேசாத நாள் எல்லாம் வீண் நாளே".

தனது உடல் உணர்ச்சியைக் கடந்து செல்லுமளவுக்கு அவர் மென்மேலும் இறைவனிலேயே லயித்தார்.

வேதாரண்யத்தில் ஞானசம்பந்தருடன் அவர் ஆலயத்தின் பிரதானவாயில் மூடப்பட்டிருந்ததையும், பக்தர்கள் பக்கத்துக் கதவை மட்டுமே பயன்படுத்துவதைக் கண்டார். சம்பந்தரால் கேட்டுக் கொண்டதற்கிணங்க அவர் பாடுகிறார்:

*பண்ணினேர் மொழியாள் உமை பங்கரோ*
*மண்ணினார் வலஞ் செய்ம்மறைக் காடரோ*
*கண்ணினால் உமைக் காணக் கதவினைத்*
*திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே.*

"நாத சக்தியை உமது ஒரு பாகமாகக் கொண்ட மறைக்காடரே, உலகம் போற்றும் உத்தமரே, இந்தக் கண்களால் உம்மைக் காண வேண்டும், கதவைத் திறந்து அருளமாட்டீரா",

"அரக்கனை . . . சரக் கவிக் கதர்ன திறப்பிந்மினே".

"உமது கால் கட்டைவிரலால் ராவணனை அழுத்தியவரே! புன்னை மரங்கள் அடர்ந்த மறைக்காடரில் வசிப்பவரே! உம்மைக் காண துடிக்கிறேன், கதவைத் திறந்தருளும்".

சிவனின் புகழைப் பாடுவதொன்றையன்றி மாற்று எதையும் அறியாதவர் அப்பர் பெருமான். அனைவரிடமும் அவர் பக்தியை ஊட்டினார். கடைசியில் அனைத்திலும் பகவானைக் காணும் பராபக்தராக அவர் மாறி அமைந்தார்.

விண்ணாகி நிலனாகி விசும்புமாகி
வேலைசூழ் ஞாலத்தார் விரும்புகின்ற
எண்ணாகி எழுத்தாகி இயல்புமாகி
ஏழுலகுந் தொழுதேத்திக் காணநின்ற
கண்ணாகி மணியாகிக் காட்சியாகிக்
காதலித்து அங்கு அடியார்கள் பரவ நின்ற
பண்ணாகி யின்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டு அடியேன் உய்ந்தவாறே

"நீரே விண்ணுலகம், பூமி, வானம், பரந்துவிரிந்த கடல், ஏழுலகையும் காணும் கண், அந்தக் கண்ணில் உள்ள கருமணி, பார்வை, பக்தர்களின் செவிக்கினிய இசை, அவர்களது பண்ணமுதம், மேலான ஒளி, என்னைக் காத்த காட்சி".

அப்பர் ஒரு சிறிய ஆன்மஞானி. இறைவனுடன் இரண்டறக் கலந்ததாக குறிப்பு இல்லை. வணங்கத்தக்க ஒரு தனிப்பட்ட அம்சமாகவே சிவன் அவருக்கு இருந்தார். அறிவால் அவர் அவரை உணர்ந்தாலும், அவரது அனுபவங்கள் யாவும் ஒரு வரம்புக்குட்பட்டதே. தமது கடைசிப் பாடலில் கூட சிவ்பெருமானை அவர் தம்மிடமிருந்து வேறுபட்ட ஒரு பரம்பொருளாகவே காண்கிறார். தமது மனத்தை அவரால் பூரணமாக இல்லாதாக்க முடியவில்லை.

"புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்"

"புண்ணியனே! உன் அடிக் கமலங்களையே நான் சரணமடைகின்றேன்".

## 77. மாணிக்கவாசகர்

பிரபஞ்சத்துடன் ஒன்றிய ஞானி இவர். தனது உணர்வு தெய்வீகமானது என்பதை உணர்ந்தவர் அவர். பௌதிக உடல் தாங்கிய தெய்வீகமே தான் என்பதை உணர்ந்தவர்

அவர். உலகில் கடமைகளைச் செய்து கொண்டே இலட்சியத்தை அடையலாம் என்பதைக் கண்டவர் அவர். ஜீவாத்ம - பரமாத்ம ஐக்கியத்தை அவர் நன்கு உணர்ந்தவர். தியான அநுபூதியே பெறத் தகுந்தது என்றும் ஒவ்வொரு உயர் எண்ணமும் அவருக்கும் இறைவனுக்கும் இடையிலான ஒரு பாலமாகத் திகழ்கிறது என்றும் எண்ணிய அவர், பல்வேறு பௌதிக மற்றும் மானசிக தடைகளை உடைத்தெறிகிறார். இறைவனும் ஜீவனும் உண்மை எனும் உணர்வின் சன்னிதானத்திலேயே ஒன்றுபடமுடியும். தெய்வப் பெற்றியைக் காண்பது என்பது அகக்கண்ணுக்கே உரியதொரு அனுபவமாகும். தங்களது அநுபூதி நிலையில் இத்தகைய பல அரிய தெய்வீகப் பாடல்களை தென்னிந்திய சமயக் குரவர்கள் பாடியிருக்கின்றனர்.

இறை பக்தர்களில் தனிச் சிறப்பு வாய்ந்தவர் மாணிக்கவாசகர். குருந்த மரத்தடியில் சிவபெருமானால் தீட்சை அளிக்கப்பட்டவர். அந்தக் குருவின் பாதங்களைப் பணிந்து அவற்றைப் போற்றிப் பாராட்டுகின்றார். தன் மகிமையைப் பாடுபவர்களிடம் கடவுள் பெருங்கருணையைப் பொழிகிறார் என்பதை உணர்ந்த அவர் கீழ்வருமாறு பாடுகிறார்: நமசிவாய வாழ்க . . . . . "ஆராத இன்பம் அருளுமலை போற்றி" சிவனவன் என் சிந்தையுள் நின்ற அதனால் அவனருளாலே அவன்தாள் வணங்கிச் . . .

"சிவன் என் சிந்தையுள் உள்ளான். அதனால் அவனது அருளாலே அவனது திருப்பாதங்களை நான் வணங்குகின்றேன்".

"நீராயுருக்கியென் ஆருயிராய் நின்றானே",

"நீ என்னை நீராக உருக்கிவிட்டாய். என் உயிருக்கு யிராய் நின்ற இறைவா!". இது மணிவாசகப் பெருமானின் சொந்த அனுபவம்.

புலியூரில் இந்த பக்தர் தன்னையே சிவபெருமானிடம் இழந்து 'கீர்த்தித் திரு அகவல்' பாடுகிறார். இதில், பல்வேறு தருணங்களில் எவ்வாறு இறைவன் தன் முன்னே தோன்றி எப்படித் தன்னை ஆட்கொண்டான் என்பதை அவர் விவரிக்கிறார்.

"குதிரையைக் கொண்டு குடநாதன் மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந்தருளியும்"
"நரியைக் குதிரையாக்கிய நன்மையும்"
"அந்தணனாகி யாண்டு கொண்டருளி
இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்"
"குதிரைச் சேவகனாகிய கொள்கையும் ஆங்கது தன்னில்
அடியவட்காகப் பாங்காய் மண்சுமந்தருளிய பரிசும்".

மாணிக்கவாசகர் மன்னனின் கட்டளைக்கிணங்க குதிரை வாங்கச் செல்கின்றார். வழியில் குருந்த மரத்தடியில் சிஷ்யர்களுடன் வீற்றிருந்த குருவைக் காண்கிறார். உடனே தனது வேலையை மறந்து, குருவை வணங்கிப் பணிகிறார். பின்னர் அந்த குரு இறைவனே என்பதை உணர்கிறார். "நீ அந்தணன் உருவில் வந்து எனக்கு விண்ணோர் உலகத்தையெல்லாம் காட்டி அருளினாய்".

குதிரை வாங்குவதற்காகத் தான் கொணர்ந்த பணம் அனைத்தையும் கோயிலுக்காக அவர் செலவிட்டார். குதிரைகள் எப்பொழுதும் வரும் என்று மன்னன் அவரிடம் கேட்கிறான். அவரோ இறைவனைப் பிரார்த்திக்கிறார். அவருக்காக இறைவன் குதிரைகளுடன் குதிரை வியாபாரியாகத் தோன்றுகிறார். அதே இரவில் அந்தக் குதிரைகள் நரிகளாக மாறிவிடுகின்றன. அரசன் மந்திரியைக் கைது செய்து அவரைப் பல வகைகளில் கொடுமைப்படுத்துகிறான். வைகை நதி வெள்ளப் பெருக்கெடுத்து பாண்டியனின் ராஜ்யத்தை அச்சுறுத்துகிறது. வைகைக்கு கரை கட்டும்படி மன்னனால் மக்கள் ஆணையிடப்படுகிறார்கள். ஒரு வயதான மூதாட்டிக்கு அவள்

பங்குக்கு பணி செய்ய எவருமில்லை. இறைவனே அவள் அளித்த உதிர்ந்த புட்டுக்காக மண் சுமக்கும் பணியைச் செய்கிறார். புட்டு எதுவும் வியாபாரம் ஆகவில்லை. இறைவனே அனைத்துப் புட்டையும் சாப்பிடுகிறார். ஆனால் வேலை எதுவும் செய்யவில்லை. அதைக் கண்டு கோபமடைந்த பாண்டிய மன்னன் அவரைப் பிரம்பால் அடிக்கிறான். அந்த வலியை பிரபஞ்சம் முழுவதும் உணர்ந்தது. உலகில் மூல முதல்வன் இறைவன் அவன் என்பதை உணர்த்தியது. தனது மந்திரியின் தெய்வீகத் தன்மையை அரசன் உணர்ந்து அவரிடம் மன்னிப்புக் கேட்டான். மாணிக்கவாசகரின் தீட்சையை அடுத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகள் இவை. ஏழையின் பசிப்பிணி போல, நோயாளியின் நோய்த் துயரம் போல இந்த ஒவ்வொரு அனுபவமும் அவருக்கு பிரத்யக்ஷமாக இருந்தது.

திருவண்டப் பகுதியில் மேலும் அவர் பாடுகிறார்:

"கண்ணால் யானும் கண்டேன் காண்க
அருணணிசுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டின காண்க"

"கருணையைப் பொழியும் அந்த அமுதத்தை நான் கண்டேன். நான் அவனது கருணையை உணர்ந்தேன். எனக்காக அவன் இத்தரையின் மீது நடந்தான்".

"சொற் பதங் கடந்த தொல்லோன்"

-' சொல்லுக்கு அப்பாற்பட்ட முன்னைப் பழம்பொருள்"

"உள்ளத்துணர்ச்சியிற் கொள்ளவும் படான்
கண்முதற் புலனாற் காட்சியுமில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவினாற்றம் போன்றுயர்ந்தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந்தருளி
அழிதரும் ஆக்கை யொழியச் செய்த ஒண்பொருள்"

இறைவன் சிந்தனைக்கப்பாற்பட்டவன் என்பதை உணர்கிறார். புலன்களால் அவரை அறியமுடியாது. "ஐம்பூதங்களை உண்டாக்கியவர் அவர், பிரபஞ்சமெங்கும் வியாபித்திருப்பவர் அவர். அத்தகைய அப்பரம்பொருள் இன்று எனக்குக் காட்சி கொடுத்திருக்கிறார். மறுபிறவியிலிருந்து என்னை மீட்டிருக்கிறார்." முனிவர் இவ்வாறு அனுபவிக்கிறார். பிரம்மா, விஷ்ணுவிற்குக் கூட பரம்பொருள் எவ்வாறு அப்பாற்பட்டவர் என்பதை அவர் மேலும் விளக்குகிறார்.

"தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்".

"உள்ளங்கை நெல்லிக் கனிபோல அவன் எனக்கு உண்மை",

*"சொல்லுவதறியேன் வாழிமுறையோ*
*தரியேன் நாயேன் தானெனை செய்தது*
*தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்*
*கருளியதறியேன் பருகியும் ஆரேன்*
*விழுங்கியும் ஒல்லகில்லேன்"*

இந்த எடுத்துக்காட்டை முனிவரால் ஏற்க முடியவில்லை "உனக்கு வெற்றி உண்டாகுக. நான் இதை எப்படி விளக்குவேன்? உன் செயல் சரியா? எனக்கு நீ என்ன செய்துள்ளாய் என்பது எனக்குத் தெரியாது. என் மீது நீ அருளிய அருளை என்னென்பேன்?".

"உள்ளகந் ததும்ப வாக்கிறந்தமுதம் மயிர்க்கால்தோறும் தேக்கிடச் செய்தனன்".

வாக்கினால் விளக்கமுடியாததொரு அனுபவத்தை அவர் அடைகிறார். "வார்த்தை கடந்த நிலையில் இதயம் பொங்கி வழிகிறது. என் உடலின் ஒவ்வொரு மயிர்க்கால் வழியாகவும் அமிருதம் பாய்கிறது.

*"அற்புதமான அமுத தாரைகள்*
*எற்புத்துளை தொறும் ஏற்றினன்"*

"என் எலும்பின் துளைகள் வழியாக அமுதத்தை அவன் பாய வைத்தனன்'

"காட்டாதனவெல்லாம் காட்டிப் பின்னும்
கேளாதன வெல்லாம் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்".

"அவன் எனக்குக் காட்டாதனவெல்லாம் காட்டினான். கேட்காதனவெல்லாம் என்னை அவன் கேட்க வைத்தான். மறு பிறவி எடுக்காமல் என்னை அவன் காத்தருளினான்"

"அச்சந்தீர்த் தாட்கொண்டான அமுதூறி
அகநெகவே புகுந்தாண்டான் அன்பு கூர"

"அவனது அருள் என் அச்சத்தை அகற்றி என்னை அவனது அடியானாக்கியது. அருள் அமுதம் என் இதயத்தை கரைத்துவிட்டது.

'தழலது கண்ட மெழுகதுபோலத் தொழுது
உள்ளம் உருகி யழுதுடல் தம்பித்து ஆடியும்
அலறியும் பாடியும் பரவியும் கொடிறும் பேதையும்
கொண்டது விடாதெனினும் படியே யாகினவிடையறா
அன்பின்

பக்திப் பெருக்கால் ஏற்பட்ட மாணிக்கவாசகரின் பல அனுபவங்களுள் இதுவும் ஒன்று."நெருப்பில் இட்ட மெழுகு போல என் இதயம் உருகிற்று. நான் குதிக்கிறேன். ஆடுகிறேன். பாடுகிறேன். உன்னை நேசித்து உன்னையே சிக்கெனப் பிடித்தேன். உனது கடலனைய அன்பு என்னை மூழ்கடிக்கிறது. எனது மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்கின்றன. என்னைப் பித்தனென்று உலகம் சொல்லுகிறது. கன்றை ஈன்ற பசுவைப் போல நான் கத்துகிறேன். என் முன் தோன்றி நீ எனக்குத் தீட்சை அளிக்கையில் மற்றொரு தேவனை நான் மனத்தாலும் நினைத்திலேன்".

மணிவாசகரின் பக்தி பரவசப் பாடல்கள் நிறைந்தது திருவாசகம். கடவுள் அவர் கண்முன் அனுபவித்த ஒரு பொருள்.

அத்யாயம் பன்னிரண்டு

# சில கிறிஸ்தவ யோகிகளின் அனுபவங்கள்

## 78. கிறிஸ்தவ யோகியர் சிலரின் அனுபவங்கள் I

புனித பால் மிகப் பெரும் கிறிஸ்தவத் துறவியின் இயற்பெயர் ஸால். கடைசிக் குழந்தையானதால் பெற்றோர்கள் அவரைச் செல்லமாக பால் என்று அழைத்தனர். பைபிள் விதிகளை தீவிரமாகப் பின்பற்றிய அவர் ஜூவிஷ் கிறிஸ்தவர்களை மிகவும் வெறுத்தார். ஏனெனில் அவர்கள் மோஸே விதிகளைப் பின்பற்ற மறுத்தனர். ஒரு முறை ஸ்டீபன் என்ற பெயர் கொண்ட கிறிஸ்தவரைக் கல்லால் அடித்ததை அவர் கண்டார். வருத்தம் தெரிவிப்பதற்குப் பதிலாக அவர் கிறிஸ்தவர்கள் அனைவரையுமே எரித்துக் கொல்ல முடிவு செய்தார். இந்த முடிவுடன் அவர் டமாஸ்கஸ் நகரத்தை நோக்கிப் புறப்பட்டார். போகும் வழியில் அவரது ஜீவனை ஒரு புதிய அனுபவம் பற்றிக் கொண்டது. புனித பைபிளின் இருபத்திரண்டாவது அத்யாயத்தில், "இது உண்மையில் நடந்தது. நான் டமாஸ்கஸை நோக்கிப் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். அது மதிய வேளை. திடீரென்று விண்ணிலிருந்து பேரொளி ஒன்று என்னைச் சூழ்ந்தது. நான் பூமியின் மீது விழுந்தேன். ஒரு குரல் 'ஸால், ஸால், நீ ஏன் என்னைத் துன்புறுத்துகிறாய்?', என்று என்னிடம் கேட்டது. " நீ யார்?' என்று நான் கேட்டேன். "நீ துன்புறுத்தும் நாஸரேத்தின் ஏசு கிறிஸ்து நான்!," என்று பதில் வந்தது. என்னுடன் அங்கே இருந்தவர்கள் அந்த ஒளியைப் பார்த்தார்கள். ஆனால் என்னுடன் பேசிய அந்த ஒலியை

அவர்கள் கேட்கவில்லை. "நான் என்ன செய்ய வேண்டும். பிரபுவே" - நான் கேட்டேன். பிரபு சொன்னார்: " எழுந்திரு டமாஸ்கஸுக்குப் போ. அங்கே நீ என்ன செய்ய வேண்டும் என்ற எல்லா விபரங்களும் உனக்குச் சொல்லப்படும்", அந்த ஒளி மறைந்தது. என்னுடன் வந்தவர்கள் என் கையைப் பிடித்து என்னை டமாஸ்கஸுக்கு அழைத்து வந்தார்கள்". கொரிந்தியன் (II) 12ம் அத்தியாயத்திலே புனிதபால் தமது அனுபவத்தை கீழ்க் கண்டவாறு விளக்குகிறார். "இறைவனின் புகழை சந்திக்க என்னால் முடியவில்லை. இறைவனின் தரிசனங்களும் ஞானமும் கிட்டும். 14 வருடங்களுக்கு முன் கிறிஸ்து என்ற ஒரு மனிதனை எனக்குத் தெரியும். (உடலுடனோ அல்லது உடலுக்கு வெளியிலோ என்று எனக்குத் தெரியாது, கடவுளுக்கே தெரியும்). இவன் மூன்றாவது சொர்க்கத்தை அடைந்தவன். இத்தகைய ஒருவனை எனக்குத் தெரியும் (உடலிலோ, உடலுக்கு வெளியிலோ என்று எனக்குத் தெரியாது, கடவுளுக்கே தெரியும்). சொர்க்கத்திற்கு அவன் எப்படிச் சென்றான், சொல்லமுடியாத வார்த்தைகளை எப்படிக் கேட்டான், ஒருவனால் வாய்விட்டுப் பேசமுடியாத வார்த்தைகள் அவை. இத்தகைய ஒருவன் சார்பில் நான் புகழ்வேன். என் சொந்த சார்பில் நான் எனது பலவீனங்களை அறிவதால் புகழமாட்டேன். ஏனெனில் நான் புகழை விரும்பினால் நான் முட்டாளாவேன். நான் உண்மையே பேசுவேன். நான் பேசுவதை நீங்கள் கேளுங்கள். எனது பெருமையைக் கண்டு பொறாமை கொண்டவர்கள் எனக்குத் தீங்கிழைத்தார்கள். சைத்தானின் தூதுவன் ஒருவன் என்னைத் துன்புறுத்தினான். என் உடல் முள்ளால் குத்தப்பட்டது. இதனால் நான் இறைவனிடம் உதவிகோரி பிரார்த்தித்தேன். இறைவன் சொன்னார்! " என் அருள் உனக்குப் போதும். என் ஆற்றல் எளியோரைப் பலப்படுத்தும். மிகவும் மகிழ்ச்சியுடன் ஏசுவின் ஆற்றல்

என்மீது இருப்பதை நம்பி நான் அவரைப் புகழ்ந்து பாடுகிறேன்".கலேஷியனில் ஏசுகிறிஸ்துவின் தேவ வாக்குகளால் அவர் பெற்ற ஞானத்தையே தான் பிரசாரம் செய்தார் என்று புனித பால் கூறுகிறார். "சகோதரர்களே, நான் செய்த சுவிசேஷச் சொற்பொழிவுகள் ஒரு மனிதனைப் பற்றியது அல்ல. ஏனெனில் எனக்கு அது ஒரு மனிதனிடமிருந்து வரவில்லை. ஆனால் ஏசு கிறிஸ்துவின் வெளிப்படுகைகளால் அவற்றை நான் பெற்றேன்".புகழ் பெற்ற இத்தாலிய கவிஞர் தமது ஆழ்ந்த கவிதை உள்ளுணர்வால் பெற்ற அனுபவங்கள் ஆன்மீகமயமானவை. தமது 'தெய்வீக காமெடி'யில் டான்டே,'அனைத்தையும் இயக்கும் அந்தப் பரம்பொருளுக்கு வெற்றி' உண்டாகட்டும். அது பிரபஞ்சத்தை ஊடுருவியிருக்கிறது. ஒரு இடத்தில் அதிகமாகவும் இன்னொரு இடத்தில் குறைவாகவும் அது ஒளிர்கிறது. சொர்க்கம் அவரால் அதிக ஒளியைப் பெறுகிறது. அவரிடமிருந்து ஒளியையும் அருளையும் பெறும் ஒருவரால் அதை விளக்க இயலாது'. "திடீரென்று ஒரு நாள் தேவலோகத்தில் மற்றுமொரு சூரியன் தோன்றி ஒளியை அதிகரித்தது". காலச் சக்கரத்தில் தனது பார்வையைப் பதித்தவாறு பியாட்ரிஸ் (தேவ அன்பு) நின்று கொண்டிருந்தாள். அவளையே நான் நோக்கினேன். மூலிகையை சுவைத்த கிளாகஸ் தேவர்கள் மத்தியில் பிரியமானவனாக ஆனது போல, நான் அவளையே பார்த்துக் கொண்டிருந்த சமயத்தில் எனக்குள்ளே மாறி அமைந்தேன். மனிதனை மாற்றுவதை வார்த்தைகளால் விவரிக்கமுடியாது. இதனால் அனுபவத்தால் உணரப்பட வேண்டியதாகும். சொர்க்கத்தை ஆளும் அன்பே! உன் ஒளியே என்னை உயர்த்தியது (டான்டே : சொர்க்கம் சார்ல்ஸ் எலியட் நார்ட்டனால் மொழி பெயர்க்கப்பட்டது.)

குரிசின் புனித யோவான் (யோவான் ஏப்ஸ்) தமது வாழ்க்கையின் இளமைக் காலத்திலேயே கடும் தவத்தில்

ஈடுபட்டார். தமது இருபதாவது வயதுக்காலத்தில் அவர் மனதிலும் மற்றும் உணர்ச்சிகளாலும் மிகவும் துன்பப்பட்டார். அவரது தவம் மிகவும் கடுமையானது. இறைபக்தி மற்றும் தூய்மையுடன் அவர் வாழ்ந்தார். தமது முப்பதாவது வயதில் அவர் தெய்வீகமான பல இனிய உணர்ச்சிகளை அந்தர்முகமாக அனுபவித்தார். அவர் பிரார்த்தனைக்கு வந்தபொழுதெல்லாம் அவரது முகத்திலிருந்து ஒரு ஒளிச் சுடர் தோன்றியது. அவர் செய்த கடும் தவத்திற்காக அவர் ஜெயிலில் அடைக்கப்பட்டபோது, திடீரென்று ஒரு இரவில் சிறை அறையில் தெய்வீக ஒளி சூழ்ந்தது. சிறைச்சாலையிலிருந்து அவர் விடுதலை செய்யப்படும் நாள் வந்தபோது அவரைச் சுற்றி இருந்த ஒளியிலிருந்து, "யோவானே! நான் இங்கே இருக்கிறேன். அஞ்சாதே. நான் உன்னை விடுவிப்பேன்", என்ற ஒலி கேட்டது. "இறைவனுக்கு ஊழியம் செய்யும் ஒருவனின் ஆன்மா மகிழ்ச்சிக் கடலில் நீந்துகிறது. யாண்டும் ஓய்வை அனுபவிக்கிறது. புத்துணர்ச்சியுடன் மகிழ்ச்சிப் பாடல் பெருக்கெடுக்கிறது". தெய்வீக அனுபவத்தில் தான் புகுந்ததைப் பற்றி தமது பாடல்களில் புனிதயோவான், "நான் புகுந்தேன். ஆனால் எங்கே என்று தெரியவில்லை. ஆங்கே அறிவு கடந்த நிலை. ஒன்றும் புரியாது நான் நின்று கொண்டிருந்தேன். நான் புகுந்த இடம் எது என்று தெரியாமல் நான் பெரிய விஷயங்களைக் கேட்டேன். நான் கேட்டதைச் சொல்லமாட்டேன். பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட நிலையில் நான் இருந்தேன்". என்னை மறந்த இன்பத்தில் நான் நின்றேன். எனது ஒவ்வொரு புலனிலும் எந்த உணர்வுமே எஞ்சி நிற்கவில்லை. எனது ஆன்மாவை ஏதோ ஒரு அறிவு ஆட்கொண்டது".வில்லியம் பிளேக் என்னும் கவிஞரைப் பற்றி வில்லியம் ரோஸட்டி தமது 'பிரிபேட்டரி மெமாயர்' என்னும் நூலில், "ஆவல் மிகவும் கொண்டவராக இந்தப் புவியிலேயே இந்த உடலிலேயே

அவர் நிர்வாண நிலையை அடைந்தார். அவரது தன்மைகள் யாவும், அவரது ஆளுமை முழுவதும், அவரது மனத்தின் சாரம் முழுவதும் அவரது இலட்சிய பரம்பொருளில் தன்மயமாயிற்று. இதைத்தான் டான்டே 'இல் பென்டெல் இன்டெலட்டோ' என்ற வரியால் குறிப்பிடுகிறார். அவரது கவிதை மற்றும் கலைப் படைப்புகளில் உள்ளுணர்வு பெரும் பங்கு வகித்தது. புலன் கடந்த எண்ண மட்டத்திலிருந்து அவர் தமது சிந்தனைகளைப் பெற்றார். "யாரோ ஒருவர் பக்கத்திலிருந்து ஒப்பிக்க, சில சமயங்களில் 20 அல்லது 30 வரிகள் மொத்தமாக, எந்தவிதமான முன்னேற்பாடுமின்றி, எனது விருப்பத்திற்கு மாறாகவே இயற்றப்பட்டன," என்று "ஜெருசலம்' என்ற தமது கவிதை எழுதப்பட்டது பற்றி அவர் குறிப்பிடுகிறார். அவற்றின் ஆசிரியர்கள் யாரென்று எவருக்கும் தெரியாது.

வால்ட் விட்மன் எழுதிய பல படைப்புகள் அவரது ஆன்மீக அடிப்படையிலேயேயாகும். அவர் ஒரு பிரத்யேக யோகி. விட்மனின் ஒரு அரிய வரி இதோ:"சற்றும் எதிர்பாராத விதத்தில் திடீரென்று ஒரு தெய்வீக ஆற்றல் என்னைச் சுற்றிலும் நிலவக்கண்டேன்".அவரது ஒரு அற்புதமான உரைநடைப் பகுதி : "அந்தோ! உயிர்கள் அனைத்திலும் எப்பொழுதும் துடித்துக் கொண்டிருக்கும் இதயத் துடிப்பு - அதிலிருந்து நான் அறிந்து உணர்வது என்னவெனில் மரணம் நாம் நினைப்பது போல ஒரு முடிவு அல்ல, அது தான் உண்மையிலேயே ஒரு தொடக்கம், உயிரோ பொருளோ எதுவும் எப்பொழுதும் இல்லாததாக முடியாது".ஆல்பிரட் டென்னிசனும் அரிய ஆன்மீக, தியான அனுபவங்களைப் பெற்றிருந்தார்.

'எ மெமாயக் பை ஹிஸ் பென்' என்ற ஆல்பிரட் டென்னிசனின் இரண்டாவது பகுதியில் இந்தப் பகுதி காணப்படுகிறது : " ஜனவரி 1989ல் ஆழ்ந்த உணர்ச்சியுடன்

அவர் மீண்டும் சொன்னார்: சில சமயங்களில் இந்தப் புற உடல் ஒன்றுமே இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது. இந்த உடலைத் தாண்டி கடவுள், ஆன்மீகம் ஒன்று இருப்பதாக நான் உணர்கிறேன். அதுவே உண்மையாகும். ஆன்மீகமான அது தான் மெய்ப்பொருள். அது இந்தக் கையும் காலும் இருக்கும் நபருக்கு அப்பாற்பட்டதொன்றிற்குச் சொந்தம். இந்த எனது கையும் காலும் எனது இருப்பின் வெறும் கற்பனை குறியீடுகளே என்று நீங்கள் சொல்லலாம். அதை நானும் நம்பலாம். ஆனால் 'நான்' என்னும் உள்ளது. ஆன்மீகமே எனது சொந்தநிலை என்பதை நீங்கள் மறுக்கமுடியாது". இந்த வார்த்தைகளை அவர் உணர்ச்சி பூர்வமாக பேசுகையில் அந்த அறையில் இருந்த எங்களால் மறுத்து எதையும் கூற முடியவில்லை.

## 79. சில கிறிஸ்தவ யோகிகளின் அனுபவங்கள் II

பொதுவான சமய அனுபவ உலகிற்கு வேறுபட்டுக் காணப்படினும் கிறிஸ்தவ யோகிகளின் அனுபவங்கள் முக்கியமானவை.

மேற்கத்திய தத்துவ சரித்திரத்தில் மிக அற்புதமான சில பெரியார்களின் சரித்திரங்கள் காணப்படுகின்றன. அவர்கள் தங்கள் வாழ்வை தங்கள் மையமாகக் கொள்ளாது இறைவனை மையமாகக் கொண்டு அமைத்தனர். அவர்களது அக மையத்தின் ஆழ்நிலையிலிருந்து அவர்களைப் பிரித்தது அனைத்தையும் அவர்கள் உதறித் தள்ளினர். அலெக்ஸாண்டிரியாவின் மாபெரும் தத்துவஞானியான பிளாடினஸின் வார்த்தைகளில் "தனிமை தனிமையை நாடிய பயணத்தை விரும்பிய மகாபுருஷர்கள் அவர்கள் ஆவார்கள். அவர்கள் பெற்ற அனுபவங்கள் பலப்பல.

அவர்கள் மாற்றப்பட்ட விதங்கள், அவர்களது உயரிய ஆன்மீக அனுபவங்கள் அனைத்தும் வகை வகையானவை.

பிளாட்டினஸின் ஆன்மாவை பரம்பொருள் நாட்டம் பற்றிக் கொண்டது. 'ஒன்று'டன் தனது தலைவர் ஒன்றி இருந்த நான்கு வெவ்வேறு தருணங்களைப் பற்றி அவரது சீடரான பார்பைரி குறிப்பிடுகிறார். இறைவனுடன் ஒன்றிய அந்த பேருணர்வு நிலைகளில்,' ஆன்மா பார்ப்பதில்லை, பார்த்து அறிவதில்லை, இரண்டு பொருள்கள் இருப்பது என்று உணர்வதில்லை. ஆனால் அதற்கு அன்னியமாக வேறொன்று இல்லை என்னுமளவுக்கு தன்னில் தானாய் லயித்துவிடுகிறது. ஒரே மையத்தைக் கொண்ட இரண்டு வட்டங்களைப் போல, அது கடவுளுடன் லயித்துவிடுகிறது. பிரியும் பொழுது இரண்டாகத் தெரிகிறது", என்று பிளாட்டினஸ் கருதுகிறார்.

கடவுளை தாம் உணர்ந்தது பற்றி ஒரு பெரும் முனிவரான அகஸ்டின் 'கன்பெஷன்ஸ்' என்ற தமது நூலின் ஏழாவது தொகுதியில் "எனது மனம் . அதன் எண்ணங்களை அனுபவத்திலிருந்து பின்னிழுத்தது. புலன் உலக பிம்பங்களிலிருந்து பன்மைகளிலிருந்து அது தன்னைப் பிரித்துக் கொண்டது. ஒரு பேரொளியில் அது லயித்தது". ஒரே தரிசனத்தில் உள்ள பொருளின் காட்சியில் அதுலயித்தது. அதே நூலில் தனது முந்தைய நிலை பற்றி அவர், "நான் ஞானியரின் அமுதம். 'நீ பருகு' பின் நீ என்னில் வாழ்வாய். உணவை மாமிசமாக நீ மாற்றியது போல உன் சாரமாக நீ என்னை மாற்றிவிடுவாய்", என்று குறிப்பிடுகிறார்.

பிரான்ஸிஸ்கன் துறவியரின் தலைவரான அஸிஸியின் புனித பிரான்சிஸ் ஒரு அற்புத தரிசனம் பெற்றார். அதில் ஒரு தேவதை சொர்க்கத்திலிருந்து குரிசின் குறிகளுடன் இறங்குவதைக் கண்டார். அந்த சமயத்தில் அவரே தமது

உடலில் குரிசு அடிக்கப்படும் வலியை உணர்ந்தார். அவரது உடலில் தோலின் மீது அந்த தழும்புகளும் காணப்பட்டன. இந்த அனுபவம் அவரது வாழ்வின் போக்கையே மாற்றி அமைத்து பேரனுபவத்தை அவருக்கு அளித்தது. டொமினிக்கன் அறிஞரான மீஸ்டர் எக்கார்ட் அவர்கள் பரம்பொருளுடன் தமது ஜீவான்மா ஒன்றியிருந்த தருணத்தை நினைவு கூர்ந்த பொழுது தம்மையறியாது கத்திவிட்டார்."அற்புதத்தின் அற்புதமே! கடவுளுடன் ஜீவாத்மா ஒன்றிய அனுபவத்தை நினைத்தாலே இனிக்கிறது! ஜீவாத்மன் சுதந்திரமாகப் பறக்கிறது. அது பெயர் சொல்லப்படும் எந்தப் பொருளாலும் திருப்தி அடைவதில்லை தெய்வீக அன்பின் ஊற்று ஆன்மாவி லிருந்து பெருக்கெடுத்துப் பாய்ந்து கடவுளுடன் லயமாகிறது".

மிக உயர்ந்த ஆன்மீக அனுபவங்கள் விளக்கிய பெருமக்கள் பணிவின் சிகரமாகத் திகழ்ந்தனர். ஸ்டிராஸ்பர்க்கைச் சேர்ந்த ஜான் டாலர் அனைத்துமே 'ஆழமான வெறுமையில் ஆழமான மூழ்குதலிலேயே' அனைத்தும் அடங்கியிருப்பதாக தெரிவிக்கிறார். யோகியின் இறை ஒன்றித்தலை அவர் 'கடவுளிடம் இருப்பதை' தான் உணர்வதையே குறிப்பிடுகிறார்.

மீஸ்டர் எக்கார்டின் அத்யந்த சீடரான ஹென்ரி சூசோ பெறற்கரிய காட்சிகளைக் கண்டார். ஒரு நாள் அவர் பேரானந்த நிலையில் இருந்தார். அது அரைமணி நேரம் முதல் ஒரு மணிநேரத்திற்கு நீடித்தது. துன்பம் பொறுக்க முடியாத நிலையில், அமைதி இன்றி, பூரண சரணாகதி நிலையில், 'அவரது ஆன்மா அவரது உடலுக்குள் சுருங்கியதாகவும், உடலை விட்டுப் பரந்து விரிந்ததாகவும்' அவர் உணர்ந்தார். பின் அவர் அனுபவித்ததை அவரால் வார்த்தைகளால் விளக்க முடியவில்லை. அது பகலா, இரவா? அவருக்குத் தெரியாது. "மௌனம், ஓய்வில் நித்திய

வாழ்வின் இனிமையின் வெளிப்பாடு அது". "நான் பார்ப்பது, உணர்வது எல்லாம் சொர்க்கமில்லையெனில், அதை நான் உணரமுடியாது; பெறற்கரிய பேரானந்தத்தைப் பெற நாம் படும் துன்பங்களும் துயரங்களும் ஒரு பொருட்டேயன்று". "ஆகா! எனது இதயம் மகிழ்ச்சியால் துள்ளுகிறது. இந்தத் தருணத்தை என்னால் மறக்கவே முடியாது".

ஜான் ரூயிபிராக் மிகச் சிறந்த யோகியாகக் கருதப்படுகிறார். அவரது படைப்புகளில் ஜீவாத்மனுக்கும் இறைவனுக்குமிடையில் உள்ள உண்மையான தொடர்பைப் பற்றி மிகச் சிறந்த சில வாக்கியங்களைத் தருகிறார். "சொர்க்கத்திலுள்ள பிதா தமது எல்லையற்ற அன்பினால் ஒவ்வொரு ஜீவனிடத்தும் பேசுகிறார்" "நீர் என்னுடையவர். நான் உம்முடையவன் : நீரே நான், நானே நீர்". "நான் உம்மை ஒப்புக் கொண்டு விட்டேன்".

ஸூனாவின் காதரீன் அம்மையார் ஆயிரக்கணக்கான ஆன்மாக்களின் தாயாகக் கருதப்பட்டவர். காட்சிகள் மற்றும் நூதன அனுபவங்களை அவர் பெற்று விளங்கினார். அவரது அந்தராத்மாவான தெய்வீக ஒலி பேசுகிறது. "புயல் நிறைந்த கடலிலிருந்து மீண்டு அமைதியின் உறைவிடமான என்னை வந்தடைவது என்பது எவ்வளவு மகிழ்ச்சிகரமானது. அந்த அமைதிக் கடலிலிருந்து தன் இதயத்தை நிரப்புகிறார். அந்த அமைதிக் கடல் நானே". "அன்பர்கள் அன்பெனும் பாசத்தால் பிணைக்கப்படுவதால் கை தொடாது, கால் கீழே பாவாது". "இப்பொழுது நான் உன் ஆன்மாவை மணம் செய்து கொள்கிறேன். இனிமேல் அது யாண்டும் என்னுடனேயே இருக்கும் "என்ற தெய்வீக ஒலி அவளுக்குள் கேட்டதும் அவளிடம் பெரிய மாற்றம் தென்பட்டது.

ஜெனோவாவின் காதரீன் அம்மையார் மற்றொரு சிறந்த யோக சக்தி வாய்ந்த பெண்மணி ஆவார். "பல சமயங்களில் அவர் எங்காவது தன்னை மறைத்துக் கொள்வார். தேடிப்போனால் தரையின் மீது படுத்துக் கொண்டு கையால் முகத்தை மறைத்துக் கொள்வார். தன்னை மறந்து சொலற்கரிய மகிழ்ச்சியுடன் தென்படுவார். உரக்கக் கூப்பிட்டாலும் அவளது காதில் விழாது". "சில சமயங்களில் என்னைப் பற்றிய உணர்வே எனக்கு இருக்காது. ஆன்ம, உடல், இதயம், உணர்ச்சி, ருசி எதுவுமே இருக்காது 'தூய அன்பு மட்டுமே எஞ்சும்".

இக்னேஷியஸ் லயோலா ஏசுநாதர் திருச்சபையை நிறுவியவர். இரண்டு காட்சிகளில் அவர் கண்டதாவது : "புனிதமான மும்மை மூன்று சாவிகளைப் போலவும், புனித கன்னிமேரியும் தெரிந்தனர்". குவேக்கர் ஸ்தாபனத் தலைவரான ஜார்ஜ் பாக்ஸ் தனது 24வது வயதில் அனைத்தின் அடிப்படையைப் பற்றிய உண்மையை உணர்ந்தார். அவர் விவரிக்கிறார். "தெய்வ சாந்நித்தியத் திற்கு என் ஆன்மா வந்தது எல்லாமே புதிதாயிருந்தது. வார்த்தைகளால் விவரிக்க முடியாத அளவு படைப்பே புதியதொரு மணத்தைப் பெற்றது. இறைவன் எனக்காக பெரிய காரியங்களைச் செய்தார். வார்த்தைகளுக்கப்பாற்பட்ட ரகசியங்கள் எனக்குப் புலப்பட்டன. ஆன்மாவின் ஆளுகைக்கு உட்பட்ட மக்கள் ஞானவாக்கைப் பெற்று பரம்பொருளில் உள்ள மறைபொருளைக் கண்டு கொள்கின்றனர்".

ஜேகப் போம் ஒரு இறை உணர்வு பெற்ற மனிதர். அவர் சிறியவராயிருக்கும் பொழுதே ஒரு தெய்வீக ஒளி அவரைச் சூழ்ந்து கொண்டது. "ஏழு நாட்கள் தெய்வீக ஒளி அவரைச் சூழ்ந்தது; அவர் உயரிய தியானத்திலும் பேரின்பத்திலும் திளைத்து நின்றார்". இரண்டாவது முறை தேய்த்து

மெருகிடப்பட்ட ஒரு கிண்ணத்தை உற்றுப் பார்த்ததன் விளைவாக அவர் சொல்லொணா உள் மகிழ்ச்சியில் ஆழ்ந்தார். அனைத்துப் பொருள்களின் உள் ஆத்மாவையே அவர் உற்று நோக்குவதுபோல் இருந்தது. லௌகிக வாழ்க்கையின் அடிப்படையில் விளங்கும் பேருண்மையை அவர் கண்ட காட்சி அடிக்கடி நிகழ்ந்தது. "அனைத்து யிர்களின் உயிர்ப்பை, அடிப்படையை, சாரத்தை அவர் கண்டார், அறிந்தார்" என்று அவர் கூறுகிறார். ஆன்மா இறையுடன் ஒன்றித்த அனுபவத்தைப் பற்றி அவர் கூறுகிறார் : நான் உங்களுக்கு ஒரு லௌகிக உதாரணத் தைக் கூறுகிறேன். இயல்பாகவே கருப்பாக இருக்கும் ஒரு இரும்புத் துண்டு சூடுபடுத்தப்பட்டால் சிவப்பாக மாறுகிறது. அதை உற்று நோக்குங்கள். நெருப்பு அதற்குள் புகுந்து அதை ஒளிர்விடச் செய்கிறது. இப்பொழுது அந்த இரும்பு இல்லாமல் போய் விடுவதில்லை. இரும்பும் இருக்கிறது. அதுபோல் நெருப்பின் தன்மையும் மாறுவதில்லை. அது இரும்பைத் தன்னுள் இழுத்துக் கொள்வதில்லை. ஆனால் அது இரும்பினுள் ஊடுருவி ஒளிர்கிறது. இரும்பும், நெருப்பும் முன்பும் பிறகும் தத்தம் தன்மையுடனேயே திகழ்கின்றன. இதே போலத் தான் தெய்வத்திடம் உள்ள ஆன்மா. தெய்வம் ஆன்மாவில் ஊடுருவி அதில் லயிக்கிறது. இருப்பினும் ஆன்மா தெய்வத்தை அறிவதில்லை. ஆனால் தெய்வம் ஆன்மாவை உணர்கிறது. அது ஆன்மாவை மாற்றுவதில்லை. ஆன்மாவிற்கு அது தெய்வீகத்தை அளிக்கிறது".

## 80. ஏசு கிறிஸ்துவின் அனுபவம்

கலிலீ நாசரேத்திலிருந்து ஏசு வந்தார். ஜோர்டானில் யோவானால் ஞானஸ்நானம் செய்விக்கப்பட்டார் என்று புனிதமார்க்கின் திருவசனம் கூறுகிறது. "நீரிலிருந்து வெளியே வந்ததும் அவர் சொர்க்கத்தின் கதவுகள் திறந்திருப்பதைக் கண்டார். ஒரு புறாவின் வடிவத்தில் ஆவி

அவர் மீது இறங்கியது. அப்போது விண்ணிலிருந்து "நீயே எனது அன்பிற்குகந்த திருமகன். நான் உன்னிடம் மிகவும் திருப்தி அடைந்திருக்கிறேன்", என்ற அசரீரி ஒலி எழுந்தது. உடனே அந்த ஆவி அவரை காட்டிற்கு அனுப்பியது. காட்டிலே அவர் நாற்பது நாட்கள் தனிமையில் இருந்தார். சாத்தான் அவரை தூண்ட முயன்றான். அவர் கொடிய காட்டு விலங்குகளுடன் வாழ்ந்தார். தேவதூதர்கள் அவரைப் பாதுகாத்தனர்.

புனித மாத்தியூவின் 17ம் அத்யாயத்தில் நாம் வாசிக்கிறோம்: "ஆறு நாட்களுக்குப் பிறகு ஏசு தன்னுடன் பீட்டர், ஜேம்ஸ் மற்றும் யோவானை உயரமான மலைப் பகுதிக்கு கூட்டிச் செல்கிறார். அவரது உருவம் மாறுகிறது. சூரியனைப் போல அவரது முகம் ஒளிர்கிறது. அவரது உடை கண்ணைக் கூசும் பிரகாசத்துடன் ஒளிர்கிறது. அப்போது மோஸஸும், எலியாவும் அங்கு அவருடன் உரையாடுகின்றனர். பிறகு பீட்டர் ஏசுநாதரிடம் சொன்னார் : "பிரபுவே! இப்பொழுது நாம் இங்கு இருப்பது நல்லது. நீங்கள் விரும்பினால் உங்களுக்கும், மோஸஸுக்கும், எலியாவுக்கும் மூன்று குடிசைகளை இங்கே அமைக்கிறோம்." அவர் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே அவர்கள் தலைக்கு மேல் மேகம் ஒன்று மறைப்பதைக் கண்டனர். மேகத்திலிருந்து "இவரே எனது பிரியமான மைந்தன். அவர் சொல்வதைக் கேளுங்கள்", என்ற ஒலி கேட்டது. சீடர்கள் அதைக் கேட்டதும் பயந்துபோய் கீழே விழுந்தனர். ஏசு வந்தார். அவர்களைத் தொட்டு, "எழுந்திருங்கள், பயப்படாதீர்கள்", என்று சொன்னார். அவர்கள் கண் விழித்துப் பார்க்கையில், அவர்கள் ஏசுவைத் தவிர வெறு எந்த மனிதரையும் கண்டார்களில்லை. அவர்கள் மலையிலிருந்து இறங்கி வந்ததும் ஏசுநாதர் அவர்களிடம், "தேவ மைந்தன் மரித்து எழும்பும் வரை

நீங்கள் கண்டகாட்சியை யாரிடமும் சொல்லாதீர்கள்", என்று சொன்னார்.

## 81. கிறிஸ்து - உணர்வு

தெளிவடையாத சாதாரண மனதிற்கு தெய்வீக ஞானத்தின் தங்கச் சாவி கிட்டுவதில்லை. 'யான்-எனது' என்னும் லௌகிக மயக்கத்திலிருந்து நமது உணர்வு மேலே எழும்பினால்தான், நமது உணர்வு ஆன்ம ஒளியில் ஒன்றித்தால்தான் நம்மால் அதைக் கண்டுகொள்ள முடியும்.

ஒளிமயமான பிரபஞ்ச உணர்வை ஆன்மீக ஒளியால் மட்டுமே நம்மால் கண்டு கொள்ள முடியுமே அன்றி, வெறும் அறிவால் அல்லது கொள்கையால் மட்டும் அல்ல. ஆன்ம ஞானத்தில் ஒரு முறை திளைத்துவிட்டால், அதே ஒளியை நாம் எல்லாப் பொருள்களிலும், ஜடம், சேதனம் அனைத்திலும் காண்கிறோம். எல்லாப் பொருள்களின் பின்னும் ஒரே சமமான நித்தியப்பொருளைக் காண்கிறோம்.

மாறிய அந்த உணர்வின் பேரொளியில் நாம் அனைவரும் அந்த ஒரே நித்திய வஸ்துவைச் சேர்ந்தவர்கள், பேருண்மைப் பிழம்பின் ஒளிச் சுடர்கள் நாம் என்பதை உணர்கின்றோம். எங்கும் நிறைந்த அந்தப் பேருணர்வு மையமும் பரிதியும், ஆதியும் அந்தமும், சிறியதும் பெரியதும், லாபமும் நஷ்டமும் எல்லாம் ஒன்றே என்பதைப் புகட்டுகிறது. அனைத்தையும் சூழும் அசைவற்ற மோனத்தில் நிலைகொண்டாலும் அலைவு அற்ற பரந்துவிரிந்த பேரண்டப் பெருவெளியில் முயற்சியற்ற முயற்சியாக அது அலையெனத் தானே பாய்கிறது.

புரிதற்கு அரிய கடினமான 'நிர்வாணம்' என்ற நிலையை புத்தபிரான், " பெருஞானத்தின் ஆத்மபோதம், பூரண அன்பு அனைவரையும் அரவணைத்து, தன்னை மறந்து

கருணையுடன் ஆட்கொள்கிறது என்று விளக்கினார். இதையேதான் கிறிஸ்துநாதரும், சிறிய 'நான்' என்பதை இழந்தவன்தான் நித்தியப் பெருவாழ்வைக் கண்டு கொள்ளமுடியும் என்கிறார். இந்த கிறிஸ்து போதம் ஏசுநாதரின் போதனைகளின் படி வாழ்பவனும் ஆன்மீகப் பயிற்சிகளாலும் அடையப்படுகிறது.

## 82. ஸமாதியும் ஆன்மீக அனுபவமும்

மனதைப் பொருள்களிலிருந்து பிரியுங்கள். உங்கள் இதயத்தின் அடி ஆழத்தில் மூழ்கி ஆத்மனில் இருங்கள்.

ஸமாதியில் எல்லா நாமரூபங்களும் மறைகின்றன. அதில் எல்லையற்ற ஒளிக் கடல் உள்ளது.

திரையில் வரையப்பட்டுள்ள படங்களைப் போல, மற்றும் நிழல்களைப் போல உருவங்கள் பொய்யாகத் தோற்றமளிக்கின்றன.

காலமும் வெளியும் மறைகின்றன. ஆணவம் மறைகிறது. எல்லா இருமைகளும் மறைகின்றன. எழுவாய் - படர்க்கை தொடர்பு மறைகிறது.

எல்லையற்ற சூன்யம் மட்டுமே அனுபவிக்கப்படுகிறது.

" நான் இருக்கிறேன் - அஹம் அஸ்மி' என்ற அனுபவம் உள்ளது.

பிறகு சச்சிதானந்த அனுபவம் வருகிறது.

பின் (கேவல அஸ்தி) இருப்பு மட்டுமே எஞ்சுகிறது. ஆன்மா பிரம்மனில் லயிக்கிறது.

நிர்விகல்ப ஸமாதியில் பரமானந்தம் உண்டு.

## 83. முனிவரும் ஸமாதியும்

1. முனிவர் தமது இருப்பின் ஆழ்ந்த உட்பகுதியினுள் புகுகையில் அவர் உட்பிரகாச நிலையை அனுபவிக்கிறார். அதில் தனித்தன்மை அனைத்தும் இழக்கப்படுகிறது. இருமை, பன்மை எதுவும் உணரப்படுவதில்லை. புலப் பொருள்களை அனுபவிக்கும் பொழுது கிடைக்காத பேரின்பம் அதில் கிட்டுகிறது.

2. மனமும் புத்தியும் செயல்படாத நிலையில், எல்லா எண்ணங்களும் இல்லாத பொழுது, புலன்கள் செயல்படாத நிலையில் ஒருவன் ஆத்மானந்தத்தை அனுபவிக்கிறான்.

3. நித்தியப் பொருளை அறிவதுதான் ஞானம். வேற்றுமை அற்றதைக் காண்பதுதான் ஞானம்.

4. பேரின்பத்தில், பேரமைதியில் யோகி இருப்பதுதான் ஸமாதி.

## 84. ஆன்மாவின் யாத்திரை

உபாசனை அல்லது வழிபாடு செய்கிறவர்கள் தேவதூதனின் துணையுடன் பிரம்மலோகம் செல்கின்றனர். பிரதிமை அல்லது பௌதிகக் குறியீடுகளை தியானிக்கிறவர்களால் அங்கே போகமுடியாது.

தேவயானம் (தேவதைகள் மார்க்கம்) கிரம முக்திக்கு வழிவகுக்கிறது.

பரப்பிரம்மன் எல்லையற்றது என்பதால் அங்கே போவது என்பதில்லை. மாறாக அதனுடன் நமது ஒன்றிப்பை உணரத்தான் முடியும்.

தேவயானத்தினால் சொர்க்கம் அல்லது பிரம்ம லோகத்திற்குப் போகும் பக்தன் படிப்படியான மோட்சம் அல்லது கிரம முக்தியை அடைகிறான். காரிய பிரம்மன்

பரப்பிரம்மனுடன் லயிக்கும் போது தான் அவன் முழு முக்தியை அவனால் அடைய முடியும்.

மரணத்தின் பொழுது பக்தனின் உடலை விட்டு ஆன்மா ரயிமார்க்கத்தால் (அர்ச்சிராதி மார்க்கம்) பிரம்மலோகத்திற்குப் போகிறது.

அப்த (வருடம்) தேவதையின் உலகத்தை அடைந்த பின்னர் அவன் வாயு லோகத்திற்குப் போகிறான்.

தடித் அல்லது மின்னல் உலகத்திற்குப் போனபின் அவன் நீர்க்கடவுளாகிய வருணலோகத்திற்குப் போகிறான்.

மின்னல் உலகத்திலிருந்து ஒரு தேவதூதன் (அமானவபுருஷன்) அவனுடன் வருணலோகம், இந்திரலோகம் மற்றும் பிரம்மலோகத்திற்குச் செல்கிறான்.

நிர்க்குண பிரம்மத்தை உணர்ந்தவர்கள் ஜீவப் பிரம்ம ஐக்கியத்தை அடைகின்றார்கள்.

பக்தன் நாமரூபங்களுடன் கூடிய ஸகுணப் பிரம்மத்தை அடைகிறான்.

(ஸகுணப் பொருளில்) முக்தனுக்கு பிரபஞ்சத்தின் சிருஷ்டி - ஸ்திதி - சம்ஹார சக்தி கிடையாது. அவன் மீண்டும் பிறப்பிறப்புடன் கூடிய இந்த சம்சாரத்திற்குத் திரும்புவதில்லை.

ஜீவன்முக்தன் அல்லது துறவியின் பிராணன்கள் எந்த லோகம் அல்லது எந்த இடத்திற்கும் செல்வதில்லை. அவை பரப்பிரம்மனில் லயமாகின்றன. முனிவர் பரப் பிரம்மனுடன் ஐக்கியமாய் விடுகிறார்.

## 85. ராஜயோக அனுபவங்கள்

ஒரு ராஜயோகி யோக ஏணியில் படிப்படியாக ஏறுகிறார். நிலையான தியானம் மற்றும் மன ஒருமைப்பாட்டுப் பயிற்சியால் மனம் படிகத்தைப் போன்று தூயதாகிறது. எந்தப் பொருளின்பால் அது திருப்பப்படு கிறதோ அதை அது அப்படியே பிரதிபலிக்கிறது. வெண்படிகம் ஒன்று அதன் பக்கத்தில் வைக்கப்பட்ட பொருளின் நிறத்தைப் பெறுவதைப் போல, மனமும் அதனுடன் தொடர்புள்ள பொருள்மயமாகிறது. இம்முறைக்கு சமபத்தி என்று பெயர். மனம் தன்மய பரிணாமத்தை அடைகிறது. அதாவது பொருளுடன் ஒன்றாகிவிடுகிறது. இதைத் தொடர்ந்து ஆழ்ந்த ஸமாதி வருகிறது.

### ஸபீஜ ஸமாதி

ஸ்தூலப் பொருளின் வார்த்தை, அர்த்தம் மற்றும் எண்ணத்துடன் மனமானது ஒன்றிவிடும் பொழுது அது ஸவிதர்க்க ஸமாதி எனப்படுகிறது. இந்த நிலையில், ராஜஸ குணம் இருப்பதால் வார்த்தை, அதன் பொருள், எண்ணம் ஆகியவற்றை பிரித்துப் பார்க்க மனத்தால் இயலாமல் போகிறது. சித்த விருத்தி கற்பனை, குழப்பத்திலிருந்து விடுபடவில்லை. உதாரணமாக ஒரு பசுவைப் பற்றி நீங்கள் தியானித்தால் நீங்கள் அந்த வார்த்தை, அதன் அர்த்தம் பிறகு அதுபற்றிய சிந்தனை அல்லது எண்ணத்தைப் பற்றி நினைக்கிறீர்கள் அல்லவா? 'பசு' என்ற வார்த்தை நாக்கில் இருக்கிறது. 'பசு' என்ற பொருள் கொட்டிலில் உள்ளது. 'பசு'வைப் பற்றிய எண்ணம் மனத்தில் இருக்கிறது. வெவ்வேறான இம்மூன்றும் மனதின் வேகமான செயல்பாட்டால் ஒன்றோடொன்று குழம்பி ஒன்றாகத் தெரிகின்றன.

ஸவிதர்க்க ஸமாதிப் பயிற்சியால், படிப்படியாக ரஜஸ் அகற்றப்படுகிறது. ரஜஸ் கடந்த சம்ஸ்காரங்கள் மூலம் நினைவை உண்டாக்குகிறது. நினைவு பொருளின் பெயர், உருவம், அர்த்தம் ஆகியவற்றிடையே தொடர்பை உண்டாக்குகிறது. நிர்விதர்க்க ஸமாதியில் நினைவின் ஆற்றல் கட்டுப்படுத்தப்படுகிறது. பெயர், அர்த்தம், எண்ணம் ஆகியவற்றிடையே குழப்பம் எதுவுமின்றி பொருள் அதன் யதார்த்த நிலையில் ஒளிர்கிறது.

நிர்விதர்க்க ஸமாதி தீவிரமாகும் பொழுது யோகியின் சித்தம் ஆகாயம், காற்று, நெருப்பு போன்ற சூக்ஷ்மமான பொருள்களின் உலகத்தில் புகுகிறது. யோகி கால, தேச, குணாதிசயங்களுடன் சூக்ஷ்மப் பொருள்களைத் தியானிக்கிறான். மனம் சூக்ஷ்மப் பொருளில் நேரடியாகப் பொருந்துவதில்லை. காலம், வெளி ஆகியவற்றின் தொடர்புடன் அது பொருளுடன் தொடர்பு வைக்கிறது. இந்த நிலை ஸவிகார ஸமாதி எனப்படுகிறது.

காலம், வெளி, குணாதிசயங்கள் இன்றி யோகி சூக்ஷ்மப் பொருள்களில் தியானிப்பானானால் அவன் நிர்விகார ஸமாதி நிலையை அடைகிறான். சித்தத்தின் ஒளி அதிகரிக்கிறது.

ஸ்தூலம், சூக்ஷ்மம் ஆகியவற்றைக் கடந்து நிற்கும் மனம் 'அஹம் அஸ்மி - நான் இருக்கிறேன்' என்ற விருத்தியுடன் ஒளிர்கிறது. இங்கு சத்வ குண பிரதானமான அஹங்காரம் அல்லது ஆணவ தத்துவம்தான் ஸமாதிக்குரிய பொருளாகிறது. பதினொரு புலன்கள் (5 கர்மேந்திரியங்கள், 5 ஞானேந்திரியங்கள், மனம்), 5 சூக்ஷ்ம பூதங்கள், அவற்றின் விளைவுகள், 5 ஸ்தூல பூதங்கள் ஆகியவற்றின் ஆதாரம் மூல அஹங்காரமேயாகும். இது ஸானந்தஸமாதி எனப்படுகிறது. ஏனெனில் இதில் ஒருவித இன்ப அனுபவம் உண்டு. இது நிர்விகார ஸமாதியின் மேல் நிலை. நிர்விசார

ஸமாதியின் மிக உயர்ந்த நிலையில் யோகியின் சித்தம் 'இருக்கிறேன் - அஸ்மி' என்பதுடன் மட்டுமே ஒளிர்கிறது. ஸத்வ சித்தம், அல்லது அஸ்மிதம் அல்லது மஹத் இந்த ஸமாதிக்கு ஆதாரமாகும். அஸ்மிதம் என்பது அஹங்காரத்துடன் கூடிய உணர்வால் ஒளிமயமாக்கப்பட்ட தூய சித்தம் ஆகும். இது ஸஸ்மித ஸமாதி எனப்படுகிறது.

இந்த ஆறு ஸமாதிகளும் ஸபீஜ ஸமாதி எனப்படுகிறது. அதாவது விதை அல்லது ஆதாரத்துடன் கூடிய ஸமாதியாகும். ஸ்தூலமோ சூக்ஷ்மமோ மனதிற்கு இங்கே ஒரு துணை உண்டு. இந்த ஆறு ஸமாதிகளும் ஸம்ப்ரக்ஞாத, ஸபீஜ அல்லது ஸாலம்பன ஸமாதி என்ற கீழ்நிலை ஸமாதிகளாகும்.

## ரிதம்பர ப்ரக்ஞை

நிர்விசார ஸமாதி ஆழ்ந்ததாகும் பொழுது, ஸச்மித ஸமாதியின் மிக உயர்ந்த நிலை எய்துகிறது. யோகி சித்தத்தில் ஒளியைப் பெறுகிறான். ரஜஸின் அசுத்தமும், தமஸின் திரையும் அகல்கின்றன. ஸ்ரீ வியாசர் இந்த நிலையை விவரிக்கிறார் :

"(ஸமாதியில் பிறந்த அறிவு) ப்ரக்ஞை எனும் அரண்மனையில் வசிப்பவனாக, தனது கவலையை ஒழித்த யோகி, மேட்டில் உள்ளவன் பிறரைப் பள்ளத்தில் உள்ளவர்களாகப் பார்ப்பதுபோல, மற்றவர்களைத் துன்பத்தில் மூழ்கியவர்களாகப் பார்க்கிறான்".

இந்த ஸமாதியில் தோன்றும் அறிவு உண்மை மயமாக இருப்பதால் ரிதம்பர என்று அழைக்கப்படுகிறது. மயக்கம், பொய், அறிவு, அறியாமையின் சுவடே இதில் கிடையாது.

ருதம், சத்யம் என்ற இரண்டு வார்த்தைகளும் ஒரே பொருளுடையவை என்றாலும், அவற்றிற்கிடையே சிறிது

வேறுபாடு உண்டு. ஸத்யம் என்பது ஊகிக்கக் கூடிய உண்மை. ருதம் என்பது கண்ணால் காணும் உண்மை. நேரில் உணரக்கூடிய உண்மை ருதம் எனப்படுகிறது.

நேரில் காண்பதாலோ, ரிஷிமுனிவர்களின் வாசகங்களாலோ, மறைநூல்களின் மூலமாகவோ அடையப்படக் கூடிய அனைத்து அறிவையும் தாண்டிச் செல்கிறது ரிதம்பர ப்ரக்ஞை. ஏனெனில் யோகியின் அகமுக அறிவினால் எது ஒளிர்விக்கப்படுகிறதோ அது பகுத்தறிவாலோ அல்லது வெறும் புலன் அறிவாலோ பெறமுடியாது. விவேக ஒளியைப் பெறும் வரை மனிதன் இருளில் உழல்கிறான். ரிதம்பர ப்ரக்ஞை விவேகக்யாதிக்கு இணையானது.

## விவேக க்யாதி

அச்மித என்பது உணர்வினால் ஒளியைப் பெறும் சித்த நிலையாகும். அதில் அஹங்காரத்தின் விதை உள்ளது. மஹத் அல்லது ஸாத்விக சித்தத்தின் தாமஸிக அறியாமையின் விளைவாக புருஷன் சித்தத்துடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்கிறான். அதன் விளைவாக அச்மிதக்லேசம் அதாவது ஆணவத் தாக்கம் உண்டாகிறது. இந்த அச்மிதக்லேசம் தான் மற்ற தொல்லைகளான பந்தம், வெறுப்பு, வாழ்வில் பற்று, மற்றும் எல்லா சுயநலச் செயல்களுக்கும் காரணமாக அமைகிறது. புருஷன், சித்தம் இவற்றிற்கிடையே யுண்டான பிரித்துணரும் அறிவுதான் விவேக க்யாதி எனப்படுகிறது. இது அச்மிதக்லேசத்தை இல்லாதாக்குகிறது. ஞானாக்கினி எல்லா க்லேசத்தையும் நாசம் செய்கிறது. எரிந்த விதைகள் எவ்விதம் திரும்பவும் முளைக்காதோ, அதுபோல விவேக க்யாதி எனும் தீயினால் எரிக்கப்பட்ட சம்ஸ்காரங்கள் மீண்டும் பலன் தரமாட்டா.

உண்மையில் பார்ப்போனுக்கும், பார்க்கப்படு பொருளுக்கும் இடையில் உள்ள வேறுபாடே விவேகமாகும். க்யாதி என்றால் அறிவு என்று பொருள். சித்தம், புருஷனுக்கிடையேயான வேறுபாட்டு அறிவே விவேகக்யாதியாகும். நான் உடல், புலன்கள், மனம், புத்தியிலிருந்து வேறானவன் என்ற நேரடியான ஞானமே அது.

விவேகக்யாதி சித்தத்தின் சாத்விகத் தன்மையின் மிக உயர்ந்த நிலையாகும். நமக்கு மிகவும் பிரியமானவரின் பிம்பம் எவ்விதம் கண்ணாடியில் தெரிவது உண்மையாகாதோ, அது போல சித்தத்தின் மிக உயர்ந்த தன்மையில் தோன்றும் அறிவும் உண்மையானதாகாது. அது ஸ்வரூப ஸ்திதி அல்லது ஒருவனது யதார்த்த நிலையில் இருப்பது ஆகாது.

பரா வைராக்கியம் அல்லது மேலான வைராக்யத்தைப் பயிலுவதால் யோகி இந்த விருத்தியிலிருந்தும் விடுபட்டு தனது சொரூபத்தில் நிலைபெறுகிறான்.

விவேக்யாதிக்கு ப்ரஸங்க்யானம் என்றும் மற்றொரு பெயர் உண்டு. பகுத்தறிவு அல்லது ஆழ்ந்த உள் அறிவு என்பது இதன் பொருள்.

## தர்மமேக ஸமாதி

"விவேக ஞானத்தின்பாலும் வைராக்யத்துடன் இருக்கும்யோகி தர்மமேக ஸமாதியை அடைகிறான். விவேகஞானம் தொடர்ந்து இருப்பதால் ஏற்படுவது இது". (பதஞ்ஜலியோக சூத்திரம் : IV : 29).

தர்மமேகம் என்றால் தர்மமாகியமேகம் என்று பொருள். இது ஒரு முக்கியமான பெயர். கைவல்ய நிலையை அது அருள்வதால் அந்தப் பெயர் வந்தது.

விவேக்யாதி அல்லது பகுத்தறியும் ஞானம் பூரணமடையும் பொழுது க்லேசங்கள் வறுத்த விதைகள் போல முளைக்கும் திறனிழந்து இருக்கின்றன. முந்தைய பிறவிகளின் ஸம்ஸ்காரங்கள் எரிக்கப்படுகின்றன. ஆரம்பத்தில் வ்யுத்தானம் அல்லது புறத்தே போகும் ஸம்ஸ்காரங்கள் விவேகக்யாதியின் ஓட்டத்தை தடுக்கின்றன. அனைத்து சித்துக்களின் பாலும் முழு வைராக்யத்தை வளர்த்து விவேக்யாதி தீவிரப்படுத்தப்படுகையில் ஒருவன் தர்ம மேக ஸமாதியை அடைகிறான். எல்லா இடங்களிலும் எல்லா நிலைமைகளிலும் யோகி பூரண ஞானத்துடன் இருக்கிறான். சித்துக்களின் பின் ஓடுபவர்கள் இன்னும் கட்டுண்டவர்கள். அவர்கள் விஷயத்தில் சித்துக்களிடம் உள்ள பற்றுதல் காரணமாக வ்யுத்தான சம்ஸ்காரங்களால் விவேகக்யாதியின் ஓட்டம் தடைப்படுகிறது.

இந்த மகத்துவம் வாய்ந்த ஸமாதியின் பலன் அனைத்து கிலேசங்கள் மற்றும் கர்மங்கள் இல்லாதாவதாகும். க்லேசங்கள் அல்லது துன்பங்கள் ஐந்து : அறியாமை, ஆணவம், பற்றுதல், வெறுப்பு, வாழ்வில் நாட்டம். கர்மங்கள் மூன்று : வெள்ளை அல்லது தூயது, கறுப்பு அல்லது அசுத்தமானது, கலந்தது. தர்மமேக ஸமாதியை அடைந்த ஒருவன் வாழ்விலேயே விடுதலைபெற்ற ஜீவன் முக்தன் ஆவான். அவனது செயல்கள் வெண்மையுமல்ல, கறுப்புமல்ல. அவன் கர்ம பந்தங்களிலிருந்து விடுபட்டவன். வீழ்ச்சி பயம் அவனுக்கு இல்லை. மறுபிறவியும் அவனுக்குக் கிடையாது. ஸம்ஸ்கார விதைகள் ஒட்டு மொத்தமாக வறுக்கப்படுகின்றன.

தர்மமேகம் அஸம்ப்ரக்ஞாத அல்லது நிர்பீஜ ஸமாதியின் மூலம் கைவல்யம் அல்லது பூரண விடுதலையை நல்குகிறது.

## சித்தத்தின் ப்ரசாந்தவாஹித நிலை

மனத்தின் புறத்தே பாயும் சம்ஸ்காரங்களை விட ஸமாதியின் ஸம்ஸ்காரங்கள் அல்லது பதிவுகள் பலமானவை. ஸமாதியை ஒழுங்காகப் பயில்வதால் வ்யுத்தான சம்ஸ்காரங்கள் என்னும் அனைத்து புறமுக சம்ஸ்காரங்களை இல்லாதாக்குகிறான்.

ஸமாதிப் பயிற்சியானது சக்திமிக்க ஸமாதி ஸம்ஸ்காரங்களை உண்டாக்குகிறது. இந்த ஸமாதி ஸம்ஸ்காரங்கள் ராகத்வேஷமெனும் உலக சம்ஸ்காரங்களை அழிக்கின்றன. புறத்தே பாயும் ஸம்ஸ்காரங்கள் இல்லாதாவதால் யோகி . ஆழ்ந்த ஸமாதியை அனுபவிக்கிறார். அதனால் சித்தத்தின் ஸம்ஸ்காரங்களை அழிப்பதற்கான அதிக ஆற்றலைப் பெறுகிறான். இந்த வட்டம் திரும்பத் திரும்பச் செயல்படுவதால் அவன் விவேகக்யாதி அல்லது பகுத்துணரும் ஞானத்தைப் பெறுகிறான். விவேகக்யாதியின் பதிவுகள் எல்லா புறமுக ஸம்ஸ்காரங்களையும் இல்லாதாக்குகிறது. ஆனால் விவேகக்யாதியின் ஸம்ஸ்காரங்களும் கூட பராவைராக்யம் அல்லது உயர்ந்த பற்றின்மையால் கட்டுப்படுத்தப்படுகின்றன.

பராவைராக்ய சம்ஸ்காரங்கள் ஸம்ஸ்காரசேஷம் (மீதியுள்ள சம்ஸ்காரங்கள்) என்று அழைக்கப்படுகின்றன. ஏனெனில் அவை ஏனைய ஸம்ஸ்காரங்கள் அனைத்திற்கும் முற்றுப்புள்ளி வைக்கின்றன.

நிர்பீஜ ஸமாதி அல்லது ஸமாதியின் மிக உயர்ந்த நிலையில் பராவைராக்ய ஸம்ஸ்காரங்கள் மட்டுமே எஞ்சுகின்றன. இந்த ஸம்ஸ்காரங்கள் சித்தத்தின் கட்டுப்பாட்டு மாறுபாடுகளாகும்.

படிப்படியான புறமுக ஸம்ஸ்காரங்களின் மறைவினால் யோகி சித்தவிருத்திகள் கட்டுப்படுவதை உணர்கிறான். இதற்கு நிரோத பரிணாமம் என்று பெயர்.

விருத்திகள் இன்றி குணங்களால் ஒரு வினாடி கூட இருக்க முடியாது. சித்தத்தில் இரண்டு வகையான விருத்திகள் நிலவுகின்றன. 1. புற 2. அக. பல்வேறு பொருள் சார்ந்த விருத்திகள் புற விருத்திகளாகும். சத்வசித்தத்தில் எழும் அகவிருத்திகள் அமைதியான ஓட்டமாக உள்ளன.

நிரோத ஸம்ஸ்காரங்களின் பயிற்சியால் (பதிவுகளைக் கட்டுப்படுத்துவதால்) வ்யுத்தான ஸம்ஸ்காரங்கள் (புற முகஸம்ஸ்காரங்கள்) கட்டுப்படுத்தப்படுகின்றன. வ்யுத்தான ஸம்ஸ்காரங்களின் தடைகளிலிருந்து விடுபட்ட நிரோத ஸம்ஸ்காரங்கள் சத்வ சித்தத்தில் தடையின்றி இயங்குகின்றன. இது சித்தத்தின் பிரஸ்தான வாஹிதம் எனப்படுகிறது.

## நிர்பீஜ ஸமாதி

ஸம்ப்ரக்ஞாத ஸமாதியில் சித்தத்திற்கு சிறிது துணை உண்டு. ஆனால் அஸம்ப்ரக்ஞாத ஸமாதியில் அத்தகைய துணை கிடையாது. எனவே அது நிர்பீஜஸமாதி (மறுபிறவிக்கான விதை இல்லாத) எனப்படுகிறது.

ஸம்ப்ரக்ஞாத ஸமாதியின் மிக உயர்ந்த நிலையில் விவேகக்யாதி விருத்தி மட்டுமே சித்தத்தில் உள்ளது. ஆனால் அஸம்ப்ரக்ஞாத ஸமாதியில் பராவைராக்யம் அல்லது மேலான பற்றின்மையால் இந்த விருத்தியும் கட்டுப்படுத்தப்படுகிறது. யோகி அஸம்பரக்ஞாத ஸமாதியின் மூலம் ஜீவன் முக்தி நிலையை அடைகிறார். இதுவே எல்லா கடமைகள் மற்றும் முயற்சிகளின் முடிவாகும்.

அஸம்ப்ரக்ஞாத, நிரோத, நிர்பீஜ, நிராலம்ப - இந்த எல்லா வார்த்தைகளும் மிக உயர்ந்த உணர்வு கடந்த நிலையைக் குறிக்கின்றன.

விறகை எரித்த தீ தானும் அடங்கிவிடுவது போல, எல்லா வ்யுத்தான ஸம்ஸ்காரங்களையும் இல்லாதாக்கிய நிரோத ஸமாதியின் ஸம்ஸ்காரங்களும் தாமாகவே மறைந்துவிடுகின்றன. அதன்பின் கைவல்யம் அல்லது பூரண சுதந்திரம் வருகிறது. சித்தத்தின் குணங்கள் பிரகிருதியில் லயமாகின்றன.

## ஸ்வரூப அவஸ்தையும் ஸ்வரூப ஸ்திதியும்

அவஸ்தை என்பது தாற்காலிக நிலை. ஆனால் ஸ்திதி என்பது நிரந்தர அமைப்பு. நிரோத ஸமாதியில் யோகி ஸ்வரூப அவஸ்தையை அடைகிறார். ஆனால் மனத்தின் நிரோத நிலையில் அவர் வெற்றி பெறாத வரை, ஸ்வரூபத்தில் அவர் நிலை பெற்றிருப்பதாகக் கூற முடியாது.

உதாரணமாக, மனதின் விக்ஷிப்த நிலையில் இருக்கும் ஒருவன் சிறிது முயற்சிக்குப் பின் ஏகாக்ரதை அல்லது ஒரு முக மன நிலையை அடைகிறான். சித்த விருத்திகளின் அடக்கம் தொடர்ந்த பயிற்சியால் இயற்கையானதாகும் பொழுது அதை ஒருவன் நிரோத ஸ்திதி அல்லது ஸ்வரூப ஸ்திதி என உணரவேண்டும். எனவே ஸ்வரூப ஸ்திதியை ஒருவன் அடையும் வரை நிரோத ஸமாதியைப் பயில வேண்டும்.

ஜீவன் முக்தர் ஒருவர் யாண்டும் ஆத்மனில் நிலைபெற்றிருக்கிறார். அவருக்கு ஸ்திதப்ரக்ஞன் என்று பெயர். நிலைத்த ஞானத்தை உடையவர் என்பது அதன் அர்த்தம். பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் தமது பகவத்கீதை இரண்டாம் அத்யாயத்தின் 55வது சுலோகம் முதல் கடைசி வரை ஜீவன்முக்தரைப் பற்றிய விளக்கத்தைத் தருகிறார்.

செயல்களில் ஈடுபட்டிருக்கையிலேயே முனிவர் ஒருவர் யாண்டும் ஸ்வரூபத்தில் அல்லது ஆத்மனில் நிலைபெற்றிருக்கிறார். அவர் எப்பொழுதும் ஸஹஜஸமாதியில் ஆழ்ந்திருக்கிறார். இறைவனது விருப்பத்தை லோகக்ஷேமத்திற்காக செயல்படுத்தும் ஒரு கருவியாக அவர் செயல்படுகிறார். அவரிடம் ஆணவமோ, அஹங்காரமோ இல்லை. அவரது ஆனந்தம் விளக்குதற்கரியது. அவரது புகழ் மகத்தானது. அவரது பெருமை மிக உயர்ந்தது. அவருக்கு நமது வணக்கங்கள்.

## 86. முஸ்லிம் யோகிகளின் அனுபவங்கள்

மனிதனின் பூரணத்துவம் பற்றிய முஸ்லிம் யோகிகளின் கேள்விக்குப் பலவிதங்களில் பதில் சொல்லலாம். சுருக்கமாகச் சொல்லப்போனால் அவன் உருவாக்கப்பட்டிருக்கும் தெய்வீகத்துடன் அவனது அடிப்படை ஒற்றுமையை எவன் உணருகிறானோ அவனே பூரண மனிதன் ஆவான். முஸ்லிம் துறவு என்பது தெய்வீகப் பேரொளியையும் காணாத, அறியாத காட்சிகளையும் அறிவையும் அடைதலேயாகும். புலன் அறிவுத் திரை அகன்று, அறிவின் உணர்வு பாகம் உண்மையின் பேரொளியில் லயிக்கும் பொழுது இது கிட்டுகிறது.

'பாரசீக யோகியர்' என்னும் வெளியீட்டில் காணப்படுவதாவது :

"வாழ்வு என்பது கத்தி முனை போன்று குறுகிய நேரான தெரியாத பாதையாகும் என்பது முஸ்லிம் யோகியர் கூற்று. சாதகனுக்கு நம்பிக்கையன்றி வேறு ஒளி கிடையாது. பக்தியன்றி வேறு துணை கிடையாது. எதிரேயுள்ள பாதை புதிரானது. குழிகள் ஏராளம். சாதகன் இருளில் பயணம் செய்ய வேண்டும். இருளில் உழல்கையில் வெளிச்சம் வேண்டி அவன் அலறக் கூடாது. பாதையின் முடிவில்

உள்ள பேரொளியை நோக்கி மிகுந்த நம்பிக்கையுடன் அவன் முன்னேற வேண்டும். ஸூபி தத்துவம் மகத்தானது. இதைக் குறித்து பாரசீகம் மற்றும் ஏனைய மொழிகளில் நிறைய எழுதப்பட்டுள்ளது. உண்மையில் அது ஒரு வாழ்க்கை நெறி. அது பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது. அதை அறியமுடியாது. உணரத்தான் முடியும்.

## 87. கடவுள் ஏன் மனிதனைப் படைத்தார்?

"சுவாமிஜி! கடவுள் எதற்காக மனிதனைப் படைத்தார்?" தாகுர்சிங் சுவாமிஜியிடம் கேட்டார்.

"அவரை உணர்வதற்காக" - சுவாமிஜி உடனே பதிலளித்தார்.

"கடவுளை உணர்வதற்காக மனிதனைக் கடவுள் படைத்தார் எனில் கடவுள் மனிதனை அவரிடமிருந்து வேறுபட்டவனாக ஏன் படைத்தார்?"

இது மனித அறிவிற்கு அப்பாற்பட்டதொரு கேள்வி.

மனிதனது குறுகிய அறிவுக்கு இத்தகைய பேருண்மைகளை அறியும் திறன் கிடையாது. நீங்கள் அறிவை விற்று விவேகத்தைப் பெற வேண்டும். அப்பொழுதுதான் 'உலகம் ஏன் படைக்கப்பட்டது' என்ற கேள்விக்கான பதில் கிட்டும். அது வரை கிட்டாது. அதற்கு முன் அதற்கான விளக்கத்தைக் கேட்பது, வண்டியை குதிரைக்கு முன் பூட்டுவதற்கு நிகர். எப்படியோ நீங்கள் படைக்கப்பட்டுவிட்டீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும். எப்பொழுதும் பூரண அமைதி, பூரண ஆனந்தம் மற்றும் அழியாத்தன்மையை நீங்கள் நாடிய வண்ணம் இருக்கின்றீர்கள். இவற்றை அழியும் இந்த உலகப் பொருள்களில் பெற முடியாது என்பதும் உங்களுக்குத் தெரியும். அவற்றை பூரணப் பொருளான கடவுளிடம்

மட்டுமே பெற முடியும். அமைதி, ஆனந்தத்திற்கான இந்த நாட்டமே ஆன்மா பூரண அமைதி, மற்றும் ஆனந்தசொரூபி என்பதைக் காட்டுகிறது. உள்ளே மென்மேலும் அறிந்து கொள்ள வேண்டும், சாஸ்வதமாக வாழவேண்டும், இடையறாத இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்ற தொடர்ந்த நாட்டம் இருக்கிறது. இதுவே கடவுள் நாட்டத்திற்கான, ஆன்மநாட்டத்திற்கான நிரூபணம் என்பதை அறியாமையில் உழலும் மனிதன் அறிகின்றானில்லை. இறைவனை உணர்வதுவே மனிதனின் தலையாய கடமை. படைப்பு ஏன் என்று மண்டையை உடைத்துக் கொள்ளவேண்டிய அவசியமில்லை; செய்ய வேண்டியது இறைவனை உணர்வதற்கான முயற்சியே - அதுதான் சாதனை எனப்படும்.

ஆனால் மனிதன் சாதனை புரிய விரும்புவதில்லை. மக்களில் அநேகர் புலன்உலகப் பொருள்களிலேயே திருப்தி அடைந்துவிடுகின்றனர். நீங்கள் சிந்திக்க ஆரம்பித்திருப்பது போன்று அவர்கள் இதுபற்றி சிந்திக்கவே ஆரம்பிப் பதில்லை. அவர்கள் பிறக்கின்றனர். பொருள் சேர்க்கின்ற னர், இன்புறுகின்றனர், துன்புறுகின்றனர், பிறகு மரண மடைகின்றனர். விவேகி ஒருவன் தான் பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடுகிறான். மோட்ச நாட்டம் கொள்கிறான். அந்தப் பரம்பொருளை உணர்கையில் இந்த உலகம் ஒரு வெறும் விளையாட்டாகத் தெரிகிறது. எனவே தான் பரப்பிரம்மன் இந்தப் பிரபஞ்சத்தை வெறும் விளையாட்டாகப் படைத்தது, வேறு எதற்காகவும் அல்ல என்று பிரம்ம சூத்திரங்கள் கூறுகின்றன. அவனது லீலை என்று ஏன் அவை கூறுகின்றன? ஏனெனில் அது மனிதனின். அறிவுக்கு அப்பாற்பட்டது என்பதைச் சுட்டிக் காட்டவேயாகும். எனவே இறைவனை உணர வேண்டி ஏதாவது செய்யுங்கள், செய்யுங்கள், செய்யுங்கள். இதயம் விரிவடைய வேண்டும். நம்பிக்கை வேரூன்ற வேண்டும்.

தியாக உணர்வு வலுக்க வேண்டும். இரக்கம், சுயநலமின்மை, அஹங்காரமின்மை போன்ற நற்குணங்கள் வளர்க்கப்பட வேண்டும். பிறகு உள்ளுணர்வின் காரணமாக இத்தகைய கேள்விகளுக்கான பதில்கள் கிட்டும்.

"பிரதானம் பிரம்மனல்ல" - "பிரதானத்தை பிரம்மன் என்று கொள்ளலாமா!", என்று அன்பர் கேட்டபொழுது சுவாமிஜி," இல்லை. பிரதானம் என்பது பிரகிருதி, அவ்யக்தம், மாயை ஆகும். அது பிரம்மனல்ல. வேலைக்காரனை அரசன் என்று கூறமுடியுமா?",.

## 88. யோகத்தின் விதைகளும் பழங்களும்

### கர்மயோக மார்க்கம்

தன்னலமற்ற சமுதாயத் தொண்டே விதை. அனைத் துயிர்களும் பகவத் சொரூபம், நான் அனைத்துயிரிலும் இறைவனுக்கே தொண்டு செய்கிறேன் என்ற நாராயண பாவனையே மழை. இதயத்தின் விகாஸமே பூ. இதயத் தூய்மையே பழம்.

### பக்தியோக மார்க்கம்

பக்தியே விதை. நம்பிக்கையே வேர். பக்தர்களின் சேவையே மழை. பகவானுடன் ஒன்றித்தலே பழம்.

நிஷ்டையே விதை. பாவனையே செடி. மஹாபாவனை பூ. பகவானிடம் உள்ள தெய்வீக அன்பு தான் பழம்.

### ஹடயோக மார்க்கம்

ஆசனம் விதை. பிராணாயாமம் வேர், ஒழுங்கான பயிற்சியே மழை. நல்லாரோக்கியம் பூ. ஒரு முனைப்பட்ட மனம் பழம்.

### ராஜயோக மார்க்கம்

யமம் (தன்னடக்கம்), நியமம் ஆகியவை விதைகள், தாரணை (மன ஒருமைப்பாடு) வேர். ஈசுவர பிரணிதானம் (இறைவனிடம் சரணாகதி) பூ. அஸம்ப்ரக்ஞாத ஸமாதி (உணர்வு கடந்த நிலை) பழம்.

### ஞானயோக மார்க்கம்

விவேகம் (பகுத்துணர்தல்) விதை. வைராக்யம் (பற்றின்மை) வேர். குருகிருபை மழை. பிரம்மஞானம் (ஆத்ம ஞானம்) பூ. மோட்சம் (முக்தி) பழம்.

## 89. தத்துவ உண்மைகள்

1. தத்துவம் என்பது மார்க்கம். அது எப்படி இருக்க வேண்டும் என்பதை விளக்குவது மட்டுமன்று. மாறாக எது 'இருக்கிறதோ' அதை நேரடியாக உணர்வதாகும்.

2. அனுபவத்தின் பாடங்களைத் தெரிவதே தத்துவம்.

3. ஜீவாத்மனை செயல்களின் விளைவு அனுபவத்தால் மேலான, ஆழ்ந்த, உயர்ந்ததொரு நிலைமைக்கு தயார் செய்வதே வாழ்வாகும்.

4. ஆத்மஞானம் என்பது ஏதோ இல்லாத ஒன்றைப் புதிதாகப் பெறுவதல்ல, அது ஏற்கனவே உள்ளே உள்ள மறந்துபோன பொக்கிஷத்தைத் திரும்பக் கண்டு கொள்வதாகும்.

5. ஆத்மனை உணர்வதற்கான, உண்மையில் இருப்பதை அறிவதற்கான நாட்டமே தத்துவம் ஆகும்.

6. உண்மை என்பது யாண்டும் இருப்பது, நித்திய வாழ்வும் ஆகும். மாற்றம், அழிவு, மரணம் என்பது பொய்.

7. உண்மை அதனுடையதைத் தவிர வேறு எந்த அனுபவத்தாலும் கட்டுப்படுத்தப்படாதது.

8. இந்தப் பிரபஞ்சத்தில் இருப்பது ஒரே சட்டம்தான். அதுவே காரண காரிய நியதி.

9. இந்த உலகின் நல்லதும் தீயதும் தனிநபர்களின் விருப்பங்களின் விளைவுகளேயாகும்.

10. யாரும் எதையும் அதற்காக அன்றி தனக்காகவேதான் நேசிக்கிறான்.

11. மரணமின்றி வாழ்வு இயலாது. மரணம் என்பது வாழ்வின் மற்றொரு அம்சமேயாகும்.

12. ஞானம் செயல் அல்ல. ஞானம் என்பது இருத்தலேயாகும்.

13. உங்களை நீங்கள் அறிந்தாலன்றி, நீங்கள் உங்களை அடைய முடியாது, சேர முடியாது.

14. குணங்களின்றி பொருள் எதுவும் இருக்க முடியாது. செயல்களன்றி மனம் இருக்கமுடியாது.

15. ஒருவனது முந்தைய செயல்களின் பலன்களின்றி, விதி, அதிருஷ்டம், விபத்து, மாற்றம் என்று எதுவும் கிடையாது.

16. ஒரு ஆசையின் பூர்த்தியே அனுபவம் ஆகும். தொடர்பு என்பது ஆசையை செலவழிப்பது அல்ல, அதை விரைவாக்குவதேயாகும்.

17. படைப்பு அனைத்தும் பகவானின் குடும்பமே.

## 90. ஒரு படை அதிகாரியின் அனுபவங்கள்

இந்தியப் படையின் ஒரு பெரிய அதிகாரி மிகவும் தேர்ச்சி பெற்ற யோகி ஆவார். தமது தியானத்திலும் மறைநூல் வாசிப்பதிலும் மிகவும் ஒழுங்காக இருந்தார். போர்க்களத்திலும் கூட அவர் தியானம் செய்வார். தமது தியானத்தின் பொழுது அவர் பெற்ற சுவையான அனுபவத்தை விவரிக்கிறார்.

"நான் தியானம் செய்ய அமர்ந்த சிறிது நேரத்தில் ஒரு அதிசயமான அனுபவத்தைப் பெற்றேன். நான் எப்பொழுதும் தியானம் செய்யும்பொழுது கால்களை மடக்கி அமர்ந்து உள்ளங்கைகளை மேற்புறமாக வைத்து, விரல்களை சின்முத்திரையில் வைப்பதுண்டு. சில நிமிட தியானத்திற்குப் பிறகு என் முழங்கை புரளும். உள்ளங்கை கீழ்நோக்கி அமையும். இதைவிட அதிசயம் என்னவெனில் ஒரு கை மேலெழுந்து சின்முத்திரையுடன் கூடிய விரல்கள் மார்புக்கு நேராக வரும்.

தியானத்தின்போது யோகி இறகைப் போல எடையற்ற தன்மையை உணர்கிறான் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். தியானத்தின்போது முதுகு நேராகிறது. முதுகெலும்பு வளையாமல் நேராகத் தொங்குகிறது. இது கனமின்மை உணர்வைத் தருகிறது. தியானம் தீவிரமாகையில் ஒருவனுக்கு சுவாசிக்கும் விருப்பம் கூட இல்லாதாகிறது. சுவாசம் தானாகவே லேசாகிறது. அதன் பின் நான் உடலளவில் மேலே எழும்புவது போல உணர்கிறேன். காற்று வெளியில் நான் தொங்குவதைப் போல உணர்கிறேன். தியானத்திற்கு நான் அரை சித்தாசன நிலையில் அமர்கிறேன். ஆழ்ந்த தியானத்திற்கு சில நிமிடங்களுக்குப் பிறகு குதியங்கால்கள் பிரிந்து, கால்கள் கீழே விழுவதைப் போல உணர்கிறேன்.

மூன்றாவது அனுபவம் இதோ : சில சமயங்களில் நாம் நினைப்பது நடக்கிறது. நான் இதைப் பலமுறை அனுபவித்திருக்கிறேன். நம் மனதில் எழும் எண்ணங்கள் பிறரைப் பலமாகப் பாதிக்கின்றன. இதற்கு என்னிடம் ஒரே ஒரு விளக்கம்தான் உண்டு. இந்த தருணத்தில் நாம் கடவுளுக்கு வெகு அருகில் உள்ளோம். பிறகு கடவுள் எண்ணம் நம் மனதில் எழுகிறது. கடவுளுக்கு அருகாமையில் இருப்பது 'அவர் மடியில் அமர்வதற்கான', 'அவரது தெய்வீக விருப்பத்தின் ஒரு பாகமாக இருப்பதற்கான' விருப்பத்தை அளிக்கிறது. பிறகு கடவுளின் விருப்பம் நிகழ்கிறது. நமது விருப்பமும் தானே பூர்த்தியாகிறது. இத் தருணத்தில் யோகி யாரையும் வசீகரிக்க விரும்புவதில்லை. தன் பிரார்த்தனையை கடவுள் கேட்க வேண்டும் என்று கூட அவன் விரும்புவதில்லை. அவன் விருப்பம் மட்டும் கொள்கிறான். அது இறைவனால் ஏற்கப்படுகிறது.

## சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| இயற்கை மருத்துவம் ... | 45—00 |
| இதோ! உங்கள் கேள்விக்குப் பதில்! ... | 40—00 |
| இந்த உண்மைகளைச் சிந்தியுங்கள் ... | 40—00 |
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் ... | 30—00 |
| தியான யோகம் ... | 30—00 |
| ஆன்மீகக் கதைகள் ... | 30—00 |
| மரணத்திற்குப் பின் மனிதன் போவது எங்கே! ... | 30...00 |
| ஞானோபதேசம் ... | 30—00 |
| இந்து தர்மம் ... | 30—00 |
| ஞான யோகம் ... | 20—00 |
| ஹிந்து விரதங்களும் விழாக்களும் ... | 20—00 |
| சிவானந்தர் வாழ்க்கை வரலாறு ... | 20—00 |
| யோக சாரம் ... | 20—00 |
| சிவானந்தரின் நீதிக்கதைகள் ... | 20—00 |
| பகவத் கீதை (ஸ்லோகமும் அர்த்தமும்) ... | 20—00 |
| அறுபத்து மூன்று நாயன்மார்கள் வரலாறு | 20—00 |
| சிவானந்தரின் சித்தி விளையாடல்கள் ... | 20—00 |
| குண்டலினி யோகம் ... | 20—00 |
| சிறுவர் சிறுமியர்க்கு தெய்வீக வாழ்க்கை | 20—00 |
| ஜபயோகம் ... | 20—00 |
| பிரம்மச்சரியத்தின் இரகசியம் ... | 20—00 |
| யோக வாசிஷ்டம் ... | 20—00 |
| முக்கியமான 20 ஆன்மீகப் போதனைகள் | 15—00 |
| 100 ஆண்டுகள் வாழ்வது எப்படி? ... | 15—00 |
| ஆன்மீக வாழ்க்கையில் புதிய தொடக்கம் | 15—00 |
| ஓம் தியானமும் மாண்டூக்கிய உபநிடதமும் ... | 15—00 |
| வைராக்கியம் பெறுவது எப்படி? ... | 15—00 |
| சாதன சதுஷ்டயம் ... | 15-00 |
| ஆரம்ப வேதாந்தம் ... | 10—00 |
| ஒளி சக்தி ஞானம் ... | 10—00 |
| அன்னை பராசக்தி ... | 10—00 |
| யோகப் பயிற்சி வழிகாட்டி ... | 10—00 |
| பகவத்கீதை (அர்த்தம் மட்டும்) ... | 10—00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 8—00 |